# சிவானந்தலஹரீ பாஷ்யம்

# ॥ शिवानन्दलहरी-भाष्यम् ॥



உரையாசிரியர்
“ அண்ணா ”



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4

# சிவானந்தலஹரீ பாஷ்யம்

# ॥ शिवानन्दलहरी-भाष्यम् ॥

உரையாசிரியர் :
“ அண்ணா ”



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4

# பொருளடக்கம்

| | | பக்கம் |
|---|---|---|
| குறிகளின் விளக்கம் | ... | iv |
| முகவுரை | ... | v–ix |
| குருபாதுகா வந்தனம் | ... | x |
| சிவானந்தலஹரீ மூலமும் உரையும் | ... | 1–146 |
| சுலோகங்களின் அகராதி | ... | 147–150 |

## குறிகளின் விளக்கம்

| | |
|---|---|
| உப. | உபநிஷத்து |
| ஒ. | ஒப்பிடுக |
| கீ. | ஸ்ரீமத் பகவத்கீதை |
| சங். | ஆதிசங்கராசாரியார் |
| சு. | சுலோகம் |
| பா. பே. | பாடபேதம் |
| பாக. | ஸ்ரீமத் பாகவதம் |
| ரா. கி. | ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மொழிகள் |

## உச்சரிப்பு

(கொட்டை எழுத்துக்கள்)

| | | |
|---|---|---|
| க ग | கங்கை என்பதில் போல | |
| ட ड | குடம் | ,, |
| த द | பாதம் | ,, |
| ப ब | இன்பம் | ,, |
| ரு ऋ | எருது | ,, |

ऽ अ 'அ' தொக்கி நிற்கும்

# முகவுரை

## I

ஆதிசங்கரர் அருளிய 'சிவானந்த லஹரீ' சிவ ஸ்தோத்திரங்களுள் தலைசிறந்தது. அது உவமை முதலிய எல்லா அலங்காரங்களுடன் கூடியதாயும், எளியதும் இனியதுமான சொற்களில் அமைந்ததாயும், ஞானிகளால் போற்றப்படுவதாயும், பலவித ரஸங்களும் சீரிய குணங்களும் நிறைந்ததாயும், காவிய லக்ஷணங்கள் பொருந்தியதாயும், கவர்ச்சியான சொல்லணிகளையுடைய தாயும், பிரகாசிக்கும் அர்த்தத் தொடர்ச்சி உடையதாயும், எல்லா நலன்களையும் அளிக்கவல்லதாயும் விளங்கு கின்றது (ஒ. சுலோகம் 98).

பக்தி சாஸ்திரத்திற்கு லக்ஷணக் கிரந்தமாக இது அமைகின்றது. நாரத பக்திஸூத்திரம், குணத்தைப் போற்றுவது, ரூபத்தை தியானிப்பது, பூஜை செய்வது, இடைவிடாது நினைப்பது, சேவை செய்வது, நட்புக் கொள்வது , காதலால் கசிவது, குழந்தையைப் போல் நேசிப்பது, தன்னையே அர்ப்பணம் செய்வது, தன்மய மாகிவிடுவது, பிரிவாற்றுமை என, ஒன்றேயாகிய பக்தி பதினொரு வடிவாய்ப் பரிணமிக்கும் என்று கூறுகிறது. இந்நிலைகள் எல்லாம் சிவானந்தலஹரியில் வர்ணிக்கப் படுகின்றன.

'காந்தத்தை ஊசியும், பிரியநாயகனைப் பதிவிரதா ஸ்திரீயின் மனமும், மரத்தை ஒரு கொடியும், ஸமுத் திரத்தை நதியும் எவ்வாறு நாடுகின்றனவோ, அவ்வாறு மனதின் நாட்டம் இயற்கையாகவே இறைவனிடம் இருந்

தால் அதுதான் பக்தி எனப்படும் (சு. 61). இந்த பக்தி முக்குணங்களைக் கடந்தது, விநாடிதோறும் வளர்வது, இடைவிடாத தொடர்புடையது, அனுபவத்தாலேயே உணரப்படுவது.

இப்படிப்பட்ட பக்தியால் குறைவெல்லாம் நிறைவாகும். 'கண்ணப்பரின் மிதியடி சிவனுக்குப் பரிசுத்தமான கூர்ச்சம் போலும், வாயிற் கொணர்ந்து கொப்பளித்த நீர் அபிஷேகமாகவும், ருசிபார்த்த இறைச்சி நைவேத்தியமாகவும் ஆயின. காட்டில் வசித்த வேடன் பக்தசிரேஷ்டனாகிறான். பக்தி எதைத் தான் செய்யாது?' என்கிறார் சங்கராசாரியர்.

'நீ என்ன செய்கிறாய், எதை அர்ப்பணம் செய்கிறாய்' என்பது கேள்வியன்று. எந்த பாவனையுடன் செய்கிறாய் என்பதைத்தான் இறைவன் கவனிக்கிறான். அவன் வேண்டுவது உளங்கனிந்த அன்பேயன்றி நாம் கொடுக்கும் உபஹாரமும் காணிக்கையுமல்ல. சிவன் கையில் பொன் மலையும், அவனுக்கு அடிமையாகக் குபேரனும், அவனிருப்பிடத்தில் கற்பகமும், காமதேனுவும் சிந்தாமணியும், அவனுடைய சிரசில் புஷ்பம் போல் சந்திரனும், அவன் திருவடிகளில் எல்லா மங்களங்களும் இருக்கையில் அவனிடமில்லாத எந்தப் பொருளை நாம் அவனுக்கு அளிக்க இயலும்? (சு. 27.) மனதாகிற குரங்கை பக்தியெனும் கயிற்றால் கட்டிப் பிச்சாண்டி வேடத்தில் வரும் அவனிடம் கொடுப்போம் (சு. 20).

விஷயப்பற்றினால் அறிவு கெட்ட மனதிற்குப் பல உபமானங்கள் கூறப்படுகின்றன: திருடன் (22), கொடிய விலங்குகள் வாழுங் காடு (42), துர்வாஸனை நிறைந்த பெட்டி (74), கட்டாந்தரை (80), மதம் பிடித்த யானை (97). இறைவனிடத்தில் அன்பு செய்ய முற்பட்டால் பாவியும் பரமனாகலாம். அறத்தினின்று நீங்கியவரும் அன்பு வழியில் கவரப்பட்டால் ஈடேறலாம். அறத்

திற்குமட்டுந் துணை செய்வதன்று அன்பு, மறத்திற்கும் அதுதான் துணை.

> " அறத்திற்கே அன்பு சார்பு என்ப அறியார்
> மறத்திற்கும் அஃதே துணை." (குறள்)

அன்பினால் தீமை நீங்கித் தூய்மை எய்திய மனதிற்கும் பலப்பல உவமைகள் இந்நூலில் காணப்படுகின்றன :

இறைவன் தங்குதற்குரிய கூடாரம் (21), புண்யாஹவாசனக் கலசம் (36), நிர்மலமான ஆகாயம் (38), கைவல்யநாதருடைய ராஜதானி (39), பக்தி வயல் (40), பஞ்சமுக ஈசுவரன் வாழும் குகை (44), திருவடிக் கூட்டில் உறையும் பக்ஷி (45), திருவடி மாளிகையில் விளையாடும் ஹம்ஸம் (46), நல்ல பூவும் பழமும் நிறைந்த தோட்டம் (47), சாதக பக்ஷி (59), இரத்தினப் பாதுகை (64), உயர்ந்த ஜாதிக் குதிரை (75), பதிவிரதை (77), சிறந்த கன்னிகை (84).

பக்தி ஒரு ஸாதனம் என்றும் அதனால் அடையப்படுவது முக்தி என்றுங் கூறாமல் பக்தியே முக்தி என்று சிவானந்த லஹரீ கூறுகிறது. 'உன்னுடைய சேவையோ, நமஸ்காரமோ, ஸ்தோத்திரமோ, பூஜையோ, தியானமோ, கதையைக் கேட்பதோ, தரிசிப்பதோ போதாதா? இதுவன்றி முக்தி என்பதுதான் என்ன ?' (33). 'ஸாரூப்யம் என்னும் முக்தி நிலை உன்னுடைய பூஜையிலும், ஸாமீப்யம் பஜனை செய்வதிலும், ஸாலோக்யம் பக்தர்களுடன் கூடியிருப்பதிலும், ஸாயுஜ்யம் தியானத்திலும் இங்கேயே கிட்டி விடுகிறது' (28). 'கொஞ்ச காலம் அர்ச்சனை, கொஞ்ச காலம் வந்தனம், கொஞ்சம் தியானம், ஸமாதி, கொஞ்சம் சிவ கதைகளைக் கேட்பது, கொஞ்சம் தரிசனம், கொஞ்சம் துதி இப்படி மனதைச் சிவனிடம் அர்ப்பணம் செய்து எவன் சந்தோஷமாக வாழ்கிறானோ அவன் (ஜீவன் முக்தன்) இங்கு உடல் வாழும்போதே முக்தி எய்தியவன்.' (81).

கடவுளுணர்வு பெற்றவர்கள் பாடிய பாட்டை நாம் பாடும்போது அவர்கள் நின்ற நிலைக்கு நம்மை அது தூக்கி விடுகிறது.

" காரணன் சொரூபன் கழல் தேடுவர்
  கண்ணிலா தவரந்தோ
பூரணன் கழல் புகழ்பவர் மொழியினுட்
  பொலிந்திருந்தது தானே "

சிவானந்தலஹரியைப் படிக்குந்தோறும் இறைவனுடைய திருவடிகளைத் தொட்ட இன்பந்தோன்றும். 'கண்டேனவர் திருப்பாதம்: கண்டறியாதன கண்டேன்' என்று நாம் கூறலாம்.

## II

நிர்க்குணப் பிரம்மத்தையும் அத்வைத ஞானத்தையும் ஸித்தாந்தம் செய்த ஆதிசங்கரர் இந்நூலை இயற்றியிருக்க மாட்டார், சங்கர பரம்பரையில் வந்த வேறு யாரோ ஒருவர் இயற்றி அவர்மேல் ஏற்றியிருக்கலாம் என்பது சிலருடைய கருத்து. ஆனால் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தாரென்பதும், அம்பிகை, சிவன், விஷ்ணு, கணபதி, குமரன் முதலிய வடிவங்களில் தெய்வத்தை வழிபடுவதற்குப் பல ஸ்தோத்திரங்களைச் செய்துள்ளாரென்பதும் மறுக்க முடியாத உண்மையாகும். சங்கர மடங்களில் வழிவழியே வந்த பீடாதிபதிகளும் இம்முறைகளையும் சிவானந்த லஹரீ ஸௌந்தர்ய லஹரீ முதலிய ஸ்தோத்திரங்களையும் ஐயப்பாட்டுக்கிடமில்லாமல் ஆதிசங்கரருடையவைதான் என்று போற்றி வருகிறார்கள். சிவானந்தலஹரிக்கும் அத்வைத ஸித்தாந்தத்திற்கும் யாதொரு முரண்பாடுமில்லை என்பது அனுபவ சித்தம்.

## III

ஸம்ஸ்கிருதத்தில் அதிகப் பயிற்சி இல்லாதவர்களுக்கும் சிவானந்தலஹரியின் சீரிய கருத்துகளைத் தமிழில் விளக்குவதற்காக இந்நூல் வெளியிடப்படுகிறது. மூலம் முதலில் நாகர எழுத்திலும் அதனடியில் தமிழ் எழுத்திலும் அச்சிடப்பட்டிருப்பதுடன், பதவுரையும் வியாக்கியானக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒப்பிட்டுப் படிப்பதற்கு உபயோகமாயிருக்கும் வகையில் உபநிஷதங்கள், பகவத் கீதை, நாரத பக்தி ஸூத்ரம், தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருக்குறள், தாயுமானவர் பாடல், ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மொழிகள் முதலியவற்றினின்று மேற்கோள்களும், உவமைகளும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

அச்சிடும்போது, பிழைதிருத்துவதில் உதவிய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும், அழகுபட அச்சிட்டுத்தந்த கபீர் அச்சுக் கூடத்தாருக்கும், இந்நூலைப் பயன்படுத்தி என் முயற்சியை ஸார்த்தகமாக்கும் அன்பர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

ஸ்ரீராம கிருஷ்ண மாணவரில்லம்,<br>மயிலாப்பூர்<br>குரோதி௵ தைமீ 10௳<br>விவேகானந்த ஜயந்தி<br>23–1–1965

**உரையாசிரியர்**

## ॥ श्रीगुरुपादुकावन्दनम् ॥

ऐंकार-ह्रींकार-रहस्ययुक्त-
श्रींकारगूढार्थ-महाविभूत्या ।
ओंकारमर्म-प्रतिपादिनीभ्यां
नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥

## ஸ்ரீ. குருபாதுகாவந்தனம்

*ஐங்கார-ஹ்ரீங்கார-ரஹஸ்யயுக்த-*
*ஸ்ரீங்கார கூடார்த்த-மஹாவிபூத்யா ।*
*ஓங்கார-மர்ம-ப்ரதிபாதினீப்யாம்*
*நமோ நமः ஸ்ரீ குருபாதுகாப்யாம் ॥*

ஐங்காரம் ஹ்ரீங்காரம் ஆகியவற்றின் இரகசியத்துடன் கூடிய ஸ்ரீங்காரத்தின் உட்கருத்தாகிய சிறந்த செல்வத்தால் ஓங்காரத்தின் மர்மத்தை விளங்கவைக்கும் ஸ்ரீ குருநாதரின் திருவடிகளுக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

॥ श्रीः ॥

॥ शिवाभ्यान्नमः ॥

# ॥ शिवानन्द-लहरी ॥

कलाभ्यां चूडालंकृत-शशिकलाभ्यां निजतपः-
फलाभ्यां भक्तेषु प्रकटित-फलाभ्यां भवतु मे ।
शिवाभ्या-मस्तोक-त्रिभुवन-शिवाभ्यां हृदि पुन-
र्भवाभ्या-मानन्द-स्फुर-दनुभवाभ्यां नतिरियम् ॥ १ ॥

ஶ்ரீ:

॥ சிவாப்யாம் நம: ॥

## ॥ சிவானந்த லஹரீ ॥

கலாப்யாம் சூடாலங்க்ருத-சசிகலாப்யாம் நிஜதப:-
பலாப்யாம் பக்தேஷு ப்ரகடித-பலாப்யாம் பவது மே ।
சிவாப்யா-மஸ்தோக-த்ரிபுவன-சிவாப்யாம் ஹ்ருதி புனர்-
பவாப்யா-மானந்த-ஸ்புர-தனுபவாப்யாம் நதிரியம் ॥ 1 ॥

ஶ்ரீ:

### 1. பரமசிவனுக்கும் பராசக்திக்கும் நமஸ்காரம்

(கலாப்யாம்) கலை வடிவாகியவர்களும் (சூடாலங்க்ருத-சசிகலாப்யாம்) சந்திரக்கலையைத் தலையில் அணிந்தவர்களும் (நிஜ-தப: பலாப்யாம்) ஒருவருக்கொருவர் தவத்தின் பயன் வடிவாகியவர்களும் (பக்தேஷு) அடியார்களிடத்தில் (ப்ரகடித-பலாப்யாம்) அருள் பயனை விளங்கச் செய்பவர்களும் (அஸ்தோக-த்ரிபுவன-சிவாப்யாம்) மூவுலகிற்கும் குறைவற்ற மங்களங்களை அருள்பவர்களும்

(ஹ்ருதி) இருதயத்தில் (புனர்ப்பவாப்யாம்) நினைக்குந் தோறும் புதிது புதிதாய்த் தோன்றுபவர்களும் (ஆனந்த-ஸ்புர-தனுபவாப்யாம்) ஆத்மானுபவத்தால் ஆனந்தக் களிப்புடையவர்களும் ஆகிய (சிவாப்யாம்) சிவ சக்தி ஐக்கிய வடிவினர்க்கு (மே) என்னுடைய (இயம்) இந்த (நதி:) நமஸ்காரம் (பவது) உரித்தாகட்டும்.

மங்களாசரணமாக அமையும் இந்த முதல் சுலோகத்தின் முதலெழுத்தாகிய 'க', தேவியின் பஞ்சதசாக்ஷரீமந்திரத்தின் முதலெழுத்தாகையால் பராசக்தியின் தியானமும் அதனுல் பரமமங்களமும் சூசிப்பிக்கப்பட்டதாகிறது.

ஒ. ககாரரூபா கல்யாணீ கல்யாணகுண-சாலினீ

—லலிதாத்ரிசதீ.

நிஜதப: பலாப்யாம்—பரஸ்பர-தப:-பலபூதாப்யாம் இத்யர்த்த: । பார்வதியின் தவப்பயன் பரமசிவன்; பரமசிவனுடைய தவப்பயன் பார்வதி.

அஸ்தோகம்—அநல்பம். ஒ. 'யோ வை பூமா தத் ஸுகம், நால்பே ஸுகமஸ்தி ।'

—சா. உப.

புனர்ப்பவாப்யாம்—(பௌந: புன்யேன ப்ரதித்யானம் ஜாயமானுப்யாம் । யதா யதா த்யாயதி ததா ததா நவ நவோன்மேஷிணேன உத்பத்யத இதி ।) மீண்டும் மீண்டும், நினைக்குந்தோறும், எவ்வெப்போது நினைத்தாலும் அவ்வப்போது புதிது புதிதான மலர்ச்சியுடன் தோன்றுபவர்கள்.

ஒ. (ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி) உடனுக்குடன் தோன்றுபவரைப் போற்றுகிறேன்.

—யஜுர்வேதம்.

சிவாப்யாம்—ஒ. நம: சிவாப்யாம் நவயௌவனுப்யாம் பரஸ்பராச்லிஷ்ட-வபுர்-தராப்யாம் । நகேந்த்ரகன்யா-வ்ருஷகேதனுப்யாம் நமோ நம: சங்கரபார்வதீப்யாம் ॥

ஒ. ப்ரபஞ்ச-ஸ்ருஷ்ட்யுன்முக-லாஸ்யகாயை ஸமஸ்த-ஸம்ஹாரக-தாண்டவாய । ஜகஜ்ஜனன்யை ஜகதேகபித்ரே நம: சிவாயை ச நம: சிவாய ॥

ஒ. (வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ) சொல்லையும் பொருளையும் போல் இணைபிரியாதவர்கள்—காளிதாஸன். அர்த்தநாரீச்வர வடிவத்தின் கருத்து சிவனையும் சக்தியையும் பிரிக்கமுடியாதென்பதாம். இருவருக்கும் ஆபரணங்களும் அலங்காரங்களும் பொது. (சசி-கலாப்யாம்) சந்திரகலை இருவரையும் ஒன்றுகச் சேர்த்து அலங்கரிக்கிறது.

## 2. சிவானந்த வெள்ளம்

गलन्ती शंभो त्वच्चरित-सरितः किल्बिषरजो
दलन्ती धीकुल्यासरणिषु पतन्ती विजयताम् ।
दिशन्ती संसारभ्रमण-परितापोपशमनं
वसन्ती मच्चेतो-हृदभुवि शिवानन्दलहरी ॥ २ ॥

கலந்தீ சம்போ த்வச்சரித-ஸரிதஃ கில்பிஷரஜோ
தலந்தீ தீகுல்யாஸரணிஷு பதந்தீ விஜயதாம் ।
திசந்தீ ஸம்ஸார-ப்ரமண-பரிதாபோபசமனம்
வஸந்தீ மச்சேதோ ஹ்ரதபுவி சிவானந்த-லஹரீ ॥ 2 ॥

(சம்போ) சம்புவே! (த்வத்-சரித-ஸரிதஃ) உமது சரித்திரமாகிய நதியிலிருந்து (கலந்தீ) பெருகுவதாயும், (கில்பிஷரஜஃ) பாவமாகிற புழுதியை (தலந்தீ) போக்குவதாயும், (தீ-குல்யா-ஸரணிஷு) புத்தியெனும் வாய்க்கால் வழிகளில் (பதந்தீ) பாய்ந்து செல்வதாயும் (ஸம்ஸார-ப்ரமண-) பிறவிச் சுழலில்-உண்டாகும் (பரிதாப-உபசமனம்) பெருந்துன்பத்திற்கு சாந்தியை (திசந்தீ) அளிப்பதாயும் (மத் சேதஃ) எனது சித்தமாகிய (ஹ்ரத புவி) மடுப்பிரதேசத்தில் (வஸந்தீ) வந்து தேங்குவதாயும் உள்ள (சிவானந்த-லஹரீ) சிவானந்த வெள்ளம் (விஜயதாம்) வெற்றியுடன் விளங்கட்டும்.

சிவானந்த லஹரீ—இச்சொல் நூலுக்குப் பெயரைத் தருகிறது. சிவானந்த வெள்ளம் பக்தனுடைய இருதயமாகிய

மடுவில் தங்கி, அதினின்று பெருகி புத்தியெனும் கால்வாய் வழியாகப் பாய்ந்து உலகின் துன்பத்தைப் போக்கி இன்பம் பயப்பதாக ஆகிறது.

ஒ. காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்
அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ
இன்புற் றிடநாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேரவாருஞ் சகத்தீரே. —தாயுமானவர்.

ஒ. ஓராம லேயொருகால் உன்னுமல் உள்ளொளியைப்
பாராமல் உள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத்திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான். —தாயுமானவர்.

இந்த ஆனந்த வெள்ளத்தின் சிறு சிறு திவலைகள்தான் உலகில் உள்ள விஷயானந்தங்களனைத்தும்..

ஒ. 'ஏதஸ்யைவானந்தஸ்யான்யானி பூதானி
மாத்ரா-முபஜீவந்தி' —ப்ரு. உப. 4.3.32.

## 3. சிவ வடிவத்தியானம்

त्रयीवेद्यं हृद्यं त्रिपुरहरमाद्यं त्रिनयनं
जटा-भारोदारं चलदुरगहारं मृगधरम् ।
महादेवं देवं मयि सदयभावं पशुपतिं
चिदालंबं सांबं शिवमतिविडंबं हृदि भजे ॥ ३ ॥

த்ரயீவேத்யம் ஹ்ருத்யம் த்ரிபுரஹர-மாத்யம் த்ரிநயனம்
ஜடாபாரோதாரம் சலதுரகஹாரம் ம்ருகதரம் ।
மஹாதேவம் தேவம் மயி ஸதய-பாவம் பசுபதிம்
சிதாலம்பம் ஸாம்பம் சிவமதிவிடம்பம் ஹ்ருதி பஜே ॥

3. சிதானந்தம் ஸாம்பம் —பா. பே.

(த்ரயீ-வேத்யம்) மூன்று வேதங்களால் அறியத்தக்க வரும் (ஹ்ருத்யம்) மனதிற்கினியவரும் (த்ரிபுர-ஹரம்) முப்புரங்களை யழிப்பவரும் (ஆத்யம்) அனைத்திற்கும் முதல்வரும் (த்ரிநயனம்) மூன்று கண்களையுடையவரும் (ஜடா-பார-உதாரம்) சடைகளைத் தாங்குவதால் கம்பீர மான தோற்றமுடையவரும் (சலத்-) அசைகின்ற (உரக-ஹாரம்) பாம்பை மாலையாக உடையவரும் (ம்ருகதரம்) மானைக்கையிலேந்தியவரும் (மஹாதேவம்) தேவர்களிற் சிறந்தவரும் (தேவம்) ஸ்வயம் பிரகாசமானவரும் (மயி) என்னிடத்தில் (ஸ-தய-பாவம்) தயையுடன் கூடிய நோக்கமுடையவரும் (பசுபதிம்) ஜீவர்களுக்கு நாயகரும் (சித்-ஆலம்பம்) அறிவிற்கு உறைவிடமும் (ஸாம்பம்) அம்பிகையுடன் கூடியவரும் (அதிவிடம்பம்) நடிப்புத் திறமை மிகுந்தவரும் ஆகிய (சிவம்) பரமசிவனை (ஹ்ருதி) இருதயத்தில் (பஜே) தியானம் செய் கின்றேன்.

த்ரயீவேத்யம்—ரிக்-யஜுஸ்-ஸாமம் மூன்றும் சேர்ந்து த்ரயீ. (யஸ்தந்ந வேத । கிம் ருசா கரிஷ்யதி ।) எவன் வேத மந்திரங்களால் அவரை யறியவில்லையோ அவனுக்கு அம் மந்திரங்களால் என்ன பயன்?

த்ரிபுரஹரம் — (ஸ்தூலாதி - சரீரத்ரய - ஹரம்) ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் ஆகிய மூன்று தேகங்களையும் அழித்து விதேஹமுக்தியை அளிப்பவரை.

ஒ. வளைந்தது வில்லு வளைந்தது பூசல்,
உளைந்தன முப்புரமுந்தீபற ஒருங்குடன்
வெந்தவாறுந்தீபற —மாணிக்கவாசகர்.

புராணக் கதை :—தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன் மாலி என்ற அசுரர்கள் மயனால் நிர்மாணம் செய்து கொடுக்கப் பட்ட மூன்று அதிசயமான பட்டணங்களில் வாழ்ந்து வந்தனர். அவை இரும்பாலும் வெள்ளியாலும் பொன்னாலும் ஆக்கப்பட்டு ஆகாயத்தில் பறந்து செல்லக்கூடியவையாக இருந்தன. மூன்றும் ஆயிரம் வருஷத்துக் கொருமுறை ஒன்று சேரும்.

அப்போது ஒரே பாணத்தால் அடித்தால்தான் முப்புரங்களை ஜயிக்கலாம். அசுரர்கள் தனித்தனியாகப் பறந்து சென்று பல ஊர்களின்மேல் இறங்கி அவற்றைப் பாழாக்கிவந்தனர். தேவர்கள் பரமசிவனிடம் முறையிட்டனர். பூமியைத் தேராக வும் சூரியசந்திரர்களைச் சக்கரமாகவும், நாலுவேதங்களைக் குதிரைகளாகவும் பிரம்மாவை ஸாரதியாகவும் மேருமலையை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை அம்பா கவும், கொண்டு பரமசிவன் போருக்குச் சென்றார். தேர் புதைந்தபோது விஷ்ணு விருஷப உருவங்கொண்டு அதைக் கொம்பால் தூக்கினார். சிவன் குதிரை மேல் ஒரு காலும் விருஷபத்தின் மேல் ஒரு காலுமாக நின்று முப்புரத்தை நோக்கினார். அப்போது முப்புரமும் ஒன்றாய்ச் சேரவே சிரித்து ஒரு பாணத்தை விடுத்து அவற்றை எரித்தார்.

ஒ. க்ஷோணீ யஸ்ய ரதோ ரதாங்கயுகலம்
சந்த்ரார்க்க-பிம்பத்வயம்
கோதண்ட: கனகாசலோ ஹரி-ரபூத்-
பாணோ விதி: ஸாரதி: ।
தூணீரோ ஜலதிர்-ஹயா:ச்ருதிசயோ
மௌர்வீ புஜங்காதிப:
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேன
ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி ॥

ம்ருகதரம்—கையிலேந்திய மான் துள்ளும் மாயா மனத்திற்கடையாளம்.

ஒ. 'கோணறவோர் மான் காட்டி மானையீர்க்கும்'.

—தாயுமானவர்.

பசுபதிம்—'ப்ரஹ்மாதி லோகானும் பதிம் பாலகம் பாச விமோசகம்.'

ஒ. பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன்றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாசம் அறுத்தாற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே.

—திருமந்திரம் 2406.

ஒ. அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மலகாரிபம்
அப்புரம் எய்தமை யாரறிவாரே. —திருமந்திரம் 343.

ஹ்ருதி பஜே—(தீ-ப்ரேரகத்வேன த்யாயாமி ।) சித்தத்தி லிருந்து புத்தி சக்தியைத் தூண்டும் பரஞ்சோதியாக தியானிக் கின்றேன். ஒ. 'சித்தமறியாதபடி சித்தத்தினின்றிலகு திவ்ய தேஜோமயத்தை.' —தாயுமானவர்.

## 4. ஏக பக்தி

सहस्रं वर्तन्ते जगति विबुधाः क्षुद्रफलदा
न मन्ये स्वप्ने वा तदनुसरणं तत्कृतफलम् ।
हरि-ब्रह्मादीनामपि निकटभाजा-मसुलभं
चिरं याचे शंभो शिव तव पदांभोज-भजनम् ॥ ४ ॥

ஸஹஸ்ரம் வர்த்தந்தே ஜகதி விபுதா꞉ க்ஷுத்ர-பலதா
ந மன்யே ஸ்வப்னே வா ததனுஸரணம் தத்க்ருதபலம்।
ஹரி-ப்ரஹ்மாதீனமபி நிகடபாஜா-மஸுலபம்
சிரம் யாசே சம்போ சிவ தவ பதாம்போஜ-பஜனம் ॥ 4 ॥

(ஜகதி) உலகில் (க்ஷுத்ரபலதா꞉) அல்பப் பயனைக் கொடுக்கின்ற (விபுதா꞉) தேவர்கள் (ஸஹஸ்ரம்) ஆயிரக் கணக்காக (வர்த்தந்தே) இருக்கிறார்கள். (ஸ்வப்னே வா) கனவிலுங் கூட (தத் அனுஸரணம்) அவர்களை வழிபடு தலையும் (தத்-க்ருத-பலம்) அதனால் ஏற்படும் பயனையும் (ந மன்யே) நான் கருதமாட்டேன். (சம்போ) சம்புவே! (ஹரி-ப்ரஹ்மாதீனம் அபி) விஷ்ணு பிரம்மா முதலிய வர்களுக்குங் கூட (நிகட-பாஜாம்) அருகாமையிலிருந்த போதிலும் (அஸுலபம்) அடைதற்கரிதான (தவ) உம் முடைய (பத-அம்போஜ-பஜனம்) திருவடித்தாமரையைத் தொழுவதையே (சிரம்) என்றும் (யாசே) வேண்டுவேன்.

ஒ. ஐய னேயுனை யன்றி யொருதெய்வங்
கையி னுல்தொழ வுங்கரு தேன்கண்டாய்
பொய்ய னுகிலும் பொய்யுரை யேன்சுத்த
மெய்ய னுமுனக் கேவெளி யாகுமே. —தாயுமானவர்.

தொழுவனே பிறரைத் துதிப்பனே எனக்கோர்
துணையென நினைவனே சொல்லாய். —திருவாசகம்

ஒ. (தவாம்ருதஸ்யந்தினி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமன்யதிச்சதி । ஸ்திதோரவிந்தே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே) அமுதத்தைப் பெருக்கும் உனது திருவடித் தாமரைகளில் புகுந்த ஆத்மா எங்ஙனம் வேறொன்றை விரும்பும்? மகரந்தம் நிறைந்த தாமரைப்பூவில் உறையும் தேனீ முள்ளிப்பூவைக் கண்ணெடுத்தும் பாரா தன்றோ? —ஸ்தோத்ர ரத்னம். 27.

சிவனொடொக்குந் தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப்பார் இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே. —திருமந்திரம்.

## 5. கருணையை வேண்டுதல்

स्मृतौ शास्त्रे वैद्ये शकुन-कविता-गान-फणितौ
पुराणे मन्त्रे वा स्तुति-नटन-हास्येष्वचतुरः ।
कथं राज्ञां प्रीतिर्भवति मयि कोऽहं पशुपते
पशुं मां सर्वज्ञ प्रथित कृपया पालय विभो ॥ ५ ॥

ஸ்ம்ருதௌ சாஸ்த்ரே வைத்யே சகுன-கவிதா-கான-பணிதௌ, புராணே மந்த்ரே வா ஸ்துதி-நடன-ஹாஸ்யேஷ்-வசதுரः । கதம் ராஜ்ஞாம் ப்ரீதிர்-பவதி மயி கோऽஹம் பசுபதே, பசும் மாம் ஸர்வஜ்ஞ ப்ரதித க்ருபயா பாலய விபோ ॥ 5 ॥

(ஸ்ம்ருதௌ) மனுஸ்மிருதி முதலிய தர்ம நூல்களி லும் (சாஸ்த்ரே) சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்

தம், சந்தஸ், ஜோதிஷம் முதலிய சாஸ்திரங்களிலும் (வைத்யே) வைத்திய நூல்களிலும் (சகுன-கவிதா-கான-பணிதெள) சகுனம், கவித்துவம், சங்கீதம் முதலிய வற்றால் பிறரைக் களிக்கச் செய்வதிலும் (புராணே) புராணப் பிரவசனம் செய்வதிலும் (மந்த்ரே வா) மந்திரப் பிரயோகங்களிலும் (ஸ்துதி-நடன-ஹாஸ்யேஷு) புகழ்தல், நடித்தல், விகடம் பேசுதல் ஆகியவற்றிலும் (அசதுரஃ) நான் திறமையற்றவன். (ராஜ்ஞாம்) அரசர்களுக்கு (ப்ரீதிஃ) அன்பு (மயி) என்னிடத்தில் (கதம்) எவ்வாறு (பவதி) உண்டாகும்? (பசுபதே) உயிர்களின் தலைவரே! (ஸர்வஞ்ஞ) எல்லாமறிந்தவரே! (ப்ரதித) புகழ்பெற்றவரே! (விபோ) எங்கும் நிறைந்தவரே! (கஃ அஹம்) நான் எதில் சேர்ந்தவன்? (பசும்) ஒன்றுமறியாத பிராணியாகிய (மாம்) என்னை (க்ருபயா) கருணையால் (பாலய) காப்பாற்றியருளும்.

ஒ. தானமுந் தவமும்யோகத் தன்மையும் உணரா வென்பால்
ஞானமுந் தெவிட்டா இன்ப நன்மையும் நல்குவாயோ
பானலங் கவர்ந்த தீஞ்சொற் பச்சிளங்கிள்ளை காண
வானவர் இறைஞ்ச மன்றுள் வயங்கிய நடத்தினனே.

—தாயுமானவர்

## 6. தர்க்கம் பயனற்றது

घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्नि-रचलः
पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम् ।
वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा
पदांभोजं शंभो-र्भज परमसौख्यं व्रज सुधीः ॥ ६ ॥

கடோ வா ம்ருத்-பிண்டோப்யணுரபி ச தூமோऽக்னி-ரசலஃ, படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோரசமனம் । வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா தர்க்கவசஸா, பதாம்போஜம் சம்போர்-பஜ பரம ஸௌக்யம் வ்ரஜஸுதீஃ॥

(கட: வா) குடம் என்றும் (ம்ருத் பிண்ட: அபி) மண் கட்டி என்றும் (அணு: அபி ச) அணுவென்றும் (தூம:) புகை என்றும் (அக்னி:) நெருப்பென்றும் (அசல:) மலை என்றும் (பட: வா) துணி என்றும் (தந்து: வா) நூலென்றும் (வ்ருதா) வீணாக (தர்க்க-வசஸா) தர்க்க பரிபாஷைச் சொற்களால் (கண்டக்ஷோபம்) தொண்டையின் வரட்சியை (வஹஸி) ஏற்றுக்கொள்ளுகிறாய். (கோர சமனம்) கொடிய யமனை (பரிஹரதி கிம்) இது விலகச் செய்யுமா ? (சம்போ:) பரமசிவனுடைய (பதாம்போஜம்) திருவடித் தாமரையை (பஜே) தியானம் செய். (ஸுதீ:) நல்ல புத்தி படைத்தவனே ! (பரம-ஸௌக்யம் வ்ரஜ) பேரின்பத்தை நாடு.

**கடோ வா ம்ருத்பிண்டோபி**-குடமும் மண்ணும் வேறன்று எனும் நியாயம்.

ஒ. (யதா ஸோம்ய ஏகேன ம்ருத்பிண்டேன ஸர்வம் ம்ருன்-மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்) சித்தம் அழகியோனே ! எங்ஙனம் ஒரு மண் கட்டியால் எல்லா மண்ணுருவமும் அறிந்ததாகுமோ அங்ஙனம். —சா. உப.

**அணுரபி**—எல்லாம் அணுக்களாலானது என்ற நியாயம்.

**தூமோऽக்னி:**—புகையுள்ள இடத்தில் நெருப்புண்டு என்று ஊகிக்கும் நியாயம்.

**படோ வா தந்துர்வா**—சேலையும் நூலும் ஒன்று எனும் நியாயம். இவையெல்லாம் தர்க்கம் நியாயம் முதலிய சாஸ்திரங்களில் வாதம் செய்பவர்கள் அடிக்கடி உபயோகிக்கும் உபமானங்கள்.

இந்த மாதிரி ஒவ்வொருவரும் தத்தம் கொள்கையை நிலை நிறுத்துவதற்காகப் பல மேற்கோள்களுடனும் உதாரணங்களுடனும் செய்யும் வாதங்கள் இறைவனுடைய அருளுக்கு ஒருவனை உரியவனாக்கிவிடமாட்டா.

ஒ. (நைஷா தர்க்கேண மதிராபனேயா) இந்த ஆத்ம ஞானத்தைப் பற்றிய நிச்சயபுத்தி தர்க்கத்தால் அடைய ஒண்ணாதது. —கட. உப.

ஒ. கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றுமறி வில்லாத என்
கர்மத்தையென் சொல்கேன் மதியையென் சொல்லுகேன்
கைவல்ய ஞானநீதி
நல்லோருரைக்கிலோ கர்ம முக்கியமென்று
நாட்டுவேன், கர்மமொருவன்
நாட்டிலோ பழைய ஞானமுக்கியமென்று
நவிலுவேன், வடமொழியிலே
வல்லானொருத்தன்வர வுந்த்ராவிடத்திலே
வந்ததா விவகரிப்பேன்,
வல்ல தமிழறிஞர் வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்,
வெல்லாமலெவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ,
வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. —தாயுமானவர்

ஒ. (ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே நஹி நஹி ரக்ஷதி டுக்ருங்கரணே) முடியுங்காலம் வந்தபோது 'டுக்ருங்கரணே' என்றது போன்ற இலக்கணப் பாடம் காப்பாற்று. —சங்.

ஒ. கற்றதுங் கேட்டதுந்தானே ஏதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூட அன்றோ.
—தாயுமானவர்

## 7. செயலெல்லாம் சிவனுக்கே

मनस्ते पादाब्जे निवसतु वचःस्तोत्र-फणितौ
करौचाभ्यर्चायां श्रुतिरपि कथाकर्णन-विधौ ।
तव ध्याने बुद्धि-र्नयन-युगलं मूर्ति-विभवे
परग्रन्थान् कैर्वा परमशिव जाने परमतः ॥ ७ ॥

மனஸ்தே பாதாப்ஜே நிவஸது வசஃஸ்தோத்ர-பணிதௌ, கரௌ சாப்யர்ச்சாயாம் ச்ருதிரபி கதாகர்ணன-

விதௌ । தவ த்யானே புத்திர்-நயனயுகளம் மூர்த்தி-
விபவே, பரக்ரந்தான் கைர்வா பரமசிவ ஜானே பரமதः ॥

(பரமசிவ) பரமசிவனே! (மனः) மனது (தே) உம்முடைய (பாதாப்ஜே) திருவடித் தாமரையிலும் (வசः) வாக்கு (ஸ்தோத்ர-பணிதௌ) உமது புகழைப் பேசுவதிலும் (கரௌச) இருகைகளும் (அப்யர்ச்சாயாம்) உமது அர்ச்சனையிலும் (ச்ருதிः) காது (கதாகர்ணனவிதௌ) உமது கதைகளைக் கேட்பதிலும் (புத்திः) புத்தியானது (தவ) உம்முடைய (த்யானே) தியானத்திலும் (நயனயுகளம்) இரு கண்களும் (மூர்த்தி-விபவே) உமது திருமேனியழகிலும் (நிவஸது) நிலை பெறட்டும் (அதः பரம்) அதற்குப்பின் (கைः வா) எவ்வாற்றால் (பரக்ரந்தான்) மற்ற நூல்களை (ஜானே) அறிவேன்?

ஒ. நீ நாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யார் அறிவார்
சா நாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளும் தலைசுமப்பப் புகழ் நாமம் செவிகேட்ப
நா நாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே.
—சம்பந்தர் தேவாரம்: 2.41.3.

ஒ. தலையே நீ வணங்காய்—தலைமாலை தலைக் கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத் தலையே நீ வணங்காய்
வாயே வாழ்த்து கண்டாய்—மதயானை உரி போர்த்துப்
பேய்வாழ் காட்டகத்(து)ஆடும்பி ரான்தன்னை வாயே
வாழ்த்து கண்டாய்
நெஞ்சே நீ நினையாய்—நிமிர் புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கை மணாளனை நெஞ்சே நீ நினையாய்.
—திருநாவுக்கரசர் தேவாரம். 4.9.

பணிதௌ—உச்சாரணே.

இந்திரியங்களை வெளிவிஷயங்களில் செல்லாமல் அடக்குவதற்குச் செய்யும் முயற்சி பயன்படாது. அவைகளை இறைவனிடம் செலுத்தினால் வெளிப்போக்குக்கு இடமில்லாமல் போய் விடும். அதைத்தான் திருமூலர் ‘அஞ்சும் அடக்கா அறிவு’ என்கிறார்.

ஒ. அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலர்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதனமா மென்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே.

—திருமந்திரம் : 2033.

த்யானேபுத்தி:—ஒ. எவ்வாறு காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட விளக்குச் சுடர் அசைவதில்லையோ, அது ஆத்மாவினிடத்தில் யோகத்தை அப்பியசிக்கும் யோகியின் அடங்கிய சித்தத்துக்கு உவமையாக அறிஞர்களால் கூறப் பட்டுள்ளது. —கீதை 6.19.

பரக்ரந்தான்:—ஒ. பல நூல்களைப் படிப்பதால் பகவத் பிரேமை உண்டாகி விடுமா? பஞ்சாங்கத்தில் இவ்வளவு மழை பெய்யும் என்று குறிப்பிட்டிருக்கிறது. பஞ்சாங்கத்தைக் கசக் கிப் பிழிந்தால் ஒரு துளி ஜலங்கூட வராது.

—ஸ்ரீராமகிருஷ்ணர்.

ஒ. (தமேவ தீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்-மண: । நானுத்யாயாத் பஹூன் சப்தான் வாசோ விக்லாபனம் ஹி தத் ॥) பிரம்ம நாட்டமுடைய புத்திமான் இதை அறிந்து பிரஜ்ஞையை யடையட்டும். பல சாஸ்திரங்களை அப்பியாஸம் செய்ய வேண்டாம். அது வாக்குக்குச் சிரமமேயாகும்.

—ப்ரு. உப. 4.4.21.

ஒ. தத்துவப் பேயோடே தலையடித்துக் கொள்ளாமல்
வைத்த வருள் மோன வள்ளலையே—நித்த மன்பு
பூணக்கருது நெஞ்சு போற்றக்கர மெழும்புங்
காணத் துடிக்கு மிருகண். —தாயுமானவர்.

## 8. சிவனைவிடச் சிறந்த தெய்வமில்லை

यथा बुद्धि-श्शुक्तौ रजत-मिति काचाश्मनि मणि-
र्जले पैष्टे क्षीरं भवति मृगतृष्णासु सलिलम् ।
तथा देव-भ्रान्त्या भजति भवदन्यं जडजनो
महादेवेशं त्वां मनसि च न मत्वा पशुपते ॥ ८ ॥

யதா புத்திः சுக்தௌ ரஜத-மிதி காசாச்மனி மணிர்-
ஜலே பைஷ்டே க்ஷீரம் பவதி ம்ருகத்ருஷ்ணாஸு ஸலிலம் ।
ததா தேவ-ப்ராந்த்யா பஜதி பவதன்யம் ஜடஜனோ மஹா
தேவேசம் த்வாம் மனஸி ச ந மத்வா பசுபதே ॥ 8 ॥

(பசுபதே) பசுபதியே! (யதா) எப்படி (சுக்தௌ) சிப்பியில் (ரஜதம் இதி) வெள்ளி என்றும், (காசாச்மனி) காசக்கல்லில் (மணிः) இரத்தினம் என்றும், (பைஷ்டே ஜலே) மாவு கலந்த ஜலத்தில் (க்ஷீரம்) பால் என்றும், (ம்ருகத்ருஷ்ணாஸு) கானலில் (ஸலிலம்) தண்ணீர் என்றும் (புத்திः பவதி) எண்ணம் ஏற்படுகிறதோ (ததா) அப்படித்தான் (ஜடஜனः) மூடனான மனிதன் (மஹாதேவேசம்) சிறந்த தேவர்களின் நாயகரான (த்வாம்) உன்னை (மனஸி) மனதில் (ந மத்வா) நினையாமல் (பவதன்யம்) உம்மைவிட்டு வேறு தெய்வத்தை (பஜதி) சேவிக்கிறான்.

ஒ. 'ஸஹஸ்ரம் வர்த்தந்தே ஜகதி விபுதாः'
—சிவானந்த லஹரீ. 4.

ஒ. ஸாத்விகர்கள் தேவர்களையும், ராஜஸகர்கள் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும், தாமஸகர்கள் பிரேதங்களையும் பூதகணங்களையும் பூஜிக்கிறார்கள். —கீதை 17.4.

ஒ. எம் கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க
கங்குல் பகல் எம் கண் மற்றொன்றும் காணற்க
இங்(கு) இப்பரிசே எமக்(கு) எங்கோன்! நல்குதியேல்
எங்கு எழில் என்ஞாயிறு எமக்கேல்ஓர் எம்பாவாய்
—திருவெம்பாவை 19.

## 9. சித்தமே சிவபூஜைக்குகந்த புஷ்பம்

गभीरे कासारे विशति विजने घोरविपिने
विशाले शैले च भ्रमति कुसुमार्थं जडमतिः ।
समर्प्यैकं चेतस्सरसिज-मुमानाथ भवते
सुखेनावस्थातुं जन इह न जानाति किमहो ॥ ९ ॥

கபீரே காஸாரே விசதி விஜனே கோரவிபினே
விசாலே சைலே ச ப்ரமதி குஸுமார்த்தம் ஜடமதிः ।
ஸமர்ப்யைகம் சேதஸ்ஸரஸிஜ–முமாநாத பவதே
ஸுகேனவஸ்தாதும் ஜன இஹ ந ஜானாதி கிமஹோ ॥ 9 ॥

(கபீரே) ஆழமான (காஸாரே) மடுவிலும், (விஜனே) ஜனநடமாட்டமில்லாத (கோரவிபினே) கொடிய காட்டிலும் (விசாலே) பரந்த (சைலே ச) மலையிலும் (குஸுமார்த்தம்) புஷ்பத்திற்காக (ஜடமதிः) அறிவு குறைந்தவன் (விசதி ப்ரமதி) புகுந்து அலைகிறான். (உமாநாத) பார்வதீ பதியே! (பவதே) உமக்கு (சேதः) மனதாகிற (ஏகம் ஸரஸிஜம்) ஒரு தாமரைப்பூவை (ஸமர்ப்ய) அன்புடன் அளித்துவிட்டு (ஸுகேன) சுகமாக (அவஸ்தாதும்) அலையாமல் ஓரிடத்திலிருப்பதற்கு (இஹ) இங்கே (ஜனः) மனிதன் (ந ஜானாதி) அறிந்து கொள்ளவில்லை (அஹோ) ஆச்சரியம்.

அஹோ—(துःக்ககர - அல்பபலக - பஹுதேச - ப்ரமணாபேக்ஷயா ஸுகர-பஹுபலக-ஏக - தேசாவஸ்தானஜ்ஞானம் ஆச்சர்யம்) எளிதாய்ச் செய்யக்கூடியதும் பெரும் பயனளிப்பதுமான ஸாதனம் உள்ளத்தில் சிவனைப் போற்றி ஓரிடத்திலிருப்பது. அதை யறியாமல் அல்பமான பயனையளிப்பதும் துன்பத்தைத் தருவதுமாகிய செயலை, அதாவது பல இடங்களில் திரிவதை மனிதன் நாடுகிறான். இது ஆச்சரியம்.

ஒ. (அந்தர்முக-ஸமாராத்யா பஹிர்முகஸுதுர்லபா)—உள் நாட்டமுடையவர்களால் நன்கு பூஜிக்கப்படுபவள். வெளி நாட்ட முடையவர்களால் அடைய முடியாதவள்.
—லலிதாஸஹஸ்ர நாமம்.

ஒ. காயமே கோயிலாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே.
—திருநாவுக்கரசர் தேவாரம் 4.76.4.

## 10. பக்தியிருந்தால் எப்பிறவியும் நல்லதே

नरत्वं देवत्वं नग-वन-मृगत्वं मशकता
पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादि जननम् ।
सदा त्वत्पादाब्ज-स्मरण-परमानन्द-लहरी
विहारासक्तं चे-द्धृदय-मिह किं तेन वपुषा ॥ १० ॥

நரத்வம் தேவத்வம் நக-வன-ம்ருகத்வம்
பசுத்வம் கீடத்வம் பவது விஹகத்வாதி ஜனனம் ।
ஸதா த்வத்பாதாப்ஜ-ஸ்மரண-பரமானந்தலஹரீ-
விஹாராஸக்தஞ் சேத்த்ருதய-மிஹ கிம் தேன வபுஷா
॥ 10 ॥

(நரத்வம்) மனிதப் பிறவியோ (தேவத்வம்) தேவப் பிறவியோ (நக-வன-ம்ருகத்வம்) மலை காடுகளில் மிருகப் பிறவியோ (மசகதா) கொசுத்தன்மையோ (பசுத்வம்) பசுத் தன்மையோ (கீடத்வம்) புழுத் தன்மையோ (விஹ கத்வாதி-ஜனனம்) பறவை முதலிய பிறவியோ—எது வானாலும் (பவது) ஏற்படட்டும். (ஸதா)எப்பொழுதும் (த்வத்) உம்முடைய (பாதாப்ஜ-ஸ்மரண-) திருவடித் தாமரைகளின் தியானமாகிற (பரமானந்தலஹரீ-) சிறந்த ஆனந்தப் பெருக்கில் (விஹார-) விளையாடுவதில் (ஹ்ரு-தயம்) உள்ளமானது (ஆஸக்தம் சேத்) ஈடுபட்டிருக்குமே யானால் (இஹ) இவ்வுலகில் (தேன) அந்த (வபுஷா) உடலைப் படைத்ததால் (கிம்) என்ன குறைவு ?

ஒ. புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்அடி என்மனத்தே
வழுவா(து) இருக்க வரந்தர வேண்டும்இவ் வையகத்தே
தொழுவார்க்(கு) இரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீ
வண்ணனே.

—திருநாவுக்கரசர் தேவாரம் : 4.94.8.

ஒ. உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்

உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்(று)
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே.
—திருமந்திரம் : 725.

ஜடபரதர் மான்பிறவியடைந்தும், அப்பிறவியிலும் இறைவன் திருவடியை மறவாமலிருந்தார். பலர் மனிதப் பிறவியிலும் அவனை மறந்திருக்கிறார்கள். ஆகையால் பிறவி முக்கியமன்று. இறைவனை மறவாமலிருப்பதே முக்கியம்.

ஒ. எந்தவுட லேனும் எடுத்தவுடல் நல்லதென்று
சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே.
—தாயுமானவர்.

ஒ. எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன் அடியார்க்கு
இங்கே யென் றருள்புரியும் எம்பெருமான்.
—சம்பந்தர் : 2.40.6.

## 11. பக்தியிருந்தால் எந்த ஆசிரமும் நல்லதே

वटुर्वा गेही वा यतिरपि जटी वा तदितरो
नरो वा यः कश्चिद्भवतु भव किं तेन भवति ।
यदीयं हृत्पद्मं यदि भवदधीनं पशुपते
तदीय-स्त्वं शंभो भवसि भवभारं च वहसि ॥ ११ ॥

வடுர்வா கேஹீ வா யதிரபி ஜடீவா ததிதரோ
நரோ வா யஃ க்ச்சித் பவது பவ கிம் தேந பவதி ।
யதீயம் ஹ்ருத்பத்மம் யதி பவததீனம் பசுபதே
ததீயஸ்-த்வம் சம்போ பவஸி பவபாரஞ்ச வஹஸி
॥ 11 ॥

(வடுஃ வா) பிரம்மசாரியாகவோ (கேஹீ வா) கிருஹஸ்தனுகவோ (யதிஃ அபி) ஸந்நியாஸியாகவோ (ஜடீ வா) சடை தரித்த வானப்பிரஸ்தனுகவோ (தத் இதரஃ) இவர்களல்லாத (யஃ கச்சித்) எவனே ஒரு (நரஃ வா) மனிதனுகவோ (பவது) ஒருவன் இருக்கட்டும். (பவ) பரம

சிவனே! (தேன) அதனுல் (கிம்) என்ன (பவதி) உண்டாகும்? (பசுபதே) பசுபதியே! (யதீயம்) எவனுடைய (ஹ்ருத்பத்மம்) இருதய கமலம் (பவத்-அதீனம் யதி) உம்முடைய வசப்பட்டிருக்குமோ (ததீயঃ) அவனுக்கு வசப்பட்டவராக (த்வம்) நீர் (பவஸி) ஆகிவிடுகிறீர். (சம்போ) சம்புவே (பவ-பாரஞ்ச) பிறவிச் சுமையையும் (வஹஸி) தாங்குகிறீர்.

இறைவனிடம் பக்தி உண்டானுல் பிறவி எதுவாயினும் அது பொருட்டன்று எனக் கூறி இனி மனிதப் பிறவியிலும் ஆசிரமம் எதுவாயினும் அதுவும் பொருட்டன்று எனக் கூறுகிருர்.

ஒ. எந்நிலையில் நின்ருலும் எக்கோலங் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்.
—சாக்கிய நாயனுர்: பெரிய புராணம்.

பவ-பாரஞ்ச வஹஸி:—ஒ. என்னைவிட வேருென்றிலும் நாட்டமில்லாதவராய் என்னையே சிந்திப்பவராய் எந்த ஜனங்கள் பரிவுடன் உபாசிக்கின்ருர்களோ அந்த நிலைபெற்ற பக்தர்களுடைய யோகக்ஷேமத்தை நான் தாங்குகின்றேன்.
—கீதை 9.22.

ஒ. பாய்களைச் செவ்வையாக விரித்து வைத்தவனுடைய படகைக் காற்று தானே தள்ளிச் செல்வதுபோல, பக்தனுடைய வாழ்க்கைப் படகை இறைவனுடைய கருணைக் காற்று தள்ளிச் செல்லுகிறது. —ஸ்ரீ ராமகிருஷ்ணர்

ஒ. காவித்துணி வேண்டா கற்றைச்சடை வேண்டா
பாவித்தாற் போதும் பரமநிலை எய்துதற்கே
சாத்திரங்கள் வேண்டா சதுர்மறைகளேது மில்லை
தோத்திரங்களில்லை யுளந்தொட்டு நின்ருற் போதுமடா.
—பாரதி

ஒ. சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவானிறையென வறிந்து நெஞ்சமே
தேட்ட மொன்றற வருட் செயலினிற்றியேல்
வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே. —தாயுமானவர்

ஒ. (நாஸ்தி தேஷு ஜாதி-வித்யா-குல-ரூப-தன-க்ரியாதி-பேத:) பக்தியுள்ளவர்களிடம் பிறப்பாலும் கல்வியாலும் குலத்தாலும் அழகாலும் பொருளாலும் தொழிலாலும் ஏற்படும் வேற்றுமைகள் இல்லை. —நாரதபக்தி ஸூத்ரம்

## 12. பக்தியிருந்தால் எந்த இடமும் நல்லதே

गुहायां गेहे वा बहिरपि वने वाऽद्रिशिखरे
जले वा वह्नौ वा वसतु वसतेः किं वद फलम् ।
सदा यस्यैवान्तः करण-मपि शंभो तव पदे
स्थितं चेद्योगोऽसौ स च परम-योगी स च सुखी ॥ १२ ॥

குஹாயாம் கேஹே வா பஹிரபி வனே வாऽத்ரிசிகரே
ஜலே வா வஹ்நௌ வா வஸது வஸதேः கிம்வத பலம் ।
ஸதா யஸ்யைவாந்தः கரண-மபி சம்போ தவ பதே
ஸ்திதஞ்சேத் யோகோऽஸௌ ஸ ச பரமயோகீ
ஸ ச ஸுகீ ॥ 12 ॥

(குஹாயாம்) குகையிலோ (கேஹே வா) வீட்டிலோ (பஹிரபி) வெளியிலோ (வனே வா) காட்டிலோ (அத்ரி-சிகரே) மலையுச்சியிலோ (ஜலே வா) நீரிலோ (வஹ்னௌ வா) நெருப்பிலோ (வஸது) ஒருவன் வசிக்கட்டும்; (வஸதே:) வசித்ததால் (கிம்) என்ன (பலம்) பயன்? (வத) கூறு. (ஸதா) எப்பொழுதும் (யஸ்ய) எவனுடைய (அந்த: கரணம் அபி) மனதுகூட (சம்போ) சம்புவே, (தவ) உம்முடைய (பதே) பாதத்தில் (ஸ்திதம் சேத்) நிலைபெற்றதாகுமோ (அஸௌ) அதுவே (யோக:) யோகம்; (ஸ ச) அவன்தான் (பரமயோகீ) சிறந்தயோகி; (ஸ ச) அவன்தான் (ஸுகீ) இன்புறுபவன்.

பக்தி செய்வதற்குக் காடென்றும் மலையென்றும் தேடிப் போகவேண்டிய அவசியமில்லை; குளிர்காலத்தில் நீரில் நின்று கொண்டும், வெயிற்காலத்தில் அக்கினியைச் சுற்றிலும் வளர்த்துக்கொண்டும் கடுந்தவமும் செய்யவேண்டியதில்லை. இருக்கும்

இடத்தில் இருதயத்தில் இறைவன் திருவடிகளைப் போற்றி யிருந்தால் போதும், அதுவே யோகம், அதுவே தவம்.

பரமயோகீ :—நிர்விகல்பஸமாதிமான்.

ஸுகீ :—ஒ. (ஏகோ வசீ ஸர்வபூதாந்தராத்மா ஏகம் ரூபம் பஹுதா யః கரோதி। தமாத்மஸ்தம் யேऽனுபச்யந்தி தீராஸ்-தேஷாம் ஸுகம் சாச்வதம் நேதரேஷாம் ॥) உண்டாய பொருளனைத்துக்கும் அந்தராத்மாவும் ஆண்டவனுமாகிய எந்த ஒருவன் ஒன்றேயாகிய தன் வடிவைப் பலவாகச் செய்கிறானோ, அவனை எந்த தீரர்கள் தங்களிடம் உறைபவனாய்க் காண்கிறார்களோ அவர்களுக்கே அழிவிலாச் சுகம் உண்டு, பிறர்க்கில்லை.

—கட உபநிஷத்து: 5.12.

ஒ. கங்கையாடிலென் காவிரியாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஓங்குமாகடல் ஓதநீ ராடிலென்
எங்கும் ஈசனென் னாதவர்க்(கு) இல்லையே.

—திருநாவுக்கரசர் தேவாரம் : 5.99.2.

## 13. பரமசிவன் தீனரக்ஷகன்

असारे संसारे निजभजन-दूरे जडधिया
भ्रमन्तं मामन्धं परम-कृपया पातु-मुचितम् ।
मदन्यः को दीन-स्तव कृपण-रक्षाति-निपुण-
स्त्वदन्यः को वा मे त्रिजगति शरण्यः पशुपते ॥ १३ ॥

அஸாரே ஸம்ஸாரே நிஜபஜன-தூரே ஜடதியா
ப்ரமந்தம் மாமந்தம் பரமக்ருபயா பாது-முசிதம் ।
மதன்யః கோ தீனஸ்-தவ க்ருபண-ரக்ஷாதிநிபுணஸ்-
த்வதன்யః கோ வா மே த்ரிஜகதி சரண்யః பசுபதே ॥

(அஸாரே) பயனற்றதாயும் (நிஜ-பஜன-தூரே) ஆத்ம தியானத்திற்கு அனுகூலமற்றதாயும் உள்ள (ஸம்ஸாரே) பிறவிச்சுழலில் (ஜடதியா) மந்த புத்தியால் (ப்ரமந்தம்) சுற்றிவருகின்ற (அந்தம்) குருடனாகிய (மாம்)

என்னை (பரம க்ருபயா) மிகுந்த கருணையுடன் (பாதும்) காப்பாற்றுவது (உசிதம்) தகும். (தவ) உமக்கு—உமது கருணையைச் செலுத்துவதற்கு—(மதன்யஃ) என்னைக்காட்டிலும் (தீனஃ) ஏழை (கஃ) யார் இருக்கிறான்? (பசுபதே) பசுபதியே! (மே) எனக்கு (க்ருபண-ரக்ஷா-அதிநிபுணஃ) ஏழைகளைக் காப்பதில் தலைசிறந்தவராகிய (த்வத்-அன்யஃ) உம்மைக்காட்டிலும் (சரண்யஃ) சரணடையத்தக்கவர் (த்ரிஜகதி) மூவ்வுலகிலும் (கஃ வா) யார்தான் இருக்கிறார்?

அஸாரே ஸம்ஸாரே:—பொய்யான உடல் மெய்யெனப்படுவதுபோல் ஸாரமில்லாத பிறவிச்சுழலாகிய ஸம்ஸாரம், ஸாரமுள்ளது என மதிமயக்கத்தால் கருதப்படுகிறது.

நிஜபஜனதூரே:—நிஜஸ்ய ஸ்வ-ஸ்வரூபஸ்ய பரமேச்-வரஸ்ய பஜனம் அனுஸந்தானம் தூரம் விப்ரக்ருஷ்டம் யஸ்மின் தஸ்மின் ஸம்ஸாரே ।

அந்தம்—ஆத்மானாத்ம-விவேக சூன்யம் ।

ப்ராந்த:—ஒ. 'கா தே காந்தா கஸ்தே புத்ர: ஸம்ஸாரோ ऽயமதீவ விசித்ர: । கஸ்ய த்வம் வா குத ஆயாத: தத்வம் சிந்தய ததிஹ ப்ராந்த:' ॥ —பஜகோவிந்தம்.

(அ)ஜட!தியா—'ஹே(அ)ஜட,' ஜடமான தேகம் முதலியவற்றினின்று வேறான பரமபுருஷரே, 'தியா' (விவிக்த-ஸ்வரூபஜ்ஞான-ப்ரதானேன) தெளிவான ஆத்மஞானத்தையளித்து என்னைக்காத்தருள்வீராக என்றும் இதற்குப் பொருள் கூறப்படுகிறது.

பரமக்ருபயா பாதும்—ஒ. (தேஷாமேவானு-கம்பார்த்த-மஹமஜ்ஞானஜம் தம: । நாசயாம்-யாத்ம-பாவஸ்தோ ஞானதீபேன பாஸ்வதா ॥) அவர்களிடம் அருளாலேயே நான் அவர்கள் உள்ளத்தில் நிலைபெற்று பிரகாசிக்கும் ஞானதீபத்தால் அக்ஞானத்தால் உண்டான இருளை நாசம் செய்கிறேன். —கீதை: 10.11.

மதன்ய கோ தீன:—

ஒ. என்போல் எளியவரும் எங்கெங்கு பார்த்தாலும்
உன்போல் வலியவரும் உண்டோ பராபரமே.

—தாயுமானவர்.

## 14. பரமசிவன் தீனபந்து

प्रभु-स्त्वं दीनानां खलु परमबन्धुः पशुपते
प्रमुख्योऽहं तेषा-मपि किमुत बन्धुत्व-मनयोः ।
त्वयैव क्षन्तव्या-शिव मदपराधाश्च सकलाः
प्रयत्नात्कर्तव्यं मदवन-मियं बन्धु-सरणिः ॥ १४ ॥

ப்ரபுஸ்த்வம் தீனானாம் கலு பரமபந்துஃ பசுபதே
ப்ரமுக்யோऽஹம் தேஷாமபி கிமுத பந்துத்வ-மனயோஃ ।
த்வயைவ க்ஷந்தவ்யாஃ சிவ மதபராதாச்ச ஸகலாஃ
ப்ரயத்னாத் கர்த்தவ்யம் மதவன-மியம் பந்து-ஸரணிஃ ॥

(பசுபதே) பசுபதியே! (ப்ரபுஃ) பிரபுவாகிய (த்வம்) நீர் (தீனானாம்) எளியோர்களுக்கு (பரமபந்துஃ கலு) சிறந்த உறவினரல்லவோ? (தேஷாம் அபி) அவர்களுக்குள்ளும் (அஹம்) நான் (ப்ரமுக்யஃ) மிக்க எளியவன். (அனயோஃ) அப்படிப்பட்ட இருவருக்குள் (பந்துத்வம்) உறவைப் பற்றி (கிம் உத) சொல்லவேண்டியது என்ன இருக்கிறது? (சிவ) மங்களமான குணம் படைத்தவரே! (மத்-) என்னுடைய (ஸகலாஃ) எல்லா (அபராதாஃ ச) குற்றங்களும் (த்வயா) உம்மால் (க்ஷந்தவ்யாஃ ஏவ) மன்னிக்கத் தக்கவைகளே. (மத்-) என்னுடைய (அவனம்) ரக்ஷணம் (ப்ரயத்னாத்) உம்முடைய பிரயத்தினத்தால் (கர்த்தவ்யம்) செய்யப்படவேண்டும். (இயம்) இதுவே (பந்துஸரணிஃ) உறவினர்களுடைய நடைமுறை.

பரமபந்து :—

ஒ. தாயும் பிதாவும் குருவுந் தனிமுதலும்
நீயும் பரையுமென்றே உணர்ந்தேன் இது நிச்சயமே.
—தாயுமானவர்

அபராதா :—ஆஜ்ஞோல்லங்கன - ரூபாணி தீவதனிஷ்டாசரணானி ।

பந்து-ஸரணி :—பந்தூனும் பந்தாஃ ।

ப்ரபு :—ஓ. (அத்ரபூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத் ப்ரபு: ।) ஸ்ரீராமர் இலங்கையிலிருந்து புஷ்பக விமானத்தில் வரும்போது இராமேசுவரத்தை ஸீதைக்குச் சுட்டிக்காட்டி 'இங்குதான் ப்ரபுவான மகாதேவர் முன்பு எனக்கு அருள் புரிந்தார்' என்று அவருடைய பெருமையைச் சிலாகித்துக் கூறினர். எந்த குணத்தைச் சிவனிடம் போற்றினரோ அந்த உதார குணம் ஸ்ரீராமரிடத்தில் விசேஷமாக விளங்கிற்று.

ஓ. ஏழை ஏதலன் கீழ்மகன் என்ன(து)
இரங்கி மற்றவற்(கு) இன்அருள் சுரந்து
மாழைமான் மடநோக்கி உன்தோழி
உம்பி எம்பி என்(று) ஒழிந்திலை உகந்து
தோழன் நீ எனக்(கு) இங்(கு) ஒழி என்ற
சொற்கள் வந்(து) அடியேன் மனத்திருந்திட
ஆழிவண்ண ! நின் அடிஇணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே.
—பெரிய திருமொழி : 5.8.1.

ஓ. மித்ரபாவேன ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சன ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதா-மேததகர்ஹிதம் ॥
ஸக்ருதேவ ப்ரபன்னய தவாஸ்மீதி ச யாசதே ।
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்-யேதத் வ்ரதம் மம ॥

நட்புக்கொண்டு வந்தவனை ஒருபோதும் கைவிடக்கூடாது. அவனிடம் தோஷமிருந்தாலும் அதை நல்லவர்கள் பாராட்ட மாட்டார்கள். 'நான் உன்னைச் சேர்ந்தவன்' என்று சொல்லி ஒருவன் என்னை ஒருமுறை சரணடைந்துவிட்டால் அவனுக்கு எல்லா உயிர்களிடத்திலிருந்தும் பயமற்ற நிலையை அளிப்பேன். இது என்னுடைய விரதம்.
—வால்மீகி இராமாயணம் : 6.18.3 ; 33

ஓ. அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தம்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனர்க்கு
எல்லை இல்லதோர் அடிமைபூண் டேனுக்கே.
—திருநாவுக்கரசர் தேவாரம் : 5.1.4.

## 15. சிவகிருபையால் விதியை வெல்லலாம்

उपेक्षा नो चेत् किन्न हरसि भवद्-ध्यान-विमुखां
दुराशा-भूयिष्ठां विधि-लिपि-मशक्तो यदि भवान् ।
शिर-स्तद्वैधात्रं न नखलु सुवृत्तं पशुपते
कथं वा निर्यत्नं करनख-मुखेनैव लुलितम् ॥ १५ ॥

உபேக்ஷா நோ சேத் கிந் ந ஹரஸி பவத்த்யான விமுகாம்
துராசாபூயிஷ்டாம் விதிலிபி-மசக்தோ யதி பவான் ।
சிரஸ்தத்வைதாத்ரம் ந நகலு ஸுவ்ருத்தம் பசுபதே
கதம் வா நிர்யத்னம் கர-நக-முகேனைவ லுலிதம் ॥ 15 ॥

(பசுபதே) பசுபதியே! (உபேக்ஷா) வெறுப்பு—என்னைக் காப்பாற்றும் விஷயத்தில் உமக்கு (நோ சேத்) இல்லாவிட்டால் (துராசா-பூயிஷ்டாம்) கெட்ட ஆசைகள் நிறைந்ததாயும் (பவத்-த்யான-விமுகாம்) உம்முடைய தியானத்தில் நோக்கமில்லாததாயும் இருக்கும் (விதிலிபிம்)—மனதை எனக்குப் படைத்த—பிரம்மாவினுடைய எழுத்தை (கிம்) ஏன் (ந ஹரஸி) போக்கடிக்கவில்லை? (பவான்) நீர் (அசக்தః யதி) சக்தியில்லாதவர் என்றால் (ஸுவ்ருத்தம்) திடமாயமைந்ததும் (ந நகலு) கிள்ளிவிட முடியாததுமான (வைதாத்ரம்) பிரம்மாவினுடைய (தத் சிரః) அந்தத் தலையானது (நிர்யத்னம்) ஒருபாடுமில்லாமல் (கதம் வா) எப்படித்தான் (கர-நக-முகேன-ஏவ) கை நகத்தின் நுனியினாலேயே (லுலிதம்) கிள்ளப்பட்டது?

விதிலிபிம்—பிரம்மா ஒவ்வொரு ஜீவனையும் சிருஷ்டிக்கும் போது அவரவர் முற்பிறவிகளில் செய்த செயல்களுக்குத் தக்கவாறு இப் பிறவிப் போக்கை நிர்ணயித்து அதை அவரவர் தலையில் எழுதிவிடுகிறார் என்னும் நம்பிக்கை இங்கு குறிக்கப் படுகிறது.

பிரம்மாவினுடைய தலையைக் கிள்ளியது :—

ஓ. பிரமனும் மாலும் பிரானே நான் என்னப்
பிரமன் மால் தங்கள்தம் பேதைமை யாலே

*பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க*
*அரனடி தேடி அரற்றுகின்றாரே.* —திருமந்திரம் 372

பிரம்மா ஹம்ஸ வடிவத்தில் மேலே பறந்து சென்று பரம சிவனுடைய முடியைத் தான் தரிசித்ததாயும் அதற்குச் சாக்ஷி யாக ஒரு தாழம்பூவைத் தலையிலிருந்து கொணர்ந்ததாகக் காட்டியதாயும், பிரம்மா கூறியது உண்மையல்லாததால், பரமசிவன் கோபங்கொண்டு பிரம்மாவிற்கு முன்னிருந்த ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்துவிட்டார் என்றும் தாழம்பூ தன்னைப் பூசிப்பதற்கு உதவாதென்று விலக்கிவிட்டார் என்றும் ஒரு கதை உண்டு. அது இங்கே குறிப்பிடப்படுகிறது.

ஒ. *அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்*
*படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக்கூடி*
*அடிகண் டிலேன்என் றச்சுதன் சொல்ல*
*முடிகண்டேன் என்றயன் பொய் மொழிந்தானே.*
—திருமந்திரம்

## 16. ஏழ்மையும் நல்லதே

विरिंचि-र्दीर्घायु-र्भवतु भवता तत्परशिर-
श्चतुष्कं संरक्ष्यं स खलु भुवि दैन्यं लिखितवान् ।
विचारः को वा मां विशद कृपया पाति शिव ते
कटाक्ष-व्यापारः स्वयमपि च दीनावन-परः ॥ १६ ॥

விரிஞ்சிர்-தீர்க்காயுர்-பவது பவதா தத்பரசிரச்-சதுஷ்கம்
ஸம்ரக்ஷ்யம் ஸ கலு புவிக்தைன்யம் லிகிதவான் ।
விசாரः கோ வா மாம் விசத க்ருபயா பாதி சிவ தே
கடாக்ஷ-வ்யாபாரः ஸ்வயமபி ச தீனாவனபரः ॥ 16 ॥

(விரிஞ்சிः) பிரம்மா (தீர்க்காயுः) நீண்ட ஆயுள் உடையவராக (பவது) இருக்கட்டும். (பவதா) உம்மால் (தத்-பர-சிர:-சதுஷ்கம்) அவருடைய மிகுதியுள்ள தலைகள் நான்கும் (ஸம்ரக்ஷ்யம்) இரக்ஷித்தற்குரியதாகட்டும்.

(ஸ கலு) அவரன்றோ (புவி) இப்பூலோகத்தில் (தைன்யம்) எளிமையை (லிகிதவான்)—என் தலையில்—எழுதிவைத்தவர். (விசாரஃ) கவலை (கோ வா) ஏது? (விசத) நிர்மல ஸ்வரூபியே! (சிவ) மங்களவடிவினரே! (மாம்) என்னை (தே) உம்முடைய (கடாக்ஷ-வ்யாபாரஃ) கடைக்கண் பார்வையாகிய செயல் (ஸ்வயமபி) தானாகவே (தீனாவன-பரஃ) எளியவர்களைக் காப்பதில் ஆவலுடையதாய் (மாம்) என்னை (பாதி) காப்பாற்றுகிறது.

ஒ. தேவியே! தாமரைத் தண்டுபோல் மெதுவாய்த் துவளும் உன்னுடைய நான்கு கொடிபோன்ற கைகளின் அழகைத் தாமரையிலுதித்த பிரம்மா, முதலில் தனது தலைகளில் ஒன்றைக் கிள்ளிவிட்ட காலகாலனை பரமசிவனுடைய நகங்களினின்று பயந்துகொண்டு, ஸமகாலத்தில் நான்கு தலைகளுக்கும் நான்கு கைகளாலும் அபயமளிப்பாய் என்ற நோக்கத்துடன், நான்கு முகங்களாலும் துதிக்கிறார்.

—ஸௌந்தர்யலஹரீ 70.

ஒ. விதியையும் விதித் தென்னை விதித்திட்ட
மதியையும் விதித் தம்மதி மாயையிற்
பதிய வைத்த பசுபதி நின்னருட்
கதியை எப்படிக் கண்டு களிப்பதே. —தாயுமானவர்.

## 17. திருவடி தரிசனம்

फलाद्वा पुण्यानां मयि करुणया वा त्वयि विभो
प्रसन्नेऽपि स्वामिन् भवदमल-पादाब्ज-युगलम् ।
कथं पश्येयं मां स्थगयति नमस्संभ्रम-जुषां
निलिंपानां श्रेणि-र्निज-कनक-माणिक्य-मकुटैः ॥ १७॥

பலாத்வா புண்யானாம் மயி கருணயா வா த்வயி விபோ
ப்ரஸன்னேऽபி ஸ்வாமின் பவதமல-பாதாப்ஜ-யுகளம்।
கதம் பச்யேயம் மாம் ஸ்தகயதி நமஸ்ஸம்ப்ரம-ஜுஷாம்
நிலிம்பானாம் ச்ரேணிர்-நிஜ-கனக-மாணிக்ய-மகுடை: ॥

(விபோ) எங்கும் நிறைந்தவரே! (ஸ்வாமின்) இறைவரே! (புண்யாநும்) நற்செயல்களுடைய (பலாத்வா), பயனுலோ (மயி) என்னிடத்தில் (கருணயா வா) இரக்கத்தாலோ (த்வயி ப்ரஸன்னே அபி) நீர் என் முன் தோன்றியுங்கூட (பவத்-) உம்முடைய (அமல-பாதாப்ஜ-யுகளம்) தூய்மையான திருவடிகளிரண்டையும் (கதம்) எப்படி (பச்யேயம்) நான் தரிசிக்கப்போகிறேன்? (நமஃ ஸம்ப்ரம-ஜுஷாம்) உம்மை வணங்குவதில் ஆர்வங்கொண்ட (நிலிம்பாநும்) தேவர்களின் (ச்ரேணிஃ) கூட்டம் (நிஜ-கனக-மாணிக்ய-மகுடைஃ) அவர்கள் அணிந்துள்ள மாணிக்க மிழைத்த பொற்கிரீடங்களால் (மாம்) என்னை (ஸ்தகயதி) தடுத்து விடுகிறது.

பாதாப்ஜ யுகளம்—ஒ. ‘தேவரெலாம் தொழச்சிவந்த செந்தாள்’ —தாயுமானவர்.

ஒ. தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. —குறள்.

இறைவனுடைய திருவடிகளில் பக்தி நிலையாவிட்டால், சித்திகளை நாடி மனது சிதறிப்போகும். பூர்வபுண்ணியத்தாலும் இறைவனுடைய கருணையாலும் அவருடைய திருமுன் செல்லும் பாக்கியம் கிடைத்தாலும் போகத்திற்கும் பதவிக்கும் போட்டியிடுபவர்களின் கூட்டம் அவருடைய திருவடி தரிசனத்தை நமக்குக் கிட்டாமல் செய்துவிடக்கூடும். அவர்கள் குறுக்கிடாமலிருக்கும்படியும் இறைவன் அருள்புரியவேண்டும். கிரீடங்களும் குண்டலங்களும் ஆபரணங்களும் இறைவனிடம் சேருவதற்கு இடையூறுகளாகின்றன. இருதயத்தில் இறைவனுடைய திருவடிகளைக் காண முயலும்போதும் அம்மாதிரி மறைவு ஏற்படக்கூடும். நமக்கு உள்ளேயும் அப்படிப்பட்ட தேவர்கள் உளர்.

நந்தனர் சிதம்பரம் சென்றபோது, அவருக்கு நன்ருகக் காட்சியளிப்பதற்காக இடையிலிருந்த நந்தியைச் சற்று விலகியிருக்கும்படி சிவபிரான் கட்டளையிட்டார்.

ஒ. ‘சற்றே விலகியிரும் பிள்ளாய், சந்நிதானம்
மறைக்குதாம்’ —நந்தனர் சரித்திரக் கீர்த்தனை.

## 18. அண்டியவர்களிடம் அளவற்ற கருணை

त्वमेको लोकानां परमफलदो दिव्य-पदवीं
वहन्त-स्त्वन्मूलां पुनरपि भजन्ते हरिमुखाः ।
कियद्वा दाक्षिण्यं तव शिव मदाशा च कियती
कदा वा मद्रक्षां वहसि करुणा-पूरित-दृशा ॥ १८ ॥

த்வமேகோ லோகானும் பரபமபலதோ திவ்ய-பதவீம்
வஹந்தஸ்-த்வன்மூலாம் புனரபி பஜந்தே ஹரிமுகாঃ ।
கியத்வா தாக்ஷிண்யம் தவ சிவ மதாசா ச கியதீ
கதா வா மத்ரக்ஷாம் வஹஸி கருணு-பூரித-த்ருசா ॥ 18 ॥

(சிவ) பரமசிவனே! (த்வம்) நீர் (ஏகঃ) ஒருவரே (லோகானும்) உலகமக்களுக்கு (பரமபலதঃ) சிறந்த பயனை யளிப்பவர். (த்வன்-மூலாம்) உம்மிடமிருந்து கிடைக்கப் பெற்ற (திவ்ய-பதவீம்) தெய்வீகப் பதவிகளை (வஹந்தঃ) கைப்பற்றியுள்ள (ஹரிமுகாঃ) விஷ்ணு முதலியவர்கள் (புனঃ அபி) மேன்மேலும்—உயர்வை விரும்பி—(பஜந்தே) உம்மைச் சேவிக்கிருர்கள். (தவ தாக்ஷிண்யம்) அண்டிய வர்க்கு அருள்புரியும் உமது கருணை(கியத் வா) எவ்வளவு—அளவில்லாதது? (மத் ஆசா ச) என்னுடைய ஆசை யுந்தான் (கியதீ) எவ்வளவு—அளவில்லாதது—? (கதா வா) எப்போது (கருணுபூரித-த்ருசா) கருணை நிறைந்த பார்வையால் (மத் ரக்ஷாம்) என்னைக் காத்தருளுதலை (வஹஸி) ஏற்றுக்கொள்ளுவீர்?

தாக்ஷிண்யம்—(பக்தாபிப்ராய அனுவர்த்தனம்) பக்தர் களின் விருப்பத்திற்கிணங்க நடந்து கொள்ளுதல்.

மத்ரக்ஷாம்—(மத் அஹங்காராத் ரக்ஷாம்) அகங்காரத் தின் பிடியிலிருந்து காக்கப்படுதல் வேண்டப்படுகிறது. (ஆத்மனঃ ஹ்ருதயக்ரந்தி-நிவ்ருத்திம் ப்ரார்த்தயதே).

ஆசா—

ஒ. ஆசைக்கோரளவில்லை அகிலமெல் லாங்கட்டி ஆளினுங்
 கடல் மீதிலே ஆணை செலவே நினைவர் அளகேசன்
 நிகராக அம் பொன்மிக வைத்த பேரும்
 நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர் நெடு
 நாளிருந்த பேரும் நிலையாக வேயினுங் காயகற்பந்
 தேடி நெஞ்சு புண்ணுவரெல்லாம்
 யோசிக்கும் வேளையிற் பசிதீரவுண்பதும் உறங்கு
 வதுமாக முடியும் உள்ளதே போது
 நான் நானெனக்குளறியே ஒன்றைவிட்டொன்றுபற்றிப்
 பாசக்கடற்குளே வீழாமல் மனதற்ற பரிசுத்த
 நிலையை யருள்வாய் பார்க்குமிடமெங்குமொரு
 நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே.

—தாயுமானவர்.

மூவர்களானும் ஆசைக்களவில்லை; நீ கொடுப்பதற்கும் எல்லையில்லை. உன் பாதாரவிந்தத்தில் பக்தி நிலைபெறுதவரை ஆசைகள் பெருகிக்கொண்டேதான் இருக்கும். தாக்ஷிண்யம் காட்டாமல் உன்கருணையால் என்னைத் தடுத்தாட்கொண்டு ரக்ஷிப்பாயாக.

புனரபி பஜந்தே—ஒ.

வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மனநின்பால்
தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை நாயடியேன்
பாழ்த்த பிறப்பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே.

—திருவாசகம்.

## 19. தலையெழுத்தை மாற்றும் கிருபை

दुराशा-भूयिष्ठे दुरधिप-गृहद्वार-घटके
 दुरन्ते संसारे दुरित-निलये दुःखजनके ।
मदायासं किं न व्यपनयसि कस्योपकृतये
 वदेयं प्रीतिश्चेत् तव शिव कृतार्थाः खलु वयम् ॥ १९ ॥

துராசா-பூயிஷ்டே துரதிப-க்ருஹத்வார-கடகே
துரந்தே ஸம்ஸாரே துரித-நிலயே துஃக்கஜனகே ।
மதாயாஸம் கிந் ந வ்யபநயஸி கஸ்யோபக்ருதயே
வதேயம் ப்ரீதிச்சேத் தவ சிவ க்ருதார்த்தாஃ கலு வயம் ॥

(துர்ராசா-பூயிஷ்டே) கெட்ட ஆசை நிறைந்ததாயும் (துரதிப-க்ருஹ-த்வார-கடகே) கெட்ட அதிகாரிகளின் வீட்டு வாயிலில் கொண்டு சேர்ப்பதாயும் (துரந்தே) கெட்ட முடிவை உடையதாயும் (துரிதநிலயே) பாவத்திற் கிருப்பிடமாயும் (துஃக்கஜனகே) துன்பத்தையே விளைப்ப தாயும் இருக்கும் (ஸம்ஸாரே) பிறவிச் சுழலில் (மத் ஆயா ஸம்) என்னுடைய துன்பத்தை (கஸ்ய) பிரம்மாவிற்கு (உபக்ருதயே) அவர் எழுதின தலையெழுத்துப் பொய்க் காமலிருக்கும்படி-உபகரிக்கும் பொருட்டு (ந வ்யபநயஸி கிம்) போக்கடிக்காமல் இருக்கிறீரா என்ன? (வத) கூறும். (இயம், ப்ரீதிஃ சேத் தவ) பக்தர்களிடம் உமது கருணை இப்படிப்பட்டதென்றால் (வயம்) நாங்கள் (க்ருதார்த்தாஃ கலு) கடைத்தேரியவர்கள் என்பதில் ஐயமில்லை.

துஃக்கஜனகே—ஒ. எந்த இன்பங்கள் வெளிப் பொருள் களின் பரிசத்தால் உண்டானவையோ அவை துன்பத்திற்குப் பிறப்பிடமாயுள்ளவைகளே; ஆரம்பமும் முடிவும் உடையவை. அறிவாளி அவைகளில் களிப்புறமாட்டான். —கீ. 5.22.

ஒ. (அநித்ய-மஸுகம் லோக-மிமம் ப்ராப்ய பஜஸ்வமாம்) நிலையில்லாததும் சுகமில்லாததுமான இந்த உலகத்தை அடைந்து என்னையே பூஜிப்பாயாக. —கீ. 9·33.

துரதிபக்ருஹத்வார-கடகே—வயிற்றுப் பிழைப்புக்கா கப் பணத்தாலும் பதவியாலும் கர்வம் பிடித்துள்ளவர்களின் வாயிலை நாடவேண்டிவருவது விதியின் பயன். அவ்விதியை மாற்றக்கூடியது சிவபிரானுடைய கருணை.

ப்ரீதிஃ—பிரம்மாவிடம் உள்ள ப்ரீதியால் விதியை மாற்ற வில்லை என்றாலும், அல்லது முன்செய்த வினையின் பயனை அனுபவித்துத் தீர்ப்பதே ஜீவனுக்கு நலம் என்பது சிவபிரா னுடைய திருவுள்ளம் என்றாலும் அதைப் பொறுமையுடன்

ஏற்றுக்கொள்வதே நமது கடமை. சிவபிரானுக்கு எது பிரீதியோ அதுவே நாம் கடைத்தேற வழி. அவன் விட்ட வழி விட்டும் என்று அவனை நம்பியிருத்தல் விவேகத்திற்கழகு.

## 20. மனக்குரங்கைக் கட்டும் கயிறு

सदा मोहाटव्यां चरति युवतीनां कुच-गिरौ
नट-त्याशा-शाखा-स्वटति झटिति स्वैरमभितः ।
कपालिन् भिक्षो मे हृदय-कपि-मत्यन्त-चपलं
दृढं भक्त्या बध्द्वा शिव भवदधीनं कुरु विभो ॥ २० ॥

ஸதா மோஹாடவ்யாம் சரதி யுவதீனும் குசகிரௌ
நடத்யாசா-சாகாஸ்வடதி ஜடிதி ஸ்வைரமபிதஃ ।
கபாலின் பிக்ஷோ மே ஹ்ருதயகபி-மத்யந்த-சபலம்
த்ருடம் பக்த்யா பத்த்வா சிவ பவததீனம் குரு விபோ ॥

(சிவ !) சிவனே ! (விபோ !) எங்கும் நிறைந்தவரே ! (ஸதா) எப்போதும் (மோஹ அடவ்யாம்) மதிமயக்கமாகிற காட்டில் (சரதி) திரிகிறது—எனது மனம். (யுவதீனும்) பருவப் பெண்களின் (குசகிரௌ) நகில்களாகிற மலை களில் (நடதி) கூத்தாடுகிறது. (ஆசா-சாகாஸு) ஆசை களாகிற கிளைகளில் (ஜடிதி) வேகமாக (அபிதஃ) நாற்புர மும் (ஸ்வைரம்) இஷ்டப்படி (அடதி) திரிகிறது. (கபாலின் பிக்ஷோ) கபாலம் ஏந்திப் பிச்சை கேட்பவரே ! (அத்யந்த சபலம்) மிகுதியாக ஓடியாடும் (மே) எனது (ஹ்ருதய-கபிம்) மனதாகிற குரங்கை (த்ருடம்) கெட்டியாக (பக்த்யா) அன்பெனும் கயிற்றினல் (பத்த்வா) கட்டி (பவத் அதீனம் குரு) உமது வசமாக்கிக்கொள்ளும்.

ஒரு குரங்கு ஒரு பனை மரத்திலேறிக் கள்ளைப் பருகிற்று. இறங்கிவரும்போது அதை ஒரு தேள் கொட்டிவிட்டது. அப் படிப்பட்ட குரங்கிற்கு மனதை ஒப்பிடுவது வழக்கம். இயற்கை யாகவே மனது குரங்கைப்போல் சஞ்சலமானது, காமமாகிய

கள்ளின் வெறியும் குரோதமாகிய தேளின் விஷமும் சேர்ந்து அதை இன்னும் அதிகப் பதட்டமுள்ளதாக்குகிறது.

கபாலின்! பிக்ஷோ!—இறைவனிடம் நாம் பிச்சை கேட்கப் போனுல் அவனே பிச்சைக்கார வேஷத்தில் கையில் கபாலமேந்தி நம்முன் வந்து 'எனக்கென்ன தருகிருய்?' என்கிருன். அப்படிக் கேட்கும்போது மனமாகிற குரங்கை பக்தியாகிற கயிற்ருல் கட்டி அவனிடம் ஒப்புவித்து விடுவதே அவனுக்குப் பிரீதியும் நாம் உய்வதற்கு வழியுமாகும்.

ஒ. பரந்துல கேழும் படைத்தபிரானை
இரந்துணி யென்பர்க ளெற்றுக்கிரக்கு
நிரந்தரமாக நினையு மடியா
ரிரந்துண்டு தன்கழ லெட்டச் செய்மாறே.

—திருமந்திரம்

## 21. மனது சிவன் தங்கும் கூடாரம்

धृति-स्तंभाधारां दृढगुण-निबद्धां सगमनां
विचित्रां पद्माढ्यां प्रति-दिवस-सन्मार्ग-घटिताम् ।
स्मरारे मच्चेतः-स्फुट-पट-कुटीं प्राप्य विशदां
जय स्वामिन् शक्त्या सह शिवगणै-स्सेवित विभो ॥२१॥

த்ருதி-ஸ்தம்பாதாராம் த்ருடகுண-நிபத்தாம் ஸகமனும் விசித்ராம் பத்மாட்யாம் ப்ரதிதிவஸ-ஸன்மார்க்க-கடிதாம். ஸ்மராரே மச்சேதஃ ஸ்புட-பட-குடீம் ப்ராப்ய விசதாம் ஜய ஸ்வாமின் சக்த்யா ஸஹ சிவகணைஃ ஸேவித-விபோ ॥ 21 ॥

(ஸ்மராரே) மன்மதனின் பகைவரே! (த்ருதி-ஸ்தம்ப-ஆதாராம்) தைரியம் எனும் நடுத்தூணை ஆதாரமாகக் கொண்டதும் (த்ருட-குண-நிபத்தாம்) உறுதியான குணமெனும் கயிற்ருல் கட்டப்பட்டதும் (ஸகமனும்) விரும்பிய இடத்திற்கு உடன் செல்வதும் (விசித்ராம்) அழகியதும் (பத்மாட்யாம்) தாமரைப்பூப் போன்ற வடிவுடையதும்

(ப்ரதி-திவஸ-ஸன்மார்க்க-கடிதாம்) தினந்தோறும் நல்ல வழியில் நாட்டப்படுவதும் ஆகிய (மத்சேதஃ) எனது மன மெனும் (விசதாம்) விசாலமான (ஸ்புட-பட குடீம்) அழுக் கற்ற படுதாவாலமைந்த கூடாரத்தை (சக்த்யா ஸஹ) பராசக்தியுடன் (ப்ராப்ய) அடைந்து (சிவகணைஃஸேவித) சிவ கணங்களால் சேவிக்கப்பெற்றவரே! (விபோ) இறை வரே! (ஸ்வாமின்) ஆண்டவரே! (ஜய) வெற்றிகொண்டு விளங்குவீராக!

ஸ்மராரே!—பரமசிவன் காமனை எரித்தவன் என்பதை தியானிப்பவன் மனத்திலும் காமஜயம் ஏற்படும். காமஜயம் இல்லாமல் பக்தி நிலை பெறாது. மனமாகிய கூடாரம் காமனாகிய சத்துருவுக்கு வசப்படக்கூடாது.

ஜய-(ஸர்வோத்கர்ஷேண வர்த்தஸ்வ, பஞ்சகோசாதி ரேகேண ப்ரகாசஸ்வ இதி பாவஃ) எல்லாவற்றிற்கும் மேலாக வும், பஞ்சகோசங்களுக்கப்பாலும் விளங்குவீராக என்று கருத்து.

சிவ—அகண்டானந்தஸ்வரூப!

ஸ்புட-பட-குடீம்—பரமசிவனுக்கு வெள்ளை வெகு பிரி யம்: பனிமலை, விபூதி, வெள்ளைமாடு, தும்பைப்பூ. மனது வெள்ளையாயிருந்தால்தான் அதில் அவன் வருவான். வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை.

த்ருதிஃ—ஒ. முறை பிறழாத எந்த திடத்தால் மனது, பிராணன், இந்திரியங்கள் முதலியவற்றின் தொழில்கள் யோகத்தால் காக்கப்படுகின்றனவோ அந்த திடம் (த்ருதி) ஸாத்விகமாம். —கீ. 18.33.

த்ருடகுணநிபத்தாம்—த்ருடகுணமாவது வைராக்கியம்.

ஒ. மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ்
வையந் தன்னொடுங் கூடுவதில்லை யான்.

—குலசேகராழ்வார்.

ஸன்மார்க்க-கடிதாம்—(ப்ரஹ்மணஃ அன்வேஷணே யோஜிதாம்| ராஜமார்க்க ஸமீபே கடிதாம்) பிரம்மத்தை நாடும் மார்க்கத்தில் நாட்டப்பட்ட மனம் சிறந்த பாதைக்கருகில் நாட்டப்பட்ட கூடாரம் போன்றது.

## 22. உள்ளங்கவர் கள்வன்

प्रलोभाद्यै-रर्थाहरण-परतन्त्रो धनि-गृहे
प्रवेशोद्युक्तस्सन् भ्रमति बहुधा तस्करपते ।
इमं चेतश्चोरं कथ-मिह सहे शंकर विभो
तवाधीनं कृत्वा मयि निरपराधे कुरु कृपाम् ॥ २२ ॥

*ப்ரலோபாத்யை-ரர்த்தாஹரண-பரதந்த்ரோ தனிக்ருஹே*
*ப்ரவேசோத்யுக்தஸ்ஸன் ப்ரமதி பஹுதா தஸ்கரபதே ।*
*இமம் சேதச்சோரம் கத-மிஹ ஸஹே சங்கர விபோ*
*தவாதீனம் க்ருத்வா மயி நிரபராதே குரு க்ருபாம் ॥ 22 ॥*

(தஸ்கரபதே !) கள்வர் தலைவரே ! (சங்கர) மங்களத்தைச் செய்பவரே ! (விபோ) எங்கும் நிறைந்தவரே ! (ப்ரலோப-ஆத்யைः) பேராசை முதலிய கெட்ட குணங்களுடன் கூடி (அர்த்தா-ஹரண-பரதந்த்ரः) பிறர்பொருளை அபகரிப்பதிலேயே வசப்பட்டு (தனி-க்ருஹே) பணக்காரர் வீட்டில் (ப்ரவேச-உத்யுக்தःஸன்) புகுவதில் முயற்சியுடையதாய் (பஹுதா) பலவகையில் (ப்ரமதி) என்மனம் சுழலுகிறது. (இமம்) இந்த (சேதச் சோரம்) மனமாகிய திருடனை (இஹ) இங்கே (கதம்) எப்படி (ஸஹே) சகிப்பேன் ? (தவ அதீனம்) இதை உமக்கு அடங்கியதாக (க்ருத்வா) செய்துகொண்டு (நிரபராதே) குற்றமற்ற (மயி) என்னிடத்தில் (க்ருபாம் குரு) அருள்புரியும்.

தஸ்கரபதே—பரமசிவனை (ஸ்தேனானாம்பதயே நமः, தஸ்கரானாம்பதயே நமः) கள்வர் தலைவர் என்றும் கொள்ளைக்காரர்களின் தலைவர் என்றும் ஸ்ரீருத்ரம் வணங்குகிறது. அவர் கள்வர்களின் தலைவராயிருப்பதால் கள்வனைப் போன்ற மனதை அடக்கவல்லவர். அவரும் கள்வராதலால் நமக்குத் தெரியாமல் நமது மனதைக் கொள்ளை கொள்ளுகிறார்.

ஒ. தோடுடையசெவியன்விடையேறியோர்
 தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடிபூசி என்னுள்ளங்
 கவர் கள்வன்
ஏடுடையமலரான் முனைநாட் பணிந்தேத்த
 அருள் செய்த
பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே.
—சம்பந்தர் தேவாரம்

ப்ரலோபாத்யை:—காமம், கோபம், லோபம் மூன்றும் மனிதனுக்கு அகச் சத்துருக்கள். பசிதாகத்தாலும் அல்லது ஆசை பூர்த்தியாலும் காமத்தின் வேகம் அடங்கும். தடைகள் நீங்கிக் காரியம் கைகூடினால் தடைகளின் மேலிருந்த கோபம் அடங்கும். ஆனால் பூமி முழுவதையும் ஜயித்து அனுபவித்தாலும் லோபத்திற்கு முடிவே இல்லை.

ஒ. காமஸ்யாந்தம் ஹி க்ஷுத்-த்ருட்ப்யாம் க்ரோதஸ்யாந்தம் பலோதயாத் । ஜநோ யாதி ந லோபஸ்ய ஜித்வா புக்த்வா திசோ புவ: ॥
—பாக. 7.15.20.

ஒ. (அதிகம் யோऽதி மன்யேத ஸ ஸ்தேநோ தண்டமர்ஹதி) தேவைக்கு அதிகமாக எவன் பொருளுக்கு ஆசைப்படுகிறானோ அவன் திருடன், தண்டனைக்குரியவன்.
—பாக. 17.15.9.

பரதந்த்ர:—மனதாகிற வேலைக்காரன் தன் வசமும் இல்லாமல் என் வசமுமில்லாமல் திருடனாக அலைகிறான். அவனால் நிரபராதியான எனக்குக் குற்றம் வருகிறது. அவன் நீ கொடுத்த வேலைக்காரன், அவனை மீண்டும் உன் வசம் ஆக்கிக்கொள்.

## 23. பக்தியினும் உயர்ந்த பதவியில்லை

करोमि त्वत्पूजां सपदि सुखदो मे भव विभो
 विधित्वं विष्णुत्वं दिशसि खलु तस्याः फलमिति ।
पुनश्च त्वां द्रष्टुं दिवि भुवि वहन् पक्षिमृगता-
 मदृष्ट्वा तत्खेदं कथमिह सहे शंकर विभो ॥ २३ ॥

கரோமி த்வத் பூஜாம் ஸபதி ஸுகதோ மே பவ விபோ
விதித்வம் விஷ்ணுத்வம் திசஸி கலு தஸ்யாः பலமிதி ।
புனச்ச த்வாம் த்ரஷ்டும் திவி புவி வஹன் பக்ஷிம்ருகதா-
மத்ருஷ்ட்வா தத்கேதம் கதமிஹ ஸஹே சங்கர விபோ ॥

(விபோ) எங்கும் நிறைந்தவரே! (த்வத் பூஜாம்) உமது பூஜையை (கரோமி) செய்கிறேன். (ஸபதி) உடனே—பிரசன்னராகி—(மே) எனக்கு (ஸுகதः) பேரின்பத்தை அளிப்பவராக (பவ) நீர் ஆகவேண்டும். (விதித்வம்) பிரம்மாவின் பதவியையோ (விஷ்ணுத்வம்) விஷ்ணுவின் பதவியையோ (தஸ்யாः) அந்தப்பூஜையின் (பலம் இதி) பலன் என்று (திசஸி கலு) நீர் அளிப்பீரே யானால் (புனச்ச) மீண்டும் (த்வாம்) உம்மை (த்ரஷ்டும்) தரிசிப்பதற்கு (திவி) ஆகாயத்திலும் (புவி) பூமியிலும் (பக்ஷிம்ருகதாம்) ஹம்ஸப்பறவை வடிவையும் வராக வடிவையும் (வஹன்) எடுத்துகொண்டு—அலைந்து—(அத்ருஷ்ட்வா) காணுமல் (தத் கேதம்) அதனுலேற்படும் துன்பத்தை (கதம்) எவ்வாறு (இஹ) இங்கே (ஸஹே) சகிப்பேன்? (சங்கர) மங்களத்தைச் செய்பவரே, (விபோ) எங்கும் நிறைந்தவரே!

ஸபதி ஸுகதோ மே பவ—பக்திக்குப் பரிசாகப் பதவி கிடைத்தால் அது எவ்வளவு உயர்ந்த பதவியானுலும் ஈசுவர ஸாக்ஷாத்காரத்திற்குத் தடையாகும். ஆகையால் வேண்டப் படுவது இங்கேயே, இப்போதே, (ஸபதி) உடனே, ஸாக்ஷாத் கார ஆனந்தானுபவம்.

செல்வச் செருக்குக்கும் கல்விச்செருக்குக்கும் எட்டாதது பரம்பொருள் என்பதை விளக்குவது லக்ஷ்மீநாயகனுன விஷ்ணுவும், ஸரஸ்வதீநாயகனுன பிரம்மாவும் கூட அடியும் முடியும் காணுமலலைந்தார்கள் என்னும் புராணக்கதை. பிரம்மாவும் விஷ்ணுவும் தங்களில் யார் பெரியவர் என்று வாதித்துக்கொண்டிருக்கையில் லிங்க வடிவான ஒரு ஒளிப் பிழம்பு ஆகாசத்தையும் பூமியையும் அளாவியதாய் அவர்கள் முன் தோன்றிற்று. அதன் அடியையோ முடியையோ முதலில்

காண்பவரே பெரியவர் என்று அவர்கள் சங்கேதம் செய்து கொண்டனர். பின்பு காட்டுப் பன்றிவடிவில் பூமியைப் பிளந்து கொண்டு விஷ்ணு கீழ் நோக்கிச் செல்ல, அன்னப்பறவை வடிவில் பிரம்மா மேலே பறந்து சென்றார். இருவர் முயற்சியும் பலிக்கவில்லை. 'நாங்கள் தோற்றோம்' என்றபோதே அவர்கள் வெற்றிபெற்றனர். அண்ணமலை தீபம் இவ்வரலாற்றை ஞாபகப்படுத்துவதாய் அமைகின்றது.

ஒ. (யஸ்யா ऽமதம் தஸ்ய மதம், மதம் யஸ்ய ந வேத ஸ:) அறியப்படாதது பிரம்மம் என்பது எவன் மதமோ, அவனால் அறியப்பட்டதாம். அறியப்பட்டது என்பது எவன் மதமோ அவன் அறியவில்லை. —கேன. உப. 2.3.

## 24. கைலாஸக்காட்சியின் பெருமை

कदा वा कैलासे कनकमणिसौधे सहगणै-
र्वसन् शंभोरग्रे स्फुट-घटित-मूर्धाञ्जलिपुटः ।
विभो सांब स्वामिन् परमशिव पाहीति निगदन्
विधातॄणां कल्पान् क्षणमिव विनेष्यामि सुखतः ॥ २४ ॥

கதா வா கைலாஸே கனகமணிஸௌதே ஸஹ-கணைர்-வஸன் சம்போரக்ரே ஸ்புட-கடித-மூர்த்தாஞ்ஜலிபுட: । விபோ ஸாம்ப ஸ்வாமின் பரமசிவ பாஹீதி நிகதன், விதாத்ரூணாம் கல்பான் க்ஷணமிவ விநேஷ்யாமி ஸுகத: ॥ 24 ॥

(கதா வா) எப்போது (கைலாஸே) கைலாஸ பர்வதத்தில் (கனகமணி-ஸௌதே) பொன்னும் ரத்னமும் இழைக்கப்பட்ட உப்பரிகையில் (சம்போ:) பரமசிவனுடைய (அக்ரே) முன்னிலையில் (ஸஹகணை:) பிரமதகணங்களுடன் (வஸன்) வசித்துக்கொண்டு (ஸ்புடகடித-

24. மூர்த்தஸ்புட-கடித-பத்தாஞ்ஜலிபுட: । நிமிஷமிவ நேஷ்யாமி । —பா. பே.

மூர்த்தாஞ்ஜலி-புட:) தலைமேல் கூப்பிய கை விளங்க (விபோ) எங்கும் நிறைந்தவரே! (ஸாம்ப) அம்பிகையுடன் கூடியவரே! (ஸ்வாமின்) இறைவரே! (பரம) மேலானவரே! (சிவ) மங்களத்தைச் செய்பவரே! (பாஹி இதி) காப்பாற்றியருளும் என்று (நிகதன்) சொல்லிக் கொண்டு (ஸுகத:) இன்பமாக (விதாத்ரூணாம் கல்பான்) பிரம்மாக்களின் கல்பங்களைப் போல் நீண்டகாலத்தை (க்ஷணம் இவ) ஒரு நொடிபோல (விநேஷ்யாமி) கழிப்பேன்?

கைலாஸே—பரமசிவ நிவாஸஸ்தானே, தத்ராஸ்தே கில இதி சிரந்தன-ப்ரஸித்தயா கிலாஸ: பரமேச்வர:, கிலாஸஸ்யாயம் கைலாஸ: தஸ்மின் ।

ஸாலோக-ஸாமீப-மோக்ஷானந்தம் இங்கு பிரார்த்திக்கப் படுகிறது.

ஸஹகணை:—நந்திகேசுவரர், சண்டிகேசுவர், ப்ருங்கி முதலியவர்களுடன்.

ஒ. தேவேப்யோ தானவேப்ய: பித்ருமுனி-பரிஷத்-ஸித்த-வித்யாதரேப்ய:, ஸாத்யேப்யச்-சாரணேப்யோ-மனுஜ-பசு-பதஜ்-ஜாதி-கீடாதிகேப்ய: । ஸ்ரீகைலாஸப்ரரூடாஸ்த்ருண-விடபி-முகாச்சாபி யே ஸந்தி தேப்ய:, ஸர்வேப்யோ நிர்விசாரம் நதி-முபரசயே சர்வபாதாச்ரயேப்ய: ॥

கல்பான் க்ஷணமிவ—காலனை ஜயித்த சிவனுடைய ஸந்நிதியில் காலம் செல்வதே தெரியாது.

## 25. விருஷபாரூட சேவை

स्तवै-र्ब्रह्मादीनां जय-जय-वचोभि-र्नियमिनां
गणानां केलीभि-र्मदकल-महोक्षस्य ककुदि ।
स्थितं नीलग्रीवं त्रिणयन-मुमाश्लिष्ट-वपुषं
कदा त्वां पश्येयं करधृत-मृगं खण्डपरशुम् ॥ २५ ॥

ஸ்தவைர்-ப்ரஹ்மாதீனும் ஜயஜய-வசோபிர்-நியமினும்
கணும் கேலீபிர் மதகல-மஹோக்ஷஸ்ய ககுதி ।
ஸ்திதம் நீலக்ரீவம் த்ரிணயன-முமாச்லிஷ்ட-வபுஷம்
கதா த்வாம் பச்யேயம் கரத்ருத-ம்ருகம் கண்டபரசும் ॥

(ப்ரஹ்மாதீனும்) பிரம்மா முதலிய தேவர்களுடைய் (ஸ்தவைஃ) துதிகளோடும் (நியமினும்) நியமங்களைக் கைக்கொண்ட ரிஷிகளுடைய (ஜய-ஜய-வசோபிஃ) 'ஜய ஜய' எனும் சொற்களோடும் (கணும்) பிரமதகணங் களுடைய (கேலீபிஃ) விளையாட்டுகளோடும்—கூடிய வராய்—(மதகல-மஹோக்ஷஸ்ய) கொழுத்து விளங்கும் பெரிய காளையின் (ககுதி) திமிலின் மேல் (ஸ்திதம்) வீற் றிருப்பவராயும் (நீலக்ரீவம்) கறுத்த கழுத்தையுடையவரா யும் (த்ரிணயனம்) மூன்று கண்களையுடையவராயும் (உமா-ச்லிஷ்ட-வபுஷம்) உமாதேவியினுல் தழுவப்பெற்ற உடலைப்படைத்தவராயும் (கர-த்ருத-ம்ருகம் கண்ட பரசும்) மானும் கண்டக்கோடரியும் ஏந்திய கைகளை யுடையவராயும் உள்ள (த்வாம்) உம்மை (கதா) எப் போது (பச்யேயம்) பார்ப்பேன் ?

**உமாச்லிஷ்ட-வபுஷம் கரத்ருத-ம்ருகம் கண்ட-பரசும்—**

ஒ. துங்கமழு மானுடையாய் சூலப்படையுடையாய்
திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய்-மங்கையொரு
பாலுடையாய் செங்கட்பணியாய் என் சென்னியின்மேல்
காலுடையாய் நீயே கதி. —தாயுமானவர்

விருஷபவாகனத்தில் உமாதேவியோடு பரமேசுவரன் பக்தகோடிகளுக்குக் காட்சியளிக்கின்ற வைபவத்தை உத்ஸவ காலங்களில் நாம் காணக் கிடைக்கிறது.

ஒ. அசிந்த்ய-மவ்யக்த-மனந்தரூபம் சிவம் ப்ரசாந்த-மம்ருதம் ப்ரஹ்மயோனிம் । தமாதிமத்யாந்த-விஹீனமேகம் விபும் சிதானந்த-மரூபமத்புதம் ॥ உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம் । த்யாத்வா முனிர்-கச்சதி பூதயோனிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸஃ பரஸ்தாத் ॥ —கைவல்யோபநிஷத் ।

## 26. திருவடி சேவைப் பேரின்பம்

कदा वा त्वां दृष्ट्वा गिरिश तव भव्यांघ्रियुगलं
गृहीत्वा हस्ताभ्यां शिरसि नयने वक्षसि वहन् ।
समाश्लिष्याघ्राय स्फुट-जलज-गन्धान् परिमला-
नलभ्यां ब्रह्माद्यै-र्मुद-मनुभविष्यामि हृदये ॥ २६ ॥

கதா வா த்வாம் த்ருஷ்ட்வா கிரிச தவ பவ்யாங்க்ரி யுகளம், க்ருஹீத்வா ஹஸ்தாப்யாம் சிரஸி நயனே வக்ஷஸி வஹன் । ஸமாச்லிஷ்யாக்ராய ஸ்புட-ஜலஜ-கந்தான் பரிமலா-னலப்யாம் ப்ரஹ்மாத்யைர்-முத-மனுபவிஷ்யாமி ஹ்ருதயே ॥ 26 ॥

(கிரிச) மலையில் வசிப்பவரே! (த்வாம்) உம்மை (த்ருஷ்ட்வா) பார்த்து (தவ) உம்முடைய (பவ்ய-அங்க்ரி-யுகளம்) சுபகரமான திருவடிகளிரண்டையும் (ஹஸ்தாப்யாம்) இரு கைகளாலும் (க்ருஹீத்வா) பிடித்து (சிரஸி) தலையிலும் (வக்ஷஸி) மார்பிலும் (வஹன்) வைத்துக் கொண்டு (ஸமாச்லிஷ்ய) இறுகத் தழுவிக்கொண்டு (ஸ்புட-ஜலஜ-கந்தான் பரிமலான்) மலர்ந்த தாமரையினது போன்ற பரிமள வாசனைகளை (ஆக்ராய) முகர்ந்து (ப்ரஹ்மாத்யைః) பிரம்மா முதலிய தேவர்களாலும் (அலப்யாம்) அடைதற்கரிய (முதம்) மகிழ்ச்சியை (கதா வா) எப்போது தான் (அனுபவிஷ்யாமி) அனுபவிக்கப் போகிறேன்?

ஒ. (யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ விகத-கல்மஷః । ஸுகேன ப்ரஹ்மஸம்ஸ்பர்ச-மத்யந்தம் ஸுக-மச்னுதே ॥) இவ்வாறு எப்போதும் தன்னை ஒருமுகப்படுத்திப் பாவந் தேய்ந்த யோகியானவன் எளிதில் பிரம்மத்துடன் ஒன்றியதால் உண்டாகும் எல்லையில்லாத ஆனந்தத்தை அனுபவிக்கிறான். —கீ. 6.28

இந்நிலையில் பரம்பொருள் படிப்பும் கேள்வியுமாய் மட்டுமில்லாமல், இருட்டறையில் காணாத தொன்றைத் தேடுவது

போலில்லாமல், தொட்டு அனுபவிப்பதாய் அபரோக்ஷானுபூதி யாய் விளங்குகிறது. இந்த ஆனந்தத்தின் ஒரு திவலைதான் உலகில் அனுபவிக்கப்படும் விஷயானந்தமனைத்தும்.

ஒ. வைத்திடுங் காலைப் பிடித்துக் கண்ணில் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டு கையால் வளைத்துக் கட்டிச்
சித்தமிசை புக இருத்திப் பிடித்துக்கொண்டு
தியக்கமற இன்பசுகஞ் சேர்வதென்றோ? —தாயுமானவர்.

## 27. மனமே சிறந்த காணிக்கை

करस्थे हेमाद्रौ गिरिश निकटस्थे धनपतौ
गृहस्थे स्वर्भूजामर-सुरभि-चिन्तामणिगणे ।
शिरस्थे शीतांशौ चरण-युगलस्थेऽखिलशुभे
कमर्थं दास्येऽहं भवतु भवदर्थं मम मनः ॥ २७ ॥

கரஸ்த்தே ஹேமாத்ரௌ கிரிச நிகடஸ்த்தே தனபதௌ
க்ருஹஸ்த்தே ஸ்வர்பூஜாமர-ஸுரபி-சிந்தாமணி-கணே।
சிரஸ்த்தே சீதாம்சௌ சரணயுகலஸ்த்தேऽகிலசுபே
கமர்த்தம் தாஸ்யேஹம் பவது பவதர்த்தம் மம மனஃ ॥27॥

(கிரிச) மலையில் உறைபவரே! (கரஸ்த்தே ஹேமாத்ரௌ) கையில் பொன்மலையிருக்க (நிகடஸ்த்தே தனபதௌ) அருகில் செல்வத்திற்கதிபதியான குபேரன் இருக்க (க்ருஹஸ்த்தே ஸ்வர்ப்பூஜா-அமரஸுரபி-சிந்தா-மணிகணே) வீட்டில் கற்பகவிருக்ஷம் காமதேனு சிந்தாமணி ஆகியவற்றின் கூட்டமிருக்க (சிரஸ்த்தே சீதாம்சௌ) தலையில் குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன் இருக்க (சரணயுகலஸ்த்தே அகில-சுபே) இரு திருவடிகளிலும் எல்லாமங்களங்களும் நிலைத்திருக்க (அஹம்) நான் (கம் அர்த்தம்) எந்த வஸ்துவை (தாஸ்யே) உமக்கு அளிப்பேன்? (மம மனஃ) என்னுடைய மனது (பவத் அர்த்தம்) உம்பொருட்டு அளிக்கப்பட்டதாக (பவது) ஆகட்டும்.

கரஸ்த்தே ஹேமாத்ரௌ—த்ரிபுரஸம்ஹாரம் செய்தபோது பரமசிவன் பொன்மலையாகிய மேருவை வில்லாகக் கொண்டார்.

நிகடஸ்த்தே தனபதௌ—ராஜாதிராஜனை குபேரனைப் பரமசிவன் தோழனாகவும் தாஸனாகவும் கொண்டவர்.

கற்பகவிருக்ஷம் காமதேனு சிந்தாமணி ஆகியவை அண்டியவர்க்கு அவர்கள் ஆசைப்படும் பொருளையெல்லாம் அளிப்பவை.

சரணயுகளஸ்த்தே அகிலசுபே—எல்லா நலன்களுக்கும் உறைவிடம் பரமசிவனுடைய பாதங்கள்.

பரமசிவனுக்குக் கொடுக்கக்கூடியதாக நம்மிடம் ஒரு பொருளும் இல்லை. நாம் ஏதாவது கொடுக்க முயன்றாலும் அது சூரியனுக்குத் தீபாராதனை செய்வதுபோலும் ஸமுத்திர ராஜனுக்கு ஸமுத்திரஜலத்தால் அர்க்கியமும் பாத்தியமும் கொடுப்பது போலுமே ஆகும். நமது முழுமனதையும் அவருக்கு அர்ப்பணம் செய்வதாலேயே அவர் திருப்தியடைவார்.

ஒ. எல்லா முனடிமையே எல்லா முனுடைமையே
எல்லா முனுடைய செயலே. —தாயுமானவர்.

## 28. இங்கேயே ஸாரூப–ஸாமீப–ஸாலோக–ஸாயுஜ்யம்

सारूप्यं तव·पूजने शिव महादेवेति संकीर्तने
सामीप्यं शिवभक्ति-धुर्य-जनता-सांगत्य संभाषणे ।
सालोक्यं च चराचरात्मक-तनु-ध्याने भवानीपते
सायुज्यं मम सिद्ध-मत्र भवति स्वामिन् कृतार्थोस्म्यहम् ॥

ஸாரூப்யம் தவ பூஜனே சிவ-மஹாதேவேதி ஸங்-கீர்த்தனே, ஸாமீப்யம் சிவபக்தி-துர்ய-ஜனதா-ஸாங்கத்ய ஸம்பாஷணே । ஸாலோக்யஞ்ச சராசராத்மகதனு-த்யானே பவானீபதே, ஸாயுஜ்யம் மம ஸித்த-மத்ர பவதி ஸ்வாமின் க்ருதார்த்தோऽஸ்ம்யஹம் ॥ 28 ॥

(ஸாரூப்யம்) ஸாரூப்யம் எனும் முக்தி நிலே (தவ) உன்னுடைய (பூஜனே) பூஜையிலும், (ஸாமீப்யம்) ஸாமீப்யம் எனும் முக்தி நிலே (சிவ மஹாதேவ இதி ஸங்கீர்த்தனே) 'சிவனே! மகாதேவனே!' என்று ஸங்கீர்த்தனம் செய்வதிலும், (ஸாலோக்யம் ச) மேலும் ஸாலோக்யம் எனும் முக்தி நிலே (சிவபக்தி-துர்ய-ஜனதா-) சிவபக்தியைத் தலேயால் தாங்கும் ஜனங்களுடன் (ஸாங்கத்ய-ஸம்பாஷணே) கூடியிருப்பதிலும் பேசுவதிலும், (ஸாயுஜ்யம்) ஸாயுஜ்யம் எனும் முக்தி நிலே (சராசராத்மக-தனு-த்யானே) சராசரப் பிரபஞ்ச வடிவான உமது திருமேனியின் தியானத்திலும் (மம) எனக்கு (அத்ர) இங்கேயே இப்பிறவியிலேயே (ஸித்தம்) கிடைத்துவிட்டதாக (பவதி) ஆகிறது. (பவானீபதே) பார்வதீ நாதனே! (ஸ்வாமின்) இறைவனே! (அஹம்) நான் (க்ருதார்த்தः) அடையவேண்டிய பயனே அடைந்தவனுக (அஸ்மி) ஆகிறேன்.

ஸாரூப்யம்—விபூதியும் ருத்ராக்ஷமும் அணிந்து சிவ வேஷந் தரித்து சிவோஹம் என்று தன்னேயே சிவனுக பாவித்துச் சிவபூஜை செய்வதால் இங்கேயே ஸாரூப்ய முக்தி எய்தப் பட்டதாகிறது.

ஒ. (தேஹோ தேவாலயः ப்ரோக்தோ ஜீவோ தேவः ஸநாதனः। த்யஜேத்-அஜ்ஞான-நிர்மால்யம் ஸோஹம் பாவேன பூஜயேத்॥) உடல் தேவாலயமாகக் கூறப்பட்டுள்ளது; ஜீவனே அனுதியான தெய்வம். அஞ்ஞானமாகிற வாடின பூவை நீக்கி 'அவனே நான்' என்று பாவித்துப் பூஜை செய்ய வேண்டும்.

ஸாமீப்யம்—மெய்மறந்து இறைவனேத் துதிக்கும்போது, துதியாகிற வாகனத்தில் ஏறிப் பறந்து, எட்டமுடியாத அவன் திருவடிகளே எட்டிப் பிடித்துவிட்ட ஆனந்தத்தை அடைகிருேமல்லவா? அதுவே ஸாமீப்ய முக்தி.

ஒ. 'கண்டேனவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்.'

ஸாலோக்யம்—ஸம்ஸார பாரத்தைத் தாங்காமல் சிவ

பக்தியையே தலையால் தாங்கி நிற்கும் அடியார்களுடன் கூடி யிருத்தலே சிவலோகத்தில் வாழும் ஸாலோக்ய முக்தி.

ஸாயுஜ்யம்—அங்கிங் கெனுதபடி எங்கும் நிறைந்திருக் கும் இறைவனை தியானித்திருத்தலே ஸாயுஜ்ய முக்தி.

ஒ॰ விரும்பில் அவனடி வீரசுவர்க்கம்
பொருந்தில் அவனடி புண்ணியலோகம்
திருந்தில் அவனடி தீர்த்தமுமாகும்
வருந்தி யவனடி வாழ்த்தவல்லார்க்கே. —திருமந்திரம்

## 29. சாக்ஷுஷீ தீக்ஷை

त्वत्पादांबुज-मर्चयामि परमं त्वां चिन्तयाम्यन्वहं
त्वामीशं शरणं व्रजामि वचसा त्वामेव याचे विभो ।
वीक्षां मे दिश चाक्षुषीं सकरुणां दिव्यै-श्चिरं प्रार्थितां
शंभो लोकगुरो मदीयमनस-स्सौख्योपदेशं कुरु ॥ २९ ॥

த்வத் பாதாம்புஜ-மர்ச்சயாமி பரமம் த்வாம் சிந்த யாம்யன்வஹம், த்வாமீசம் சரணம் வ்ரஜாமி வசஸா த்வாமேவ யாசே விபோ । வீக்ஷாம் மே திச சாக்ஷு ஷீம் ஸகருணும் திவ்யைச்சிரம் ப்ரார்த்திதாம், சம்போ லோககுரோ மதீய-மனஸஸ்-ஸௌக்யோபதேசம் குரு ॥ 29 ॥

(விபோ) எங்கும் நிறைந்தவரே! (த்வத் பாதாம்-புஜம்) உமது திருவடித்தாமரையை (அர்ச்சயாமி) பூஜிக் கிறேன். (பரமம்) சிறந்தவரான (த்வாம்) உம்மை (அன்வஹம்) எப்போதும் (சிந்தயாமி) தியானம் செய் கிறேன். (ஈசம்) இறைவரான (த்வாம்) உம்மை (சரணம் வ்ரஜாமி) சரண் அடைகின்றேன். (வசஸா) வாக்கால் (த்வாம் ஏவ) உம்மையே (யாசே) பிரார்த்திக்கிறேன். (சம்போ) இன்பத்தையளிப்பவரே! (திவ்யைः) தேவ லோக வாசிகளால் (சிரம்) நெடுங்காலமாக (ப்ரார்த்திதாம்)

விரும்பப்பட்டதும் (ஸகருணம் சாக்ஷூஷீம்) கருணை யுடன் கூடியதுமான கண் பார்வையாகிற (வீக்ஷாம்) தீக்ஷையை (மே) எனக்கு (திச) அளிப்பீராக! (லோககுரோ) உலக குருவே! (மதீயமனஸঃ) என் மன திற்கு (ஸௌக்யோபதேசம்) பேரின்பத்தையளிக்கும் உபதேசத்தை (குரு) செய்தருள் வீராக.

௯. சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையாற்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே.

—திருமந்திரம்

## 30. எங்கும் நிறைந்தவனுக்கு எங்ஙனம் பூஜை?

वस्त्रोद्धूतविधौ सहस्रकरता पुष्पार्चने विष्णुता
गन्धे गन्धवहात्मताऽन्नपचने बर्हिर्मुखाध्यक्षता ।
पात्रे कांचनगर्भताऽस्ति मयि चेद्बालेन्दुचूडामणे
शुश्रूषां करवाणि ते पशुपते स्वामिन् त्रिलोकीगुरो ॥30॥

வஸ்த்ரோத்தூத-விதௌ ஸஹஸ்ரகரதா புஷ்பார்ச்சனே விஷ்ணுதா, கந்தே கந்தவஹாத்மதா ऽன்னபசனே பர்ஹிர்முகாத்யக்ஷதா । பாத்ரே காஞ்சன-கர்ப்பதாஸ்தி மயி சேத் பாலேந்து-சூடாமணே சுச்ரூஷாம் கரவாணி தே பசுபதே ஸ்வாமின் த்ரிலோகீ-குரோ ॥ 30 ॥

(பாலேந்து சூடாமணே) இளம்பிறைச் சந்திரனை சிரத்திலணிந்தவரே! (பசுபதே) உயிர்களின் தலைவரே! (ஸ்வாமின்) இறைவரே! (த்ரிலோகீ-குரோ) மூன்றுலகங் களுக்கும் குருவே! (வஸ்த்ர-உத்தூத-விதௌ) பூஜையில் உனக்கு வஸ்திர முடுத்தி உபசரிப்பதற்கு (ஸஹஸ்ர-கரதா)

எண்ணற்ற கிரணங்களாகிற கைகளையுடைய சூரியனுடைய தன்மையும் (புஷ்பார்ச்சனே) புஷ்பங்களால் அர்ச்சிப்பதற்கு (விஷ்ணுதா) விஷ்ணுவின் தன்மையும் (கந்தே) சந்தனம் முதலிய வாசனைப் பொருள்களால் உபசரிப்பதற்கு (கந்தவஹாத்மதா) வாசனையைப் பரப்பும் வாயுவின் தன்மையும் (அன்னபசனே) அன்னத்தையாக்கி நிவேதனம் செய்வதற்கு (பர்ஹிர்முக-அத்யக்ஷதா) அக்னியை முகமாகக்கொண்ட தேவர்களின் தலைமையும் (பாத்ரே) பூஜைக்குரிய பாத்திரங்களைக் கல்பிப்பதற்கு (காஞ்சன-கர்ப்பதா) சிருஷ்டிகர்த்தாவான ஹிரண்ய கர்ப்பரின் தன்மையும் (மயி) என்னிடத்தில் (அஸ்தி சேத்) பொருந்தியிருக்குமேயானால் (தே) உமக்கு (சுச்ரூஷாம்) வழிபாட்டுபசாரத்தை (கரவாணி) செய்யக் கூடியவனாவேன்.

**விஷ்ணுவின் தன்மை**—விச்வ வியாபியாயிருப்பதால் விஷ்ணுவுக்கு அப்பெயர் வந்தது. அவரைப்போல் எங்கும் வியாபகமிருந்தால்தான் எங்கும் நிறைந்த சிவனுக்குப் பூஜை செய்ய இயலும். அல்லது விஷ்ணு ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு சிவ பூசை செய்தபோது ஒரு மலர் குறையவே தாமரைபோன்ற தம் கண்ணையே பறித்து அர்ச்சனை செய்து பூஜையை முடித்தார் என ஒரு வரலாறு உண்டு; அப்படிப்பட்ட அன்பும் திடச்சித்தமும் இருந்தால்தான் பூஜை செய்ய இயலும் என்றும் கொள்ளலாம்.

ஒ. பூர்ணஸ்யாவாஹனம் குத்ர ஸர்வாதாரஸ்ய சாஸனம் ।
ஸ்வச்சஸ்ய பாத்ய-மர்க்யஞ்ச சுத்தஸ்யாசமனம் குதః । நிர்மலஸ்ய குதః ஸ்நாநம் வஸ்த்ரம் விச்வோதரஸ்யச ॥
—பராபூஜா (சங்.)

ஒ. ரூபம் ரூபவிவர்ஜிதஸ்ய பவதோ த்யானேன யத்கல்பிதம்
ஸ்துத்யாऽநிர்வசநீயதாகிலகுரோ தூரீக்ருதா யன்மயா ।
வ்யாபித்வஞ்ச நிராக்ருதம் பகவதோ யத்தீர்த்தயாத்ராதிநா
க்ஷந்தவ்யம் ஜகதீச தத்விகலதா-தோஷத்ரயம் மத்க்ருதம் ॥

## 31. மிக்காரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்

नालं वा परमोपकारक-मिदं त्वेकं पशूनां पते
पश्यन् कुक्षिगतान् चराचरगणान् बाह्यस्थितान्
रक्षितुम् ।
सर्वामर्त्य-पलायनौषध-मतिज्वालाकरं भीकरं
निक्षिप्तं गरलं गले न गिलितं नोद्गीर्ण-मेव त्वया ॥३१॥

நாலம் வா பரமோபகாரக-மிதம் த்வேகம் பசூனாம் பதே, பச்யன் குக்ஷிகதான் சராசரகணான் பாஹ்யஸ்த்தி-தான் ரக்ஷிதும் । ஸர்வாமர்த்ய-பலாயநௌஷத-மதிஜ்-வாலாகரம் பீகரம், நிக்ஷிப்தம் கரலம் கலே ந கிலிதம் நோத்கீர்ண-மேவ த்வயா ॥ 31 ॥

(பசூனாம் பதே) உயிர்களின் தலைவரே ! (பரம உபகாரம்) சிறந்த உபகாரமாகிய (இதம் து ஏகம்) இந்த ஒன்றே (ந அலம் வா) போதாதா ? (குக்ஷிகதான்) உமது வயிற்றையடைந்திருக்கும் (சர-அசர-கணான்) அசையும் பிராணிகளையும் அசையாத மரம் செடி கொடிகளையும் (பாஹ்யஸ்த்திதான்) அவ்வாறே வெளியிலுள்ளவர்களை யும் (ரக்ஷிதும்) காப்பாற்றுவதற்கு (பச்யன்) நோக்க முடையவராய் (அதி-ஜ்வாலாகரம்) மிகுதியும் தீயைக் கக்குவதும் (பீகரம்) அச்சத்தை விளைவிப்பதும் (ஸர்வ-அமர்த்ய-பலாயன) எல்லா தேவர்களையும் ஓடச் செய்யும் (ஔஷதம்) மூலிகைப் பொருளும் ஆகிய (கரளம்) விஷமானது (கலே) உமது கழுத்தில் (த்வயா) உம்மால் (நிக்ஷிப்தம்) நிறுத்தி வைக்கப்பட்டது ; (ந கிலிதம்) விழுங்கப்படவுமில்லை (ந உத் கீர்ணம் ஏவ) உமிழப்படவு மில்லை.

தேவர்களும் அசுரர்களும் அமிருதத்தை அடைவதற்காகப் பாற்கடலைக் கடைந்தபோது, அமிருதம் தோன்றுவதற்கு முன் கொடிய ஹாலாஹல விஷம் தோன்றி விஷஜ்வாலையை

வீசிற்று. அதைக் கண்டு பயந்து தேவர்கள் பரமசிவனைச் சரண் புகுந்தார்கள். பரமசிவன் பார்வதியின் ஸம்மதத்தைப் பெற்று விஷத்தை வெண்ணெய்போல் திரட்டி எடுத்து வாயில் போட்டுக்கொண்டு விழுங்கிவிடாமல் தம் கழுத்திலேயே என்றும் இருக்கும்படி செய்துவிட்டார்—வயிற்றினுள் போனால் அங்குள்ள ஜீவர்களைத் துன்புறுத்தும், உமிழ்ந்து விட்டால் வெளியே உள்ள ஜீவர்களைத் துன்புறுத்தும் என்ற எண்ணத்தால். அதனால் சிவனுக்கு நீலகண்டர், காலகண்டர், ஸ்ரீகண்டர் (ஸ்ரீ என்றால் விஷம்) என்ற பெயர்கள் ஏற்பட்டன.

ஒ. மிக்காரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன். —திருமந்திரம்

ஒ. கடிக்கும் அரவால் மலையால் அமரர்
கடலைக் கடைய எழுகாள கூடம்,
ஒடிக்கும் உலகங்களை என்றதனை உமக்கே
அமுதாக உண்டீர் உமிழீர்,
இடிக்கும் மழைவீழ்த் திழுத்திட்டருவி இருபாலும்
ஓடி இரைக்குந் திரைக்கை,
அடிக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை அழகார்
திருப்புத் தூர் அழக னீரே.

—சுந்தரர் தேவாரம் 7.8.10.

## 32. திருநீலகண்டம்

ज्वालोग्र-स्सकलामराति-भयदः क्ष्वेलः कथं वा त्वया
दृष्टः किंच करे धृतः करतले किं पक्व-जंबूफलम् ।
जिह्वायां निहितश्च सिद्धघुटिका वा कण्ठदेशे भृतः
किं ते नीलमणि-र्विभूषण-मयं शंभो महात्मन् वद ॥३२॥

ஜ்வாலோக்ரஃ ஸகலாமராதிபயதஃ க்ஷ்வேலஃ கதம் வா த்வயா த்ருஷ்டஃ, கிஞ்ச கரே த்ருத: கரதலே கிம் பக்வ-ஜம்பூ-பலம் । ஜிஹ்வாயாம் நிஹிதச்ச ஸித்த குடிகா வா கண்டதேசே ப்ருதஃ, கிம் தே நீலமணிர்-விபூஷண-மயம் சம்போ மஹாத்மன் வத ॥ 32 ॥

(சம்போ) சம்புவே! (ஜ்வாலோக்ரஃ) தீக்கொழுந்தின் கொடுமையுடையதும் (ஸகல-அமர-அதி-பயதஃ) தேவர் களனைவருக்கும் மிகுந்த பயத்தைத் தருவதும் ஆகிய (க்ஷ்வேலஃ) விஷமானது (த்வயா) உம்மால் (கதம் வா) எப்படித்தான் (த்ருஷ்டஃ) பார்க்கப்பட்டது? (கிஞ்ச) மேலும் (கரே) கையில் (த்ருதஃ)—எப்படித்தான்—வைத் துக் கொள்ளப்பட்டது? (கரதலே) உள்ளங்கையில்—ஏந்தப்பட்டதே—(கிம் பக்வ-ஜம்பூ-பலம்) பழுத்த நாவல் பழமா, என்ன? (ஜிஹ்வாயாம்) நாக்கில் (நிஹிதச்ச) வைத்துக்கொள்ளப்பட்டதே, (ஸித்தகுடிகா வா) சித்த குளிகையாகிய மருந்தா? (கண்டதேசே ப்ருதஃ) கழுத்தில் தரிக்கப்பட்டதே, (அயம்) இது (தே) உமக்கு (கிம் நீலமணிஃ விபூஷணம்) நீலமணியாலாகிய ஆபரணமா என்ன? (மஹாத்மன்) மஹாத்மாவே (வத) சொல்லும்.

ஒ. கோல மால்வரை மத்தென நாட்டிக் கோளர
வுசுற்றிக் கடைந் தெழுந்த,
ஆலநஞ்சுண்டவர் மிக இரிய அமரர்கட்
கருள்புரிவது கருதி,
நீலம் ஆர்கடல் விடந்தனை உண்டு கண்டத்தே
வைத்த பித்த நீ செய்த,
சீலங்கண்டு நின்திருவடி அடைந்தேன் செழும்
பொழில் திருப் புன்கூர் உளானே.

—சுந்தரர் தேவாரம் 7.55.5.

விபூஷணம்—(யச்சகார களே நீலம் தச்ச ஸாதோர் விபூஷணம்) அவ்விஷம் கழுத்தைக் கறுப்பாக்கியது. அது ஸாதுவாகிய பரமசிவனுக்கு பூஷணம் போல் விளங்கியது.

—பாக. 8.7.43.

ஒ. (தப்யந்து லோகதாபேன ப்ராயசஃ ஸாதவோ ஜநாஃ। பரமாராதனம் தத்தி புருஷஸ்யாகிலாத்மனஃ) ஸாதுக்கள் உலகத்தின் துன்பத்தைப் போக்கத் தாங்கள் அத்துன்பத்தை ஏற்றுக்கொள்ளட்டும். அதுவே எல்லா உயிர்க்கும் ஆத்மா வாகிய பரும புருஷனுக்குச் செய்யும் சிறந்த ஆராதனம்.

—பாக. 8.7.44.

## 33. பக்தியே முக்தி

नालं वा सकृदेव देव भवत-स्सेवा नतिर्वा नुतिः
पूजा वा स्मरणं कथाश्रवण-मप्यालोकनं मादृशाम् ।
स्वामिन्नस्थिर-देवतानुसरणायासेन किं लभ्यते
का वा मुक्ति-रितः कुतो भवति चेत् किं प्रार्थनीयं तदा॥

நாலம் வா ஸக்ருதேவ தேவ பவதஸ்-ஸேவா நதிர் வா நுதிః பூஜா வா ஸ்மரணம் கதாச்ரவண-மப்யாலோ-கனம் மாத்ருசாம் । ஸ்வாமின்னஸ்த்திர-தேவதானுஸர-ணுயாஸேன கிம் லப்யதே கா வா முக்தி-ரிதః குதோ பவதி சேத் கிம் ப்ரார்த்தனீயம் ததா ॥ 33 ॥

(தேவ) தேவ தேவரே! (பவதः) உம்முடைய (ஸேவா) சேவையோ (நதிః வா) நமஸ்காரமோ (நுதிః) ஸ்தோத்திரமோ (பூஜா வா) பூஜையோ (ஸ்மரணம்) தியானமோ (கதாச்ரவணம் 'அபி) கதையைக் கேட்பதோ (ஆலோகனம்) தரிசிப்பதோ (ஸக்ருத் ஏவ) ஒரே தடவை (மாத்ருசாம்) என் போன்றவர்க்கு (ந அலம் வா)—ஈடேறுவதற்கு—போதாதா? (ஸ்வாமின்) இறைவரே! (இதः) இதுவன்றி (முக்திः கா வா) முக்தி என்பதுதான் என்ன? (குதः) இவ்வுபாயத்தால் (பவதி சேத்) முக்தி ஏற்படுமானல் (ததா) அப்போது (கிம் ப்ரார்த்தனீயம்) வேறு வேண்டத் தக்கது என்ன இருக்கிறது? (அஸ்த்திர-தேவதா-அனுஸரண-ஆயாஸேன) நிலையற்றை தேவதைகளை வழிபடும் பிரயாஸத்தால் (கிம் லப்யதே) அடையப் போவதென்ன?

பரமசிவனைப் பூஜிப்பது வெகு சுலபம்; தும்பைப் பூவோ, எருக்கம்பூவோ, ஒரு பில்வதளமோ போதும். 'ஏக-பில்வ-தானதோऽபி தோஷிணே நம: சிவாய' என்பது அவரைப் பற்றிய ஸ்தோத்ரம். கீதை கூறுவதுபோல் இதில் முயற்சி வீணுதல் இல்லை. எதிரிடையான பலன் உண்டாகாது. இந்த தருமத்தில் சிறிதும்கூட பெரிய பயத்தினின்றும் காப்பாற்றும். (ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்).

மற்ற தேவதைகளின் ஆராதனையில் அதிகப் பிரயாசையால் அல்ப பலன் அடையப்படுகிறது. இங்கு அல்பப் பிரயாசை யால் பெரும் பயன் அடையப்படுகிறது.

ஒ. புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. —திருமந்திரம்.

## 34. கால காலன்

किं ब्रूम-स्तव साहसं पशुपते कस्यास्ति शंभो भव-
द्धैर्यं चेदृश-मात्मन:स्थिति-रियं चान्यै: कथं लभ्यते ।
भ्रश्यद्देवगणं त्रसन्मुनिगणं नश्यत्प्रपंचं लयं
पश्यन्निर्भय एक एव विहरत्यानन्द-सान्द्रो भवान् ॥

கிம் ப்ரூமஸ்-தவ ஸாஹஸம் பசுபதே கஸ்யாஸ்தி சம்போ-பவத் தைர்யஞ் சேத்ருச-மாத்மனஃ ஸ்திதி-ரியஞ்சான்யைஃ கதம் லப்யதே । ப்ர்ச்யத்தேவகணம் த்ரஸன்-முனிகணம் நச்யத் ப்ரபஞ்சம் லயம் பச்யந்-நிர்ப் பய ஏக ஏவ விஹரத்யானந்த-ஸாந்த்ரோ பவான் ॥ 34 ॥

(பசுபதே) பசுபதியே! (தவ) உம்முடைய (ஸாஹஸம்) துணிச்சலை (கிம் ப்ரூமஃ) என்னவென்று சொல்லுவோம்? (சம்போ) சம்புவே! (பவத்) உம்முடைய (ஈத்ருசம்) இப்படிப்பட்ட (தைர்யஞ்ச) தைரியந்தான் (கஸ்ய) யாருக்கு (அஸ்தி) இருக்கிறது? (இயம்) இப்படிப்பட்ட (ஆத்மனஃ ஸ்திதிஃ) ஆத்மநிலை (அன்யைஃ) மற்றவர்களால் (கதம்) எப்படி (லப்யதே) அடையமுடியும்? (ப்ரச்யத் தேவகணம்) தேவர் குழாம் நிலை பிறழவும், (த்ரஸன் முனிகணம்) முனிவர்குழாம் நடுநடுங்கவும் (நச்யத்ப்ர பஞ்சம்) உலகம் அழியவும் (லயம்) பிரளய நிகழ்ச்சியை (பச்யன்) பார்த்துக்கொண்டு (நிர்ப்பயம்) பயமற்றவராக

(ஏகஃ ஏவ) ஒருவராகவே (பவான்) தாங்கள் (ஆனந்த-ஸாந்த்ரஃ) ஆனந்தம் நிறைந்தவராய் (விஹரதி) லீலை புரிகின்றீர்கள்.

ஒ. (யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதனஃ। ம்ருத்யுர்-யஸ்யோபஸேசனம் க இத்தா வேத யத்ரஸஃ॥) எவருக்கு பிராம்மண க்ஷத்திரியராதியோரும் (புத்திபலமும் புஜபலமும் படைத்தவர்களும் ஏனையோரும்) அன்னம் போன்றவர்களோ, எவருக்கு (உலகை உண்ணும்) யமனும் ஊறுகாய் போன்றவனோ அவர் எப்படிப்பட்டவர், எங்கே இருக்கிறார் என்று எவர்தான் அறிவர்? —கட. உப. 2.25.

ஒ. (விரிஞ்சிஃ பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்னோதி விரதிம்
விநாசம் கீநாசோ பஜதி தனதோ யாதி நிதனம்।
விதந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலித-த்ருசா
மஹாஸம்ஹாரேऽஸ்மின் விஹரதி-ஸதி த்வத்பதி-ரஸௌ॥)

பிரம்மா அழிவை அடைகிறார்; விஷ்ணு ஒழிவை அடைகிறார்; யமன் நாசத்தை அடைகிறான்; குபேரன் மரணத்தை யடைகிறான்; ஒருவர் பின் ஒருவராக வரும் இந்திரர்களின் கூட்டமும் கண்ணை மூடிப் பெருந்தூக்கத்திலாழ்கிறது. அப்படிப்பட்ட மகாப்பிரளய காலத்தில் பதிவிரதையான தாயே! உனது பதியான ஸதாசிவன் உன்னுடன் விளையாடுகிறார்.

—ஸௌந்தர்யலஹரீ 26

(ஸுதா-மப்யாஸ்வாத்ய ப்ரதி-பய-ஜரா-ம்ருத்யு-ஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதி-சதமகாத்யா திவிஷதஃ।
கராலம் யத் க்ஷ்வேலம் கபலிதவதஃ காலகலனா
ந சம்போஸ் தன்மூலம் தவ ஜனனி தாடங்க-மஹிமா॥)

பயங்கரமான மூப்பு மரணங்களை விலக்குகிற அமிருதத்தைச் சாப்பிட்டுங்கூட இந்திரன் முதலிய எல்லா தேவர்களும் பிரளயகாலத்தில் அழிவுறுகிறார்கள். கொடிய விஷத்தைச் சாப்பிட்ட சிவனுக்குக் காலத்தின் முடிவு இல்லை என்றால் அதன் காரணம் உன் காதிலுள்ள தாடங்க மகிமைதான்.

—ஸௌந்தர்யலஹரீ 28

## 35. அந்தரங்கத்திலுள்ளவனுக்கு அறிவித்தல் எதற்கு?

योगक्षेम-धुरंधरस्य सकलः-श्रेयः-प्रदोद्योगिनो
दृष्टादृष्ट-मतोपदेशकृतिनो ब्राह्यान्तर-व्यापिनः।
सर्वज्ञस्य दयाकरस्य भवतः किं वेदितव्यं मया
शंभो त्वं परमान्तरंग इति मे चित्ते स्मराम्यन्वहम् ॥३५॥

யோகக்ஷேம-துரந்தரஸ்ய ஸகலஃச்ரேயஃ ப்ரதோத்-யோகிநோ, த்ருஷ்டாத்ருஷ்ட-மதோபதேசக்ருதிநோ பாஹ்யாந்தரவ்யாபிநஃ। ஸர்வஜ்ஞஸ்ய தயாகரஸ்ய பவதஃ கிம் வேதிதவ்யம் மயா, சம்போ த்வம் பரமாந்தரங்க இதி மே சித்தே ஸ்மராம்-யன்வஹம் ॥ 35 ॥

(யோகக்ஷேம-துரந்தரஸ்ய) சேமித்தலும் காத்தலுமாகிய பாரத்தைத் தாங்குபவராயும் (ஸகலஃ-ச்ரேயஃ-ப்ரத-உத்யோகினஃ) சிறந்த நன்மைகளனைத்தையும் அளிக்கும் முயற்சியில் ஈடுபட்டவராயும் (த்ருஷ்ட-அத்ருஷ்ட-மத-உபதேச-க்ருதினஃ) காணும் இகத்திலும், காணாத பரத்திலும் கருதியவற்றை அடையும் வழியை உபதேசம் செய்யும் குருவாயும் (பாஹ்ய-அந்தர-வ்யாபினஃ) உள்ளும் புறமும் எங்கும் வியாபித்திருப்பவராயும் (ஸர்வஜ்ஞஸ்ய) அனைத்தையும் அறிந்தவராயும் (தயாகரஸ்ய) கருணை புரிபவராயும் உள்ள (பவதஃ) தங்களுக்கு (மயா) என்னால் (கிம் வேதிதவ்யம்) தெரிவித்துக்கொள்ள வேண்டியது என்ன இருக்கிறது? (சம்போ) இன்பத்தை அருள்பவரே! (த்வம்) நீர் (மே) எனக்கு (பரம அந்தரங்கஃ இதி) மிகவும் நெருங்கியிருந்து நன்மைபுரிபவர் என்று (அன்வஹம்) தினந்தோறும் (சித்தே) சித்தத்தில் (ஸ்மராமி) எண்ணிக்கொண்டிருக்கின்றேன்.

**யோகக்ஷேம-துரந்தரஸ்ய—(யோகஃ அப்ராப்தஸ்ய ப்ராபணம், க்ஷேமஃ தத்ரக்ஷணம் । அனன்யதர்சினஃ ந ஆத்மார்த்-**

தம் யோகக்ஷேமம் ஈஹந்தே । ந ஹி தே ஜீவிதே மரணே வா ஆத்மனோ க்ருதிம் குர்வந்தி । கேவலமேவ பகவச்சரணா: தே । அதோ பகவானேவ தேஷாம் யோகக்ஷேமம் வஹதி ।) யோகமாவது அடையாததை அடைவது, க்ஷேமம் அடைந்ததைக் காப்பது. பகவானையன்றி வேறொன்றைக் காணாதவர்கள் தங்களுக்கென யோக க்ஷேமத்தை நாடுவதில்லை. அவர்கள் தங்களுடைய வாழ்விலோ, மரணத்திலோ, எதிலும் பற்றில்லாதவர்கள்; பகவானையே சரணாய்க் கொண்டவர்கள். ஆகையால் பகவானே அவர்களுடைய யோக க்ஷேம பாரத்தைத் தாங்குகிறார். —சங். கீதாபாஷ்யம் 9.22.

ச்ரேயஸ்—உயர்ந்த நன்மையைத் தருவது. 'ப்ரேயஸ்'—குறுகிய பார்வையுள்ளவர்க்குப் பிரியமாய்த் தோன்றும் சிற்றின்ப ஸாதனம்.

ஒ. சிரேயஸ்ஸும் ப்ரேயஸ்ஸும் மனிதனை நாடி வருகின்றன. தீரன் அவைகளை நன்கு பரிசீலனை செய்து அவற்றின் வேறுபாட்டை உணர்கிறான். தீரன் பிரேயஸ்ஸை விட்டு சிரேயஸ்ஸை வரிக்கிறான். மந்த புத்தியுள்ளவன் பொருளை ஈட்டுதலிலும் காப்பாற்றுவதிலும் நோக்கங்கொண்டு பிரேயஸ்ஸை வரிக்கிறான். —கட. உப. 2.2.

**கிம் வேதிதவ்யம் மயா—**

ஒ. வேண்டத்தக்க தறிவோய்நீ வேண்ட
முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன் மாற்கரியோய்நீ வேண்டி
என்னைப் பணி கொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய் யானும்
அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும்
உன்தன் விருப்பன்றே. —திருவாசகம்.

இறைவனிடம் பிரார்த்திக்கும்போது நமக்கு எது நன்மை தரும் என்பதை நாமே தீர்மானித்துக் கொண்டு கேட்பது அறியாமை. '(யத்பத்ரம் தன் ம ஆஸுவ) எது உயர் நலனை யளிக்குமோ அதை அருள்வீராக' என்று தான் பிரார்த்திக்க வேண்டும்.

## 36. தேகமாகிற தேவாலயத்திற்குப் புண்யாஹவாசனம்

भक्तो भक्तिगुणावृते मुदमृतापूर्णे प्रसन्ने मनः-
कुंभे सांब तवांघ्रिपल्लवयुगं संस्थाप्य संवित्फलम् ।
सत्वं मन्त्र-मुदीरय-न्निजशरीरागार-शुद्धिं वहन्
पुण्याहं प्रकटीकरोमि रुचिरं कल्याण-मापादयन् ॥३६॥

பக்தோ பக்திகுணாவ்ருதே முதம்ருதா பூர்ணே ப்ர-ஸன்னே மனஃ-கும்பே ஸாம்ப தவாங்க்ரி-பல்லவயுகம் ஸம்ஸ்த்தாப்ய ஸம்வித்பலம் । ஸத்வம் மந்த்ர-முதீரயந்-நிஜசரீராகார-சுத்திம் வஹன், புண்யாஹம் ப்ரகடீ-கரோமி ருசிரம் கல்யாண-மாபாதயன் ॥ 36 ॥

(ஸாம்ப) பார்வதியுடன் கூடியவரே! (பக்தஃ) பக்தனாகிய நான் (பக்திகுணாவ்ருதே) பக்தியாகிற நூல் சுற்றப் பட்டதாயும் (முதம்ருதா-பூர்ணே) ஸந்தோஷமாகிற தீர்த்தம் நிறைந்ததாயும் (ப்ரஸன்னே) பிரகாசம் பொருந்தியதாயும் உள்ள (மனஃ கும்பே) மனதாகிற குடத்தில் (தவ) உம்முடைய (அங்க்ரி-பல்லவ-யுகம்) இரு திருவடிகளாகிற மாவிலேகளேயும் (ஸம்வித்-பலம்) ஞானமாகிற தேங்காயையும் (ஸம்ஸ்த்தாப்ய) வைத்து (ஸத்வம்) ஸத்துவ குணத்தை வளர்க்கும் (மந்த்ரம்) பஞ்சாக்ஷர மந்திரத்தை (உதீரயன்) ஜபித்து (நிஜ-சரீர-ஆகார-சுத்திம்) எனது தேகமாகிற வீட்டிற்குப் பரிசுத்தத்தை (வஹன்) உண்டாக்குபவனாய் (ருசிரம்) மனதிற்குகந்த (கல்யாணம்) மங்களத்தை (ஆபாதயன்) தேடுபவனாய் (புண்யாஹம்) இப்படிப்பட்ட புண்யாஹவாசனத்தை (ப்ரகடீகரோமி) உலகிற்கு வெளியிடுகிறேன்.

அசுத்தமான ஒரு வீட்டைப் புனிதமாக்குவதற்குப் புண்யாஹவாசனம் செய்வதுபோல், அசுத்தமான சரீரத்தை உள்ளும் புறமும் புனிதமாக்குவதற்கு ஆத்யாத்மிகமான புண்யாஹவாசனம் இங்கு கூறப்படுகிறது. இதற்கு வெளிப் பொருள்

எதுவும் தேவையில்லை. குடமும் நீரும் தேங்காயும் மாவிலையும் எல்லாம் உள்ளேயே சித்தமாயிருக்கின்றன.

ஸத்வம் மந்த்ரம்—சிவநாமமே சிறந்த மந்திரம்.

ஓ. சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினைமாளும்
சிவ சிவ என்றிடத் தேவருமாவர்
சிவ சிவ என்னச் சிவகதி தானே. —திருமந்திரம்

## 37. அம்ருத மதனம்

आम्नायांबुधि-मादरेण सुमन-स्संघा-स्समुद्यन्मनो
मन्थानं दृढभक्ति-रज्जु-सहितं कृत्वा मथित्वा ततः ।
सोमं कल्पतरुं सुपर्व-सुरभिं चिन्तामणिं धीमतां
नित्यानन्द-सुधां निरन्तर-रमा-सौभाग्य-मातन्वते ॥

ஆம்னாயாம்புதி-மாதரேண ஸுமனஸ்-ஸங்காஸ்-ஸமுத்யன்மனோ, மந்தானம் த்ருடபக்தி-ரஜ்ஜு-ஸஹிதம் க்ருத்வா மதித்வா ததः। ஸோமம் கல்பதரும் ஸுபர்வ-ஸுரபிம் சிந்தாமணிம் தீமதாம், நித்யானந்த-ஸுதாம் நிரந்தரரமா-ஸௌபாக்ய-மாதன்வதே ॥ 37 ॥

(ஸுமனः ஸங்காः) சிறந்த மனம் படைத்தவர்களின் குழாம் (த்ருடபக்தி-ரஜ்ஜு-ஸஹிதம்) திடமான பக்தி என்னும் கயிருடன் கூடியதும் (ஸமுத்யத் மனः) நன் முயற்சியுடன் கூடியதுமான மனதை (மந்தானம்) மத் தாக (க்ருத்வா) செய்து, (ஆம்னய அம்புதிம்) வேதமாகிற கடலை (ஆதரேண) நம்பிக்கையுடன் (மதித்வா) கடைந்து (ததः) அதிலிருந்து (ஸோமம்) உமாதேவியுடன் கூடியவ ராயும் (கல்பதரும்) கற்பகத்தரு போல் வேண்டுவார் வேண்டுவதை யளிப்பவராயும் (ஸுபர்வ ஸுரபிம்) காமதேனுவைப் போன்றவராயும் (சிந்தாமணிம்) சிந்தா மணி என்ற இரத்தினம் போன்றவராயும் (தீமதாம்) புத்தி மான்களுக்கு (நித்யானந்த ஸுதரம்) நிலையான பேரா

னந்தமாகிற அமிருதம் போன்றவராயும் (நிரந்தர-ரமா-ஸௌபாக்யம்) அழியாத மோக்ஷலக்ஷ்மியின் செல்வராயும் எல்லாம் தாமாகவே விளங்கும் பரமசிவனை (ஆதன்-வதே) அடைகிறார்கள்.

ஸுமனஸ்-ஸங்கா:—ஸுமனஸ்ஸங்கா: ஸுமனஸாம் விதுஷாம் ஸங்கா: । அதவா ஸுபர்வாணஸ் ஸுமனஸ இதி கோசமஹிம்ளு, தேவாளுமபி ஸமூஹா : ॥

இச்சொல் பாற்கடலைக் கடைந்த தேவர்களையும் குறிக்கும்; வேதத்தைக் கடையும் புத்திமான்களையும் குறிக்கும்.

தேவர்கள் அசுரர்களுடன் சமாதானம் செய்துகொண்டு அமிருதத்தை அடைவதற்காகப் பாற்கடலைக் கடைந்தார்கள். அவர்களுக்கு மந்தரமலை மத்தாகவும், பாம்பரசாகிய வாசுகி கயிறுகவும் இருந்தன. கடையும்போது முதலில் விஷமுண்டாயிற்று. அதைப் பரமசிவன் உண்டார். மேலும் கடைந்த போது (ஸோமன்) சந்திரனும், கற்பக விருக்ஷமும், காமதேனுவும், சிந்தாமணியும், அமிருதமும் உண்டாயின. லக்ஷ்மீ தேவியும் தோன்றினுள். புத்திமான்கள் மனதை மத்தாகவும், பக்தியைக் கயிறுகவும் கொண்டு வேதமாகிய கடலைக் கடையும் போது விஷமுண்டாவதில்லை. வேதத்தின் ஸாரமாகக் கடைந்தெடுத்த வெண்ணெய்போல் (ஸோமன்) உமாநாதன் தோன்றுகிறுன். தேவர்களின் அமிருத மதனத்தில் சிறந்த பொருள்கள் பல தோன்றின. இங்கு சிவன் ஒருவரே தோன்றுகிறார். அவர் ஒருவரே வேத வித்துக்களுக்குக் கற்பக விருக்ஷமாகவும், காமதேனுவாகவும், சிந்தாமணியாகவும், அமிருதமாகவும், மோக்ஷலக்ஷ்மியாகவும் விளங்குகிறார்.

## 38. சிவனுக்கும் சந்திரனுக்கும் சிலேடை

प्राक्पुण्याचल-मार्गदर्शित-सुधामूर्तिः प्रसन्नशिवः
सोमस्सद्गुण-सेवितो मृगधरः पूर्णस्तमो-मोचकः ।
चेतः पुष्कर-लक्षितो भवति चेदानन्दपाथो-निधिः
प्रागल्भ्येन विजृंभते सुमनसां वृत्तिस्तदा जायते ॥३८॥

ப்ராக்-புண்யாசல-மார்க்கதர்சித-ஸுதாமூர்த்திः ப்ர ஸன்னः சிவः, 'ஸோமஸ்ஸத்குண-ஸேவிதோ ம்ருகதரः பூர்ணஸ்தமோ-மோசகः । சேதः புஷ்கர-லக்ஷிதோ பவதி சேதானந்தபாதோ நிதிः, ப்ராகல்ப்யேன விஜ்ரும்பதே ஸுமனஸாம் வருத்திஸ்-ததா ஜாயதே ॥ 38 ॥

(ப்ராக்-புண்ய-அசல-மார்க்க) கிழக்கு திக்கிலுள்ள புனிதமான உதயகிரியின் வழியாக (தர்சித) காணப்பட்ட (ஸுதா மூர்த்திः) அமிருத வடிவினனும் (ப்ரஸன்னः) தெளிவானவனும் (சிவः) மங்களத்தைச் செய்பவனும் (ஸத்-குணஸேவிதः) சிறந்த நக்ஷத்திரக் கூட்டங்களால் சூழப்பட்டவனும் (ம்ருகதரः) மான் வடிவைத் தன்னிடம் கொண்டவனும் (பூர்ணः) கலைகளால் பரிபூர்ணனும் (தமோ-மோசகः) இருளைப் போக்குபவனும் உள்ள (ஸோமः) சந்திரன் (சேதः-புஷ்கர-லக்ஷிதः) மனமாகிற ஆகாயத்தில் காணப்பட்டவனாக (பவதிசேத்) ஆவான் எனில் (ததா) அப்போது (ஆனந்தபாதோ-நிதிः) ஆனந்தக் கடல் (ப்ராகல்ப்யேன) கம்பீரமாக (விஜ்ரும்பதே) பொங்குகிறது; (ஸுமனஸாம்) புஷ்பங்களுக்கு (வ்ருத்திः) மலர்ச்சியானது (ஜாயதே) ஏற்படுகிறது.

இது சிவனுக்கும் சந்திரனுக்கும் சிலேடை. சிவனுக்குக் கூறுமிடத்துப் பின்வருமாறு அர்த்தம் பொருந்தும்.

(ப்ராக்-புண்ய-அசல-மார்க்க-) முன் செய்த மலை போன்ற புண்ணியத்தின் வழியாக (தர்சித-) காணப்பட்ட (ஸுதா மூர்த்திः) அமிருத ஸ்வரூபமான மூர்த்தியை உடையவரும் (ப்ரஸன்னः) ஸந்தோஷமடைந்தவரும் (சிவः) மங்களத்தைச் செய்பவரும் (ஸத்குண ஸேவிதः) நற்குணங்களுக்கு உறைவிடமாகியவரும் (ம்ருகதரः) மானைக் கையிலேந்தியவரும் (பூர்ணः) பரிபூர்ணரும் (தமோ-மோசகः) அறியாமையாகிற இருட்டைப் போக்குபவரும் (ஸோமः) உமாதேவியுடன் கூடியவரும் ஆகிய பரமசிவன் (சேதः புஷ்கர-லக்ஷிதः) மனவெளியில் காணப்

படுபவராக (பவதிசேத்) ஆவார் எனில் (ததா) அப்போது (ஆனந்தபாதோ நிதி:) கடல் போன்ற ஆனந்தம் (ப்ரா-கல்ப்யேன) கம்பீரமாக (விஜ்ரும்பதே) பொங்கியெழும். (ஸுமனஸாம்) நல்ல மனம் படைத்தவர்களுக்கு (வ்ருத்தி:) பிழைக்கும் வழி (ஜாயதே) ஏற்படும்.

## 39. ராஜராஜனுடைய தர்மராஜ்யம்

धर्मो मे चतुरंघ्रिक-स्सुचरित: पापं विनाशं गतं
काम-क्रोध-मदादयो विगलिता: काला: सुखाविष्कृता: ।
ज्ञानानन्द-महौषधि: सुफलिता कैवल्यनाथे सदा
मान्ये मानसपुण्डरीक-नगरे राजावतंसे स्थिते ॥ ३९ ॥

தர்மோ மே சதுரங்க்ரிகஸ்-ஸுசரித: பாபம் விநாசம் கதம், காமக்ரோத-மதாதயோ விகலிதா: காலா: ஸுகாவிஷ்க்ருதா: । ஜ்ஞானந்த-மஹௌஷதி: ஸுப லிதா கைவல்யநாதே ஸதா மான்யே மானஸபுண்டரீக-நகரே ராஜாவதம்ஸே ஸ்த்திதே ॥ 39 ॥

(மானஸ-புண்டரீக-நகரே) மனத்தாமரையாகிற பட்டணத்தில் (மான்யே) எல்லோராலும் பூஜிக்கப்பெற்றவரும் (ராஜாவதம்ஸே) ராஜசிரேஷ்டரும் (கைவல்யநாதே) ஏகசக்ரவர்த்தியும் ஆகிய பரமசிவன் (ஸ்த்திதே) வீற்றிருத்தலால் (சது: அங்க்ரிக:) நான்கு பாதங்களையுடைய (தர்ம:) தர்மமானது (ஸுசரித:) நன்கு அனுஷ்டிக்கப்படுகிறது; (பாபம்) பாவமானது (விநாசம்) நாசத்தை (கதம்) அடைந்துவிட்டது; (காம-க்ரோத-மதாதய:) காமம் கோபம் கர்வம் முதலியவை (விகலிதா:) நீங்கிப் போய்விட்டன; (காலா:) பருவங்கள் (ஸுக-ஆவிஷ்க்ருதா:) இன்பத்தையே வெளிப்படுத்துகின்றன;

---

ஜ்ஞானந்த்ய - மஹௌஷதி: —பா. பே.

(ஜ்ஞானந்த-மஹா-ஓஷதிः) ஞானுனந்தமெனும் சிறந்த பயிர் (ஸுபலிதா) நல்ல பயனை அளிக்கின்றது.

**தர்மோ மே சதுரங்க்ரிகः—**

ஒ. (தபः சௌசம் தயா ஸத்ய-மிதி பாதாः க்ருதே க்ருதாः । அதர்மாம்சைஸ்-த்ரயோ பக்னாः ஸ்மய-ஸங்க-மதைஸ்-தவ ॥ இதானீம் தர்மபாதஸ்-தே ஸத்யம் நிர்வர்த்தயேத் யதः । தம் ஜிக்ருக்ஷத் யதர்மோऽய-மன்ருதேனைதிதः கலிः ॥) தவம், சுத்தம், தயை, ஸத்யம் என (தரும தேவதையாகிய உனக்கு) கிருத யுகத்தில் பாதங்கள் நான்கு இருந்தன. அதருமப் பகுதிகளாகிய கர்வம், பற்று, மதம் ஆகிய மூன்றினுலும் மூன்று பாதங்கள் அழிக்கப்பட்டுவிட்டன. தர்ம தேவதையே! இப்போது உனது நாலாவது பாதமாகிய ஸத்தியம் ஒன்றுதான் எஞ்சியிருக்கிறது. அதைக்கொண்டு நீ நடமாடி வருகிறுய். அஸத்தியத்தால் விருத்தியடைந்துள்ள இந்தக் கலி புருஷன் அதையும் நாசமாக்க முயலுகிறுன்.

—பரீக்ஷித்து, விருஷப வடிவில் தோன்றிய தர்ம தேவதையிடம் கூறியது : பாகவதம் 1.17-24-25.

**காமக்ரோத-மதாதயः**—காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்பவை அறுவகைப் பகைகள்; தர்மத்திற்கு அழிவு தேடுபவைகள்.

ஒ. ரஜோகுணத்தில் உதித்த காமமும் குரோதமும் பெருந்தீனி வேண்டுபவை; கொடிய பாவத்தை விளைப்பவை; அவற்றைச் சத்துருக்களாக அறியவேண்டும். —கீதை 3.37.

**காலாः ஸுகாவிஷ்க்ருதாः**—எல்லாப் பருவங்களும் எல்லா நாட்களும் இன்பத்தையே தருகின்றன.

ஒ. வேயுறு தோளி பங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்தென்
உளமேபுகுந்த அதனுல்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே. —சம்பந்தர் தேவாரம்.

ஜ்ஞானனந்த-மஹௌஷதிः ஸுபலிதா—அடுத்த சுலோகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கவும்.

ஒ. அடி முடியும் நடுவுமற்ற பரவெளி மேற் கொண்டால்
அத்துவித ஆனந்த சித்தமுண்டாம் நமது
குடி முழுதும் பிழைக்குமொரு குறையுமில்லை யெடுத்த
கோலமெல்லாம் நன்ருகுங் குறைவு நிறை வறவே.
—தாயுமானவர்

## 40. பக்திப் பயிர்

धीयन्त्रेण वचोघटेन कविता-कुल्योपकुल्याक्रमै-
रानीतैश्च सदाशिवस्य चरितांभोराशि-दिव्यामृतैः ।
हृत्केदार-युताश्च भक्तिकलमाः साफल्य-मातन्वते
दुर्भिक्षान्मम सेवकस्य भगवन् विश्वेश भीतिः कुतः ॥

தீ-யந்த்ரேண வசோகடேன கவிதா-குல்யோப-குல்-யாக்ரமை-ரானீதைச்ச ஸதாசிவஸ்ய சரிதாம்போராசி-திவ்யாம்ருதைः । ஹ்ருத்கேதாரயுதாச்ச பக்திகலமாः ஸாபல்ய-மாதன்வதே, துர்பிக்ஷான்-மம ஸேவகஸ்ய பகவன் விச்வேச பீதிः குதः ॥ 40 ॥

(தீ-யந்த்ரேண) புத்தியாகிற ஏற்ற யந்திரத்தால் (வசோ-கடேன) வாக்காகிற ஏற்றச் சாலைக் கொண்டு (கவிதா - குல்ய - உபகுல்ய - ஆக்ரமைः) கவிதையாகிற வாய்க்கால் கிளைக்கால் இவைகளில் பாய்ச்சலால் (ஆநீதைः) கொண்டுவரப்பட்ட (ஸதாசிவஸ்ய) ஸதாசிவனுடைய (சரித-அம்போ-ராசி-திவ்ய-அம்ருதைः) சரித்திரமாகிற நீர்ப்பரப்பின் தேவாமிருதம் போன்ற தண்ணீரால் (ஹ்ருத்-கேதார-யுதாः) இருதயமாகிற வயலைச் சார்ந்துள்ள (பக்தி-கலமாः) பக்தியாகிற பயிர்கள் (ஸாபல்யம்) பயனளிப்பவையாக (ஆதன்வதே) விளங்குகின்றன. (பகவன்) பகவானே ! (விச்வேச) உலகநாதனே ! (ஸேவ-

கஸ்ய மம) உமது அடியேனுகிய எனக்கு (துர்ப்பிக்ஷாத்) பஞ்சத்திலிருந்து (பீதிஃ) பயம் (குதஃ) எங்ஙனம் வரும்?

ஒ. சுலோகம் 2. சிவானந்த வெள்ளம்.

பகவன் —(ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யசஸஃ ச்ரியஃ। ஜ்ஞான வைராக்ய-யோச்சைவ ஷண்ணும் பக இதீ-ரணு॥) ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, செல்வம், ஞானம், வைராக்கியம் என்ற ஆறும் பரிபூர்ணமாயுள்ளவர் பகவான் எனப்படுவர்.

பக்தியாகிய பயிர் வளர்வதற்கும் நல்ல பயன் தருவதற்கும் பரமசிவனுடைய கதைகளையும் பெருமைகளையும் பற்றிப் பேசுவதும் சிந்திப்பதுமே தலைசிறந்த ஸாதனம். அந்தத் தண்ணீர் பாயாவிட்டால் பக்திப் பயிர் வாடிப்போகும்.

ஒ. (தச்சிந்தனம் தத்கதனம் அன்யோன்யம் தத் ப்ரபோ-தனம்। ஏததேக-பரத்வஞ்ச ப்ரஹ்மாப்யாஸம் விதுர்-புதாஃ॥) ஒரே மனதாக அதைப்பற்றிச் சிந்தித்தல், அதைப்பற்றி ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளுதல், போதித்தல், ஆகிய இதையே பிரம்மாப்பியாஸம் என்று விவேகிகள் கூறுகிறார்கள்.

—வித்யாரண்யர்-பஞ்சதசீ. 7.106.

(நித்ராயா லோகவார்த்தயாஃ சப்தாதேரபி விஸ்ம்ருதேஃ। க்வசிந் நாவஸரம் தத்வா சிந்தயாத்மான-மாத்மனி॥) நித்திரையாலும், உலகப் பேச்சாலும், இந்திரிய விஷயங்களாலும் மறதிக்குச் சிறிதும் இடங் கொடாமல் பரமாத்மாவை உள்ளத்தில் எப்போதும் சிந்திப்பாயாக.

—சங். விவேக சூடாமணி 287.

## 41. இந்திரியங்களுக்குக் கட்டளை

पापोत्पात-विमोचनाय रुचिरैश्वर्याय मृत्युंजय
स्तोत्र-ध्यान-नति-प्रदक्षिण-सपर्यालोकनाकर्णने ।
जिह्वा-चित्त-शिरोङ्घ्रि-हस्त-नयन-श्रोत्रैरहं प्रार्थितो
मामाज्ञापय तन्निरूपय मुहु-र्मामेव मा मेऽवचः ॥ ४१ ॥

பாபோத்பாத-விமோசனுய ருசிரைச்வர்யாய ம்ருத்-யுஞ்ஜய, ஸ்தோத்ர-த்யான - நதி-ப்ரதக்ஷிண - ஸபர்யா லோகனுகர்ணனே। ஜிஹ்வா-சித்த-சிரோங்க்ரி-ஹஸ்த-நயன-ச்ரோத்ரை-ரஹம் ப்ரார்த்திதோ, மாமாஜ்ஞாபய தந்நிரூபய முஹுர்-மாமேவ மா மேऽவசஃ ॥ 41 ॥

(ம்ருத்யுஞ்ஜய) யமனை ஜயித்தவரே! (பாப-உத்பாத-விமோசனுய) பாவமாகிய துன்பத்தினின்றும் விடுபடுவதற்கும் (ருசிர-ஐச்வர்யாய) இனிய சுதந்திரத்தையடைதற்கும் (ஸ்தோத்ர-த்யான—நதி-ப்ரதக்ஷிண—ஸபர்யா-ஆலோகன-ஆகர்ணனே) ஸ்தோத்திரம், தியானம், நமஸ்காரம், பிரதக்ஷிணம், பூஜை, தர்சனம், சிரவணம் ஆகியவற்றைச் செய்ய—முறையே—(ஜிஹ்வா-சித்த-சிரோ-அங்க்ரி-ஹஸ்த-நயன-ச்ரோத்ரைஃ) நாக்கு, மனது, தலை, கால்கள், கைகள், கண்கள், காதுகள் ஆகியவற்றுல் (அஹம்) நான் (ப்ரார்த்திதஃ) வேண்டிக்கொள்ளப்படுகிறேன். (மாம்) என்னை (ஆஞ்ஞாபய) அவ்வாறு செய்யக்கட்டளை இடும். (மாம்) என்னை (தத்) அவ்விஷயத்தில் (முஹுஃ) அடிக்கடி (நிரூபய) கூட்டிவைத்தருளும். (அவசஃ) வாக்கை உம்பொருட்டு பயன்படுத்தாதிருத்தல் (மே) என்னிடம் (மா ஏவ) இல்லாமலிருக்கட்டும்—வாக்கும் மற்ற இந்திரியங்களும் உமது திருப்பணியில் ஈடுபட்டிருக்கும்படி அருள்வீராக.

காலையில் செடியில் மலரும் புஷ்பம் நம்மைப் பார்த்து 'நான் வெயில் வந்தால் வாடி மாலையில் கீழே விழுந்து விடுவேன். எனக்கு வர்ணம் மட்டமாயிருந்தாலும் வாசனை குறைவாயிருந்தாலும், என்னை எடுத்து பகவானுடைய திருவடிகளில் இப்போதே சேருங்கள். அதனுல் என் பிறவி பயனுடையதாகும்' என்று கூறுவதுபோல் தோன்றும். அதேமாதிரி, இளமையில் மலர்ச்சியடைந்த நமது கண், காது முதலிய ஞானேந்திரியங்களும், கை, கால் முதலிய கர்மேந்திரியங்களும் நம்மைப் பார்த்து, 'எங்களை பகவத்கைங்கரியத்தில் பயனுறச்

செய்யுங்கள்' என்று வேண்டிக்கொள்வது போன்ற உணர்ச்சி எப்போதாவது ஏற்படாமலிராது.

ஒ. நிலைபெறுமாறெண்ணுதியே நெஞ்சே நீ வா நித்தலு மெம்பிரானுடைய கோயில் புக்குப் புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித் தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி, சங்கரா ஜய போற்றி போற்றியென்று மலைபுனல் சேர் செஞ்சடையெம்மாதி யென்று மாரூரா வென்றென்றே யலறு நில்லே. —திருநாவுக்கரசர்.

ஒ. 'மனஸ்தே பாதாப்ஜே' —சுலோகம் 7.

பாபோத்பாத-விமோசனாய—எதிர் காலத்தில் விபத்து உண்டு என்றால் அது முன் செய்த பாபம்.

மாம் ஆஜ்ஞாபய தந்நிரூபய—உம்மை வழிபடுவதற்கு உமது கட்டளையும் அருளும் வேண்டும்.

ஒ. 'அவனருளாலே அவன் தாள் வணங்கி'.
—திருவாசகம்.

மா மே (அ) வசः—வாய்திறந்து எனக்குக் கட்டளையிட்டு உபதேசம் செய்தருள்வீராக. (குரோஸ்து மௌனம் வ்யாக்யானம் சிஷ்யாஸ்து ச்சின்ன-ஸம்சயா:) குருவின் வியாக்கியானம் மௌனம், சிஷ்யர்களுடைய சந்தேகங்கள் நீங்கி விட்டன என்ற மூதுரைப்படி மௌன வ்யாக்கியானத்தைப் புரிந்து கொள்ளும் சக்தி எனக்கில்லை. ஆகையால் உம்மை நாடிய என்னிடம் மௌனம் சாதிக்கவேண்டாம்—என்றிவ் வாறும் பொருள் கொள்ளலாம்.

ஒ. சிவப்ரஸாதேன விநா ந புத்தி:
சிவப்ரஸாதேன விநா ந யுக்தி: ।
சிவப்ரஸாதேன விநா ந ஸித்தி:
சிவப்ரஸாதேன விநா ந முக்தி: ॥
—ஸூதஸம்ஹிதை.

## 42. மனதாகிற கோட்டை

गांभीर्यं परिखापदं घनधृतिः प्राकारउद्यद्गुण-
स्तोमश्चाप्तबलं घनेन्द्रियचयो द्वाराणि देहे स्थितः।
विद्या वस्तु-समृद्धिरित्यखिल-सामग्री-समेते सदा
दुर्गातिप्रिय-देव मामक-मनो-दुर्गे निवासं कुरु ॥ ४२॥

காம்பீர்யம் பரிகாபதம் கனத்ருதிः ப்ராகார உத்யத்-குண-ஸ்தோமச்சாப்தபலம் கனேந்த்ரியசயோ த்வா-ராணி தேஹே ஸ்த்திதः। வித்யா வஸ்து-ஸம்ருத்திரித்ய கில-ஸாமக்ரீஸமேதே ஸதா துர்க்காதிப்ரிய-தேவ மாமக மனோ-துர்க்கே நிவாஸம் குரு ॥ 42 ॥

(துர்க்க-அதிப்ரிய-தேவ) அடையமுடியாத கோட்டை யினுள் வசிப்பதில் மிகவும் பிரியமுள்ள தேவனே! (காம்பீர்யம்) ஆழங்காண முடியாத தன்மையை (பரிகா-பதம்) அகழியாகவுடையதும் (கனத்ருதிः) திடமான தைரியத்தை (ப்ராகாரः) மதிலாக உடையதும் (உத்யத்-குண-ஸ்தோமः) மேலோங்கி நிற்கும் நற்குணங்களின் கூட்டத்தை (ஆப்தபலம்) நட்புப்பூண்ட சேனையாகவும் (தேஹேஸ்த்திதः) தேகத்திலுள்ள (கன-இந்த்ரிய-சயः) திடமான இந்திரிய சமூகத்தை (த்வாராணி) வாயில் களாகவும் (வித்யா) ஞானத்தை (வஸ்து-ஸம்ருத்திः) தேவையான பொருள்களின் நிறைவாகவும் (இதி) இங்ஙனம் (அகில) எல்லா (ஸாமக்ரீ-ஸமேதே) பொருத்தமான அங்கங்களுடன் கூடியதுமான (மாமக) என்னுடைய (மனோ-துர்க்கே) மனதாகிற கோட்டையில் (நிவாஸம்) வசித்தலை (ஸதா) எப்போதும் (குரு) செய்தருள்வீராக.

**பரிகா-பதம்—பரிதः காயதே அவதார்யத இதி பரிகः ஜல-துர்க்கः தஸ்யாः பதம் லக்ஷணம்।**

**ஸ்தோமः—ஸமூஹः।**

துர்க்காதிப்ரியः—துர்க்கா தேவியிடம் மிகுந்த ப்ரீதியுள்ள வரே—என்றும் பொருள் கொள்ளலாம்.

கனத்ருதிः—ஒ. முறைபிறழாத எந்த திடத்தால் மனது. பிராணன், இந்திரியங்கள் முதலியவற்றின் தொழில்கள் யோகத்தால் காணப்படுகின்றனவோ அந்த திடம் ஸாத்விக மாம். —கீதை 18.33.

வித்யாः—ஒ. 'பரா' என்றும் 'அபரா' என்றும் உணர வேண்டிய வித்தைகள் இரண்டு உண்டு என்று வேதத்தை உணர்ந்தவர் கூறுவர். அவற்றுள் 'அபரா' (கீழ்) என்பது ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம், சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தம், ஜோதிஷம். 'பரா' (மேல்) என்பது எதனால் அக்ஷரம் என்றும் ஆன்மப் பொருள் அடையப்படுமோ அது.

—முண்டக உபநிஷத்து. 1 - 45.

## 43. மனதாகிற வனம்

मा गच्छ त्व-मितस्ततो गिरिश भो मय्येव वासं कुरु
स्वामिन्नादिकिरात मामकमनः कान्तार-सीमान्तरे ।
वर्तन्ते बहुशो मृगा मदजुषो मात्सर्य-मोहादय-
स्तान् हत्वा मृगया-विनोद-रुचितालाभं च संप्राप्स्यसि ॥

மா கச்ச த்வமிதஸ்ததோ கிரிச போ மய்யேவ வாஸம் குரு ஸ்வாமின்னாதி-கிராத மாமகமனः காந்தார ஸீமாந்தரே। வர்த்தந்தே பஹுசோ ம்ருகா மதஜுஷோ மாத்ஸர்ய-மோஹாதயஸ்-தான் ஹத்வா ம்ருகயா-விநோத-ருசிதாலாபஞ்ச ஸம்ப்ராப்ஸ்யஸி ॥ 43 ॥

(போ! கிரிச!) மலையில் இருப்பவரே! (த்வம்) நீர் (இதः ததः) இங்குமங்கும் (மா கச்ச) போகவேண்டாம். (ஸ்வாமின்) இறைவரே! (மயி ஏவ) என்னிடத்திலேயே

---

விநோத-மசிரா-தாகத்ய ஸம்ப்ராப்ஸ்யஸி —பா. பே.

(வாஸம் குரு) வசித்திரும். (ஆதிகிராத) ஆதிவேடரே! (மாமக) என்னுடைய (மனஃ காந்தார-ஸீமாந்தரே) மன மாகிற வனத்தின் நடுவில் (மாத்ஸர்ய-மோஹாதயஃ) பொறாமை, மதிமயக்கம் முதலிய (மதஜுஷஃ) மதம் பிடித்த (பஹுசஃ) பல (ம்ருகாஃ) மிருகங்கள் (வர்த்தந்தே) இருக்கின்றன. (தான்) அவைகளை (ஹத்வா) கொன்று (ம்ருகயா-விநோத-ருசிதா-) வேட்டையின் விநோதக் கேளிக்கையாகிய (லாபம்) பயனை (ஸம்ப்ராப்ஸ்யஸி) நன்றாக அடைவீர்.

ம்ருகயா—ம்ருகார்த்தம் அடனம்।

கிரிச—கிரௌ சயான ஸ்வாமின்।

மகாபாரதத்திலும், 'கிராதார்ஜுனீயம்' எனும் நூலிலும் பரமசிவன் அர்ஜுனனுக்குப் பாசுபதாஸ்திரம் அளிக்குமுன் ஆதிகிராத வேஷத்தில் தோன்றி அவனுடன் மல்யுத்தம் செய்தது வர்ணிக்கப்படுகிறது. யுத்த காலத்தில் சிவன் உயரக் கிளம்பவே அர்ஜுனன் இருகால்களையும் பிடித்துக்கொண் டான். கர்மக்கட்டிற்கு அகப்படாத சிவன் பக்திக்கட்டில் அகப் பட்டார்.

ஸ்ரீ ருத்ரத்திலும் தியானிக்கப்படும் ரூபம் வெகுவாக வில் லும் அம்பும் தாங்கிய வேட வடிவம்.

ஒ. நமஸ்தே அஸ்து தன்வனே। வணும் பதயே நமஃ। ம்ருகயுப்யஃ ச்வனிப்யச்ச வோ நமோ நமஃ। நமஃ காட்யாய ச ॥

—ஸ்ரீருத்ரம்

## 44. சிங்கத்திற்கும் சிவனுக்கும் சிலேடை

करलग्नमृगः करीन्द्र-भंगो
घनशार्दूल-विखण्डनोऽस्त-जन्तुः ।
गिरिशो विशदाकृतिश्च चेतः कुहरे
पंचमुखोस्ति मे कुतो भीः ॥ ४४ ॥

கரலக்னம்ருகஃ கரீந்த்ரபங்கோ
கனசார்த்தூல-விகண்டனோஸ்த-ஜந்துஃ ।
கிரிசோ விசதாக்ருதிச்ச சேதஃ குஹரே
பஞ்ச முகோஸ்தி மே குதோ பீஃ ॥ 44 ॥

(கரலக்ன-ம்ருகஃ) கையில் பிடிக்கப்பட்ட மானை யுடையதும் (கரீந்த்ர-பங்கஃ) யானைத்தலைவனை வெல்வதும் (கனசார்த்தூல-விகண்டனஃ) கொடிய புலியைக் கொல்வதும் (அஸ்தஜந்துஃ) மற்ற பிராணிகளையும் அழிப்பதும் (கிரிசஃ) மலையில் வசிப்பதும் (விசத-ஆக்ருதிச்ச) வெண்மையான உடலையுடையதுமாகிய (பஞ்சமுகஃ) சிங்கம் ஒன்று (மே) என்னுடைய (சேதஃ-) மனமாகிய (குஹரே) குகையில் (அஸ்தி) இருக்கிறது. (பீஃ) பயமானது (குதஃ) எங்கிருந்து எனக்கு வரும்?

இது சிங்கத்திற்கும் சிவனுக்கும் சிலேடை. சிவனுக்குக் கூறுமிடத்து அர்த்தம் பின்வருமாறு:—

(கரலக்னம்ருகஃ) கையில் மானை ஏந்தியவராகவும் (கரீந்தர-பங்கஃ) கஜாசுரனைக் கொன்றவராகவும் (கனசார்த்தூல விகண்டனஃ) கொடிய வியாக்கிராசுரனைக் கண்டதுண்டமாக்கியவராகவும் (அஸ்தஜந்துஃ) ஜீவர்களெல்லாம் தன்னிடம் லயமடையப் பெற்றவராகவும் (கிரிசஃ) மலையில் உறைபவராகவும் (விசதாக்ருதிஃ ச) வெண்மையான மூர்த்தியுடையவராகவும் (பஞ்சமுகஃ) ஐந்துமுகத்துடன் கூடியவராகவும் உள்ள பரமேசுவரன் (மே) என்னுடைய (சேதஃ) மனமாகிற (குஹரே) குகையில் (அஸ்தி) இருக்கிறார். (பீஃ) பயம் (குதஃ) எங்கிருந்து எனக்கு வரும்?

பஞ்சமுகஃ—ஐந்துமுகமுள்ள பரமசிவன்; அவருடைய மந்திரவடிவம் பஞ்சாக்ஷரம். அல்லது (வ்யக்தமுகஃ ஸிம்ஹஃ பசி வ்யக்தி-கரணே இதி தாதோஃ) ‘பஞ்ச’ என்ற சொல்லுக்கு அகன்ற என்ற பொருளும் உண்டு. அதனால் அடி குறுகலாயும் வாய் அகலமாயும் உள்ள பாத்திரம் பஞ்சபாத்திரம் எனப்

படும். அதுபோன்று உடல் குறுகியும் முகம் அகன்றும் இருக்கும் சிங்கத்திற்கும் 'பஞ்சமுகः' எனப் பெயர்.

அஸ்தஜந்துः—அஸ்தாः நிரஸ்தாः ஜந்தவः। அன்யத்ர, அஸ்தாः ஸ்வரூபே லீநாः ஜந்தவः யஸ்ய।

பயம் எங்கிருந்து எனக்கு வரும்?

ஒ. ந பிபேதி குதச்சனேதி। தை. உப. 29.

ஒ. ஆராலும் என்னை அமட்ட வொண்ணாதினிச்
சீரார் பிரான் வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல்லால் இனி
யார்பாடுஞ் சாரா அறிவறிந்தேனே. —திருமந்திரம்.

## 45. திருவடிக்கூட்டில் உறையும் மனதாகிய பக்ஷி

छन्दश्शाखि-शिखान्वितै-र्द्विजवरै-स्संसेविते शाश्वते
सौख्यापादिनि खेदभेदिनि सुधासारैः फलै-र्दीपिते ।
चेतः पक्षिशिखामणे त्यज वृथा-संचार-मन्यै-रलं
नित्यं शंकर-पादपद्म-युगली-नीडे विहारं कुरु ॥ ४५ ॥

சந்தः சாகி-சிகான்விதைர்-த்விஜவரைஸ்-ஸம்ஸேவிதே சாச்வதே ஸௌக்யாபாதினி கேத-பேதினி ஸுதாஸாரைः பலைர்-தீபிதே। சேதः பக்ஷிசிகாமணே த்யஜ வ்ருதா-ஸஞ்சார-மன்யை-ரலம் நித்யம் சங்கர-பாத பத்ம-யுகளீ-நீடே விஹாரம் குரு ॥ 45 ॥

(சேதः பக்ஷி-சிகாமணே) தலைசிறந்த மனமாகிய பறவையே! (சந்தः சாகிசிகான்விதைः) சாகைகளாகிற கிளைகளையும் உபநிஷதங்களாகிற உச்சிகளையும் உடையதாயும் (த்விஜ-வரைः) பிராம்மணசிரேஷ்டர்களாகிற பறவைகளால் (ஸம்ஸே-விதே) நன்கு நாடப்பெற்றதாயும் (சாச்வதே) அழிவற்றதாயும் (ஸௌக்யாபாதினி) இன்பத்

தைத் தருவதாயும் (கேத-பேதினி) துன்பத்தைப் போக்குவதாயும் (ஸுதா ஸாரைஃ) அமிருதத்திற்கொப்பான ரஸமுள்ள (பலைஃ) தர்மார்த்த காம மோக்ஷமென்னும்—பழங்களுடன்—(தீபிதே) பிரகாசிப்பதாயும்—உள்ள மரத்தில் விளங்கும்—(சங்கர-பாதபத்ம-யுகளீ-நீடே) பரமசிவனுடைய இரண்டு திருவடித் தாமரைகளாகிற கூட்டில் (நித்யம்) இடைவிடாது (விஹாரம் குரு) விளையாடுவாயாக. (வ்ருதா) வீணாக (ஸஞ்சாரம்) அலைவதை (த்யஜ) விட்டுவிடு. (அன்யைஃ அலம்) வேறு விதமான அலைச்சல்கள் போதும்.

ஸுதாஸாரை :—ஒ. (ஸுதா-தாரா-ஸாரைச்-சரணயுகலாந்தர்-விகலிதைஃ ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ) திருவடிகள் இரண்டின் இடையிலிருந்து பெருகும் அமிருத தாரையின் பிரவாகத்தால் ஐம்பூதங்களாலான உடலிலுள்ள நாடிகளெல்லாவற்றையும் நனைப்பவளாய்ப் பராசக்தி விளங்குகிறாள்.

—ஸௌந்தர்யலஹரீ 10.

பக்ஷிசிகாமணே—இங்கு மனது ஒரு சிறந்த பறவைக்கு ஒப்பிடப்படுகிறது. அது ஏன் வீணில் இங்குமங்கும் அலைந்து களைப்புற்றுக் கஷ்டப்படவேண்டும்? அதற்கு க்ஷேமமும் இன்பமும் கூட்டில் உள்ளது. இறைவன் திருவடியே அக்கூடு. அங்கே ஆனந்தமாயிருக்கட்டும்.

## 46. திருவடிமாளிகையில் மனதாகிற ஹம்ஸம்

आकीर्णे नखराजिकान्ति-विभवै-रुद्यत्सुधा-वैभवै-
राधौतेपि च पद्मराग-ललिते हंसव्रजै-राश्रिते ।
नित्यं भक्ति-वधूगणैश्च रहसि स्वेच्छा-विहारं कुरु
स्थित्वा मानस-राजहंस गिरिजानाथांघ्रि-सौधान्तरे ॥

ஆகீர்ணே நகராஜீ-காந்தி-விபவை-ருத்யத்ஸுதா வைபவை-ராதௌதேபி ச பத்மராக-லலிதே ஹம்ஸவ்ரஜைராச்ரிதே। நித்யம் பக்தி-வதூகணைச்ச ரஹஸி

ஸ்வேச்சா-விஹாரம் குரு, ஸ்தித்வா மானஸ-ராஜஹம்ஸ
கிரிஜா-நாதாங்க்ரி-ஸௌதாந்தரே ॥ 46 ॥

(மானஸ-ராஜஹம்ஸ) மனதாகிற சிறந்த அன்னமே! (நகராஜி-காந்தி-விபவைஃ) நகவரிசைகளினின்று வீசும் ஒளிப்பெருக்கால் (ஆகீர்ணே) நிறைந்ததாயும் (உத்யத்-ஸுதா-வைபவைஃ) தலையிலுள்ள வளர்கின்ற சந்திரனுடைய அமிர்தகலைப் பெருக்கால் (ஆதௌதே) வெள்ளையடிக்கப்பட்டது போலிருப்பதாயும் (அபி ச) மேலும் (பத்மராக-லலிதே) பத்மராகக் கற்களிழைத்ததால் அழகாகச் சிவந்து காணப்படுவதாய்த் தோன்றுவதும் (ஹம்ஸவ்ரஜைஃ) பரமஹம்ஸர்களாகிற அன்னப் பறவைகளால் (ஆச்ரிதே) சூழப்பெற்றதாயும் உள்ள (கிரிஜாநாத-அங்க்ரி-ஸௌதாந்தரே) பார்வதீபதியின் திருவடிகளாகிற மாளிகையினுள்ளே (ரஹஸி) இரகசியத்தில் (ஸ்தித்வா) இருந்துகொண்டு (பக்தி-வதூ-கணைச்ச) பக்தியாகிற மாதர்தணத்துடன் (ஸ்வ-இச்சா-விஹாரம்) இஷ்டப்படி கூடிக்குலாவுதலை (குரு) செய்.

நகராஜி-காந்தி-விபவைஃ—

ஒ. (நக-தீதிதி-ஸஞ்சன்ன-நமஜ்ஜன-தமோகுணு) தன் பாதங்களில் வணங்குவோர் அகத்திலுள்ள இருளை நகத்தின் காந்தியால் போக்குபவள் தேவி. —லலிதாஸஹஸ்ரநாமம் 44.

ஹம்ஸா:—(ஹம்ஸ - மந்த்ரார்த்த - த்யானபராஃ) 'ஹம்ஸஃ ஸோஹம்' என்னும் ஹம்ஸ மந்திரத்தின் பொருளை எப்போதும் தியானிப்பவர்கள்.

ஸௌதஃ—அடுக்கு மாளிகையின் மேல்மாடி. ஸத்திய லோகத்திற்கும் மேல் விளங்கும் திருவடியே அவ்விடம்.

ஸுதா—சுண்ணும்பு வெள்ளை - சந்திரகலை. நககாந்தி—தீப ஒளி.

பத்மராகலலிதே—பத்மராகக் கல்லிழைத்த மாளிகை—தாமரைபோல் சிவந்த பாதம்.

பக்திவதூ—பரமஹம்ஸர்கள் பண லக்ஷ்மியை நாடாமல் பக்தி லக்ஷ்மியை நாடுபவர்கள்.

## 47. இருதயமாகிய பூந்தோட்டம்

शंभुध्यान-वसन्त-संगिनि हृदारामेऽघजीर्णच्छदाः
स्रस्ता भक्तिलताच्छटा विलसिताः पुण्यप्रवाल-श्रिताः ।
दीप्यन्ते गुणकोरका जपवचः पुष्पाणि सद्वासना
ज्ञानानन्द-सुधा-मरन्द-लहरी संवित्फलाभ्युन्नतिः ॥

சம்புத்யான - வஸந்த - ஸங்கினி ஹ்ருதாராமேऽக ஜீர்ணச்சதாः ஸ்ரஸ்தா பக்திலதாச்சடா - விலஸிதாः புண்யப்ரவால-ச்ரிதாः । தீப்யந்தே குணகோரகா ஜபவசः புஷ்பாணி ஸத்வாஸனா ஜ்ஞானந்த-ஸுதா-மரந்த-லஹரீ ஸம்வித்பலா ऽப்யுந்நதிः ॥ 47 ॥

(சம்பு-த்யான-வஸந்த-ஸங்கினி) சிவத்தியான மென்னும் வஸந்த ருதுவின் சேர்க்கையால் (ஹ்ருதாராமே) இருதயமாகிற பூந்தோட்டத்தில் (அக-ஜீர்ணச் சதாः) பாபமாகிற பழுத்த இலைகள் (ஸ்ரஸ்தாः) உதிர்ந்து போகின்றன; (பக்தி-லதாச்சடாः) பக்தியாகிற கொடியின் சமூகங்கள் (விலஸிதாः) அழகாகப் பிரகாசிக்கின்றன; (புண்ய-ப்ரவால-ச்ரிதாः) புண்ணியமெனும் துளிர்கள் தோன்றுகின்றன; (குண-கோரகாः) நற்குணங்கள் எனும் அரும்புகளும் (ஜப-வசः புஷ்பாணி) ஜபமந்திரங்களாகிற புஷ்பங்களும் (ஸத்-வாஸனா) நன்மையாகிற வாசனையும் (ஜ்ஞானந்த-ஸுதா-மரந்த-லஹரீ) ஞான ஆனந்தமாகிற அமுதமெனும் தேனின் பெருக்கும் (ஸம்வித்-பல-அப்யுந்நதிः) ஞானானுபவமாகிற பழத்தின் உயர்வும் (தீப்யந்தே) பிரகாசிக்கின்றன.

**பக்தியாகிற கொடியின் சமூகம்**—சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம் பணிவிடை முதலிய செய்கைகளே பக்தியாகிற கொடியின் சமூகம்.

**சிவத்தியானம் வஸந்த ருதுவைப்போல் இன்ப மளிப்பது—**

ஒ. மாசில் வீணையும் மாலைமதியமும்
வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்
மூசுவண்டறை பொய்கையும் போன்றதே
ஈசனெந்தை யிணையடி நீழலே. —திருநாவுக்கரசர்.

நற்குணங்கள்—ஓர் அரசன் ஓர் இடத்திற்குப் போனால் அவனைத் தகுந்த முறையில் வரவேற்பதற்கும், பணிவிடை செய்வதற்கும் அவனுடைய பரிவாரங்களும், சேவைக்கு வேண்டிய பொருள்களும் அவனுக்கு முன்பே அவ்விடம் போய்ச் சேர்ந்து காத்திருக்கும். அவ்வாறே ஒருவனுடைய உள்ளத்தில் இறைவன் தோன்றுவதற்கு முன்பே, அவனிடம் எல்லா நற்குணங்களும் வந்து காத்திருக்கும்.
—ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

ஒ. அச்சமின்மை, மனத்தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் நிலைபெறுதல், தானம், புறக்கரணங்களை அடக்குதல், யஜ்ஞம், சாஸ்திரங்களை ஓதுதல், தவம், நேர்மை, அஹிம்ஸை, உண்மை, சினமின்மை, துறவு, அமைதி, கோள் சொல்லாமை, உயிர்களிடம் தயை, பிறர் பொருள் நயவாமை, மிருதுத் தன்மை, நாணம், மனவுறுதி, தைரியம், பிறர் குற்றம் பொறுத்தல், தளராமை, சுத்தம், வஞ்சனை செய்யாமை, செருக்கின்மை எனுமிவையெல்லாம் தெய்வ ஸம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பான நற்குணங்கள். —கீதை 16·1–3.

## 48. சிவத்தியானமாகிய நீர்நிலை

नित्यानन्द-रसालयं सुरमुनि-स्वान्तांबु-जाताश्रयं
स्वच्छं सद्द्विज-सेवितं कलुषहृत्-सद्वासनाविष्कृतम् ।
शंभुध्यान-सरोवरं व्रज मनो हंसावतंस-स्थिरं
किं क्षुद्राश्रय-पल्वल-भ्रमण-संजात-श्रमं प्राप्स्यसि ॥४८॥

நித்யானந்த-ரஸாலயம் ஸுரமுனிஸ்வாந்தாம்பு-ஜாதாச்ரயம் । ஸ்வச்சம் ஸத்-த்விஜஸேவிதம் கலுஷஹ்ருத் ஸத்வாஸனுவிஷ்க்ருதம் । சம்புத்யான-ஸரோவரம் வ்ரஜ

மனோஹம்ஸாவதம்ஸ ஸ்த்திரம் கிம்க்ஷுத்ராச்ரய-பல்வல-
ப்ரமண-ஸஞ்ஜாத-ச்ரமம் ப்ராப்ஸ்யஸி ॥ 48 ॥

(நித்யானந்த-ரஸாலயம்) அழிவிலாத ஆனந்தமாகிற நீர் நிறைந்ததும் (ஸுரமுனி-ஸ்வாந்த-அம்புஜா தாச்ரயம்) தேவரிஷிகளின் இருதயமாகிற தாமரைக்கிருப்பிடமாகியதும் (ஸ்வச்சம்) தெளிவானதும் (ஸத்-த்விஜஸேவிதம்) ஸாதுக்களாகிற பக்ஷிகளால் நாடப்பெற்றதும் (கலுஷஹ்ருத்) பாபமாகிற அழுக்கைப் போக்குவதும் (ஸத்வாஸனு ஆவிஷ்க்ருதம்) புண்ணியமாகிற வாஸனையை வெளிப்படுத்துவதும் ஆகிய (சம்புத்யான-ஸரோவரம்) சிவத்தியானம் எனும் சிறந்த நீர்நிலையை (ஸ்திரம்) நிலையாக (வ்ரஜ) அடைவாயாக! (மனோ-ஹம்ஸ-அவதம்ஸ) மனமென்னும் சிறந்த அன்னமே! (க்ஷுத்ர-ஆச்ரய-பல்வல-) அற்பமான சேவையாகிய சிறு குட்டையில் (ப்ரமண-ஸஞ்ஜாத-ச்ரமம்) உழல்வதால் உண்டாகும் கஷ்டத்தை (கிம் ப்ராப்ஸ்யஸி) ஏன் அடைகிறாய்?

க்ஷுத்ராச்ரய-பல்வலம்—ஒ. விசித்திரமான சொற்றொடர்களையுடையதாயினும் எந்த வாக்கு உலகைப் புனிதமாக்குகின்ற பகவானுடைய பெருமையைக் கொஞ்சங்கூட வர்ணிக்காமலிருக்கிறதோ அதைக் காக்கைக்கொப்பான காமிகள் தான் தீர்த்தம் என்று நினைப்பர்; மகான்கள் அதைக் குட்டை எனக் கருதுவர். அதில் ஒருபோதும் பரமஹம்ஸர்கள் ரமிக்க மாட்டார்கள். காக்கை மூழும் எச்சில் குழியில் ஹம்ஸம் ரமிக்குமா?
—பாகவதம் 1.5.10.

சிலேடை—பொய்கை - சிவத்தியானம்; நீர் - ஆனந்தம்; தாமரை—முனிவருள்ளம்; தெளிவு - மனத்தெளிவு; பக்ஷிகள் - முனிவர்கள்; வாஸனை - நற்கர்ம வாஸனை; சேற்றுக்குட்டை - உலகு.

## 49. பக்திக்கொடியில் முக்திப்பழம்

आनन्दामृत-पूरिता हरपदांभोजालवालोद्यता
स्थैर्योपघ्न-मुपेत्य भक्तिलतिका शाखोपशाखान्विता ।
उच्चै-र्मानस-कायमान-पटली-माक्रम्य निष्कल्मषा
नित्याभीष्ट-फलप्रदा भवतु मे सत्कर्म-संवर्धिता ॥ ४९ ॥

ஆனந்தாம்ருத-பூரிதா ஹரபதாம்போஜாலவாலோ-த்யதா ஸ்த்தைர்யோபக்ன-முபேத்ய பக்திலதிகாசா-கோபசாகான்விதா। உச்சைர்-மானஸ-காயமான-படலீ-மாக்ரம்ய நிஷ்கல்மஷா நித்யாபீஷ்ட-பலப்ரதா பவது மே ஸத்கர்ம-ஸம்வர்த்திதா ॥ 49 ॥

(ஆனந்தாம்ருத-பூரிதா) ஆனந்தமாகிய அமுத நீரால் போஷிக்கப் பெற்றதும் (ஹர-பத-அம்போஜ -) சிவனுடைய பாதகமலமாகிற (ஆலவால-உத்யதா) பாத்தியில் முளைத்து வளர்வதும் (ஸ்த்தைர்யோபக்ன-முபேத்ய) திடச்சித்தமெனும் கொம்பைப்பற்றிக் கொண்டிருப்பதுமான (பக்திலதிகா) பக்தியெனும் கொடி (சாகோபசாகான்விதா) கிளைகளும் உபகிளைகளும் உடையதாக (உச்சைர்-மானஸ-காயமான-படலீம்) உயர்ந்த மனமெனும் பந்தலின் மேல் (ஆக்ரம்ய) படர்ந்து (நிஷ்கல்மஷா) குற்றமற்றதாய் (ஸத்கர்மஸம்வர்த்திதா) புண்ணியச் செயல்களால் நன்கு வளர்ந்து (மே) எனக்கு (நித்ய-அபீஷ்ட-பலப்ரதா) என்றும் மனதிற்கினிய முக்தியெனும் பழத்தை யளிப்பதாய் (பவது) விளங்கட்டும்.

இங்கே படம் பிடித்துக் காட்டப்படுவது ஓர் அழகான பாத்தி, அதில் ஊன்றின கொம்பைச் சுற்றிப் படரும் கொடி, மேலே அது படரும் பந்தல், பூச்சியரிக்காத இலைகள், அரும்பு, மலர், காய், இனிய பழம்.

பாத்தி - இறைவன் திருவடி; நீர் - தியான ஆனந்தம்; கொம்பு - திடச்சித்தம்; (ஒ. எந்த திடத்தால் மனது பிராணன்

இந்திரியங்கள் முதலியவற்றின் தொழில்கள் யோகத்தால் காக்கப்படுகின்றதோ அந்த திடம் ஸாத்விகமாம்-கீதை); கொடி - பக்தி; பந்தல் - உயர்ந்த மனம்; செய்நேர்த்தி - நற்கருமம்; பழம் - முக்தி.

## 50. மல்லிகைக்கும் சிவனுக்கும் சிலேடை

सन्ध्यारंभ-विजृंभितं श्रुतिशिरस्थानान्त-राधिष्ठितं
सप्रेम-भ्रमराभिराम-मसकृत् सद्वासना-शोभितम् ।
भोगीन्द्राभरणं समस्त-सुमनः-पूज्यं गुणाविष्कृतं
सेवे श्रीगिरि-मल्लिकार्जुन-महालिंगं शिवालिंगितम् ॥

ஸந்த்யாரம்ப-விஜ்ரும்பிதம் ச்ருதிசிரஸ்த்தானந்த-ராதிஷ்டிதம் ஸப்ரேம-ப்ரமராபிராம-மஸக்ருத்ஸத்வாஸனா-சோபிதம்। போகீந்த்ராப்ரணம் ஸமஸ்த-ஸுமனஃ பூஜ்யம் குணாவிஷ்க்ருதம் ஸேவே ஸ்ரீகிரி-மல்லிகார்ஜுன-மஹாலிங்கம் சிவாலிங்கிதம் ॥ 50 ॥

(ஸந்த்யாரம்ப-விஜ்ரும்பிதம்) மாலை வரும்போது மலர்வதும் (ச்ருதிசிர-ஸ்த்தானந்தர-அதிஷ்டிதம்) காது, தலை ஆகியவற்றுள் வைக்கப்படுவதும் (ஸப்ரேம-ப்ரமர-அபிராமம்) ஆசையுடன்கூடிய வண்டுகளால் அழகியதும் (அஸக்ருத்) எப்போதும் (ஸத்வாஸனா சோபிதம்) நல்ல மணத்துடன் விளங்குவதும் (போகீந்த்ர-ஆபரணம்) சிறந்த போகிகளை அலங்கரிப்பதும் (ஸமஸ்த-ஸுமனஃ பூஜ்யம்) புஷ்பங்கள் அனைத்துள்ளும் போற்றப்படுவதும் (குணாவிஷ்க்ருதம்) அழகு மணம் முதலிய குணங்களால் பிரகாசிப்பதும் (சிவாலிங்கிதம்) பார்வதியால் தழுவப் பெற்றதுமான (ஸ்ரீகிரி-மல்லிகார்ஜுன-மஹாலிங்கம்) ஸ்ரீகிரியிலுள்ள மல்லிகார்ஜுன மஹாலிங்கம் எனும் மல்லிகையை நாடுகின்றேன்.

இது மல்லிகைக்கும் சிவனுக்கும் சிலேடை. சிவனுக்குக் கூறுமிடத்துப் பின்வருமாறு அர்த்தம் பொருந்தும்.

(ஸந்த்யாரம்ப-விஜ்ரும்பிதம்) மாலையின் துவக்கத்தில் நடனத்தில் களிப்பவரும் (ச்ருதி-சிர-ஸ்த்தானந்தர-அதிஷ்டிதம்) வேதத்தின் உச்சியிலுள்ள உபநிஷதங்களிடை நிலைபெற்றவரும் (ஸப்ரேம-ப்ரமராபிராமம்) பிரேமையுடன் கூடிய பிரமராம்பிகையின் சேர்க்கையால் அழகியவரும் (அஸக்ருத்) எப்போதும் (ஸத்வாஸனா-சோபிதம்) ஸாதுக்களுடைய பக்தி மணம் கமழ்பவரும் (போகீந்த்ராபரணம்) சிறந்த பாம்புகளை ஆபரணங்களாகக் கொண்டவரும் (ஸமஸ்த-ஸுமனஃ பூஜ்யம்) எல்லா தேவர்களாலும் பூஜிக்கப்பட்டவரும் (குணாவிஷ்க்ருதம்) நற்குணங்களால் பிரசித்திபெற்றவரும் (சிவா-ஆலிங்கிதம்) பராசக்தியால் தழுவப்பெற்றவரும் ஆகிய (ஸ்ரீகிரி-மல்லிகார்ஜுன-மஹாலிங்கம்) ஸ்ரீகிரி எனும் மலைமேல் உள்ள மல்லிகார்ஜுனர் என்ற மஹாலிங்க மூர்த்தியை (ஸேவே) ஸேவிக்கின்றேன்.

## 51. வண்டுக்கும் சிவனுக்கும் சிலேடை

भृंगीच्छा-नटनोत्कटःकरिमदग्राही स्फुरन्माधवा-
ह्लादो नादयुतो महासितवपुः पंचेषुणा चादृतः ।
सत्पक्ष-स्सुमनो-वनेषु स पुनः साक्षान्मदीये मनो
राजीवे भ्रमराधिपो विहरतां श्रीशैलवासी विभुः ॥ ५१ ॥

ப்ருங்கீச்சா - நடனோத்கடஃ கரிமதக்ராஹீ ஸ்புரன் - மாதவா - ஹ்லாதோ நாதயுதோ மஹாஸிதவபுஃ பஞ்சேஷுணா சாத்ருதஃ। ஸத்பக்ஷஸ் - ஸுமனோவனேஷு ஸ புனஃ ஸாக்ஷான்மதீயே மனோ ராஜீவே ப்ரமராதிபோ விஹரதாம் ஸ்ரீசைலவாஸீ விபுஃ ॥ 51 ॥

(ப்ருங்கீ-இச்சா-நடன-உத்கடஃ) பெண் வண்டின் விருப்பத்திற்கிணங்க நடிப்பதில் ஆசை மிகுந்ததும்

(கரி-மத-க்ராஹீ) யானைகளின் மதஜலத்தைப் பருகுவதும் (ஸ்புரன்-மாதவ-ஆஹ்லாதः) பிரகாசிக்கின்ற வஸந்த ருதுவைக்கண்டு மகிழ்ச்சியடைவதும் (நாத-யுதः) ரீங்கார நாதத்துடன் கூடியதும் (மஹா-அஸித-வபுः) மிகவும் கறுத்த உடலையுடையதும் (பஞ்சேஷுணு ச ஆத்ருதः) மன்மதனுல் ஆதரிக்கப்பட்டதும் (ஸுமனோ வனேஷு) புஷ்பவனங்களில் (ஸத்பக்ஷः) நல்ல ஆசை கொண்டதும் (ஶ்ரீசைலவாஸீ) அழகிய மலையில் வசிப்பதும் (விபுः) எங்கும் செல்லும் சக்தியுடையதும் ஆகிய (ஸः) அந்த (ப்ரமராதிபः) சிறந்த ஆண் வண்டு (புனः) அடிக்கடி (ஸாக்ஷாத்) எனக்கெதிரில் (மதீயே) என்னுடைய (மனோ ராஜீவே) மனதாகிற தாமரையில் (விஹரதாம்) விளையாடட்டும்.

இது வண்டுக்கும் சிவனுக்கும் சிலேடை. சிவனுக்குக் கூறுமிடத்துப் பின்வருமாறு அர்த்தம் பொருந்தும்.

(ப்ருங்கி-இச்சா-நடன-உத்கடः) பிருங்கி ரிஷியின் விருப்பத்திற்கிணங்க நடனம் செய்வதில் ஆசை கொண்டவரும் (கரி-மத-க்ராஹீ) கஜாசுரனுடைய கொழுப்பை அடக்கியவரும் (ஸ்புரன்-மாதவ-ஆஹ்லாதः) மோகினி வடிவில் விளங்கிய விஷ்ணுவைக் கண்டு மகிழ்ச்சி பொங்கியவரும் (நாதயுதः) பிரணவ நாதத்துடன் கூடியவரும் (மஹா-ஸித-வபு:) மிகவும் வெண்மையான திருவுருவையுடையவரும் (பஞ்சேஷுணு ச ஆத்ருதः) மன்மதனுல் தன் பாணத்திற்கு இலக்காகக் கொள்ளப்பட்டவரும் (ஸுமனோவனேஷு) தேவர்களைக் காப்பதில் (ஸத்பக்ஷः) நல்ல ஆசையுடையவரும் (ஶ்ரீசைல-வாஸீ) ஶ்ரீசைலம் எனப் பெயர்பெற்ற மலையில் கோயில் கொண்டவரும் (விபுः) எங்கும் நிறைந்தவரும் ஆகிய (ஸः) அந்த (ப்ரமராதிபः) பிரமராம்பிகையின் பதியான சிவன் (புனः) அடிக்கடி (ஸாக்ஷாத்) எனக்கெதிரில் (மதீயே) என்

னுடைய (மனோராஜீவே) மனதாகிற தாமரையில் (விஹரதாம்) லீலை புரியட்டும்.

இங்கு ஒரு வண்டு யானையின் மதநீரைப் பருகிவிட்டு தாமரைப் பூவைச் சுற்றி ரீங்காரம் செய்யும் காட்சியைக் கொண்டு சிவதத்துவம் விளக்கப்படுகிறது.

## 52. மேகத்துக்கும் சிவனுக்கும் சிலேடை

कारुण्यामृत-वर्षिणं घनविपद्-ग्रीष्मच्छिदा-कर्मठं
विद्यासस्य-फलोदयाय सुमन-स्संसेव्य-मिच्छाकृतिम् ।
नृत्यद्भक्त-मयूर- मद्रिनिलयं चंचज्जटा-मण्डलं
शंभो वांछति नीलकन्धर सदा त्वां मे मनश्चातकः ॥

காருண்யாம்ருத - வர்ஷிணம் கனவிபத் - க்ரீஷ்மச் - சிதா-கர்மடம், வித்யா-ஸஸ்ய-பலோதயாயஸுமனஸ்-ஸம்-ஸேவ்ய-மிச்சாக்ருதிம்। ந்ருத்யத்பக்த-மயூர-மத்ரிநிலயம் சஞ்சஜ்ஜடா மண்டலம், சம்போ வாஞ்சதி நீலகந்தர ஸதா. த்வாம் மே மனச்சாதகஃ ॥ 52 ॥

(காருண்ய-அம்ருத-வர்ஷிணம்) கருணையால் அமுதம் போன்ற மழையைப் பொழிவதும் (கன-விபத்-க்ரீஷ்-ச்சிதா-கர்மடம்) கடுங் கோடையின் கொடிய துன்பத்தைப் போக்குந் தொழிலில், முனைந்ததும் (வித்யா-ஸஸ்ய-பலோதயாய) வித்தை எனும் பயிர் நல்ல பயனைத் தரும்பொருட்டு (ஸுமனஸ்-ஸம்ஸேவ்யம்) நல்ல மனம் படைத்த விவசாயிகளால் வேண்டப்பட்டதும் (இச்சா-ஆக்ருதிம்) இஷ்டப்படி உருவமெடுப்பதும் (ந்ருத்யத்-பக்த-மயூரம்) நடனமாடும் மயில்களாகிற பக்தர்களையுடையதும் (அத்ரி-நிலயம்) மலைகளின்மேல் உறைவதும் (சஞ்சஜ்-ஜடாமண்டலம்) சலிக்கின்ற மின்னல் கூட்டங்களையுடையதும் ஆகிய (நீலகந்தர) கார்மேகமே!

(சம்போ) மங்களஸ்வரூபியே ! (மே) எனது (மனச்-சாதகஃ) மனமாகிற சாதகபக்ஷி (த்வாம்) உன்னை (ஸதா) எப்போதும் (வாஞ்சதி) ஆவலுடன் விரும்பி நிற்கின்றது.

இது மேகத்துக்கும் சிவனுக்கும் சிலேடை. சிவனுக்குக் கூறுமிடத்துப் பின்வருமாறு அர்த்தம் பொருந்தும்.

(காருண்ய-அம்ருத-வர்ஷிணம்) கருணையாகிற அமுதத்தைப் பொழிபவரும் (கன-விபத்-க்ரீஷ்மச்சிதா-கர்மடம்) கடுங்கோடை வெயில்போன்று பொசுக்கும் தாபங்களைப் போக்கும் கருமத்தில் கண்ணுகியவரும் (வித்யா-ஸஸ்ய-பலோதயாய) வித்தையாகிற பயிர் நல்ல பயனை யளிக்கும் பொருட்டு (ஸுமனஸ்-ஸம்ஸேவ்யம்) நன்மனம் படைத்தவர்களால் சேவிக்கப்பட்டவரும் (இச்சா-ஆக்ருதிம்) விரும்பிய வண்ணம் வடிவெடுப்பவரும் (ந்ருத்யத்-பக்த - மயூரம்) ஆனந்தநடனம் செய்யும் பக்தர்களாகிற மயில்களையுடையவரும் (அத்ரிநிலயம்) மலையில் வசிப்பவரும் (சஞ்சஜ்-ஜடாமண்டலம்) அசைந்தாடுகிற ஜடாமண்டலத்தை யுடையவரும் ஆகிய (சம்போ) மங்களஸ்வரூபியே! (நீலகந்தர) கரிய கழுத்துடையவரே! (மே) எனது (மனச்சாதகஃ) மனமாகிற சாதகபக்ஷி (த்வாம்) உம்மை (ஸதா) எப்போதும் (வாஞ்சதி) ஆவலுடன் விரும்பி நிற்கின்றது.

சாதகபக்ஷி—மழை நீரைத்தான் விரும்பும், தரையில் விழுந்த நீரை விரும்பாது. அவ்வண்ணம் பக்தர்கள் பகவானுடைய அருளையே நாடி நிற்பார்கள், உலக இன்பங்களை விரும்ப மாட்டார்கள்.

ஒ. வானமாய் நின்றின்ப மழையாயிரங்கியெனை
வாழ்விப்ப துன்பரம் காண். —தாயுமானவர்.

ஒ. கண்டாருளத்திற் காலூன்றிப் பெய்யும் கருணைமுகில்.
—தாயுமானவர்.

## 53. மயிலுக்கும் சிவனுக்கும் சிலேடை

आकाशेन शिखी समस्तफणिनां नेत्रा कलापी नता-
ऽनुग्राहि-प्रणवोपदेश-निनदैःकेकीति यो गीयते ।
श्यामां शैलसमुद्भवां घनरुचिं दृष्ट्वा नटन्तं मुदा
वेदान्तोपवने विहार-रसिकं तं नीलकण्ठं भजे ॥ ५३॥

ஆகாசேன சிகீ ஸமஸ்த பணினும் நேத்ரா கலாபீ நதா ऽனுக்ராஹீ-ப்ரணவோபதேச - நினதைঃ கேகீதி யோ கீயதே। ச்யாமாம் சைலஸமுத்பவாம் கனருசிம் த்ருஷ்ட்வா நடந்தம் முதா, வேதாந்தோபவனே விஹார-ரஸிகம் தம் நீலகண்டம் பஜே ॥ 53 ॥

(ஆகாசேன சிகீ) ஆகாயத்தைக் கொண்டையாகக் கொண்டதும் (ஸமஸ்த-பணினும் நேத்ரா கலாபீ) எல்லாப் பாம்புகளுக்கும் நாயகனை ஆதிசேஷனுல் கலாபத்தை யுடையதும் (நத-அனுக்ராஹி-) வணங்கினவர்களுக்கருள் சுரந்து (ப்ரணவ-உபதேச-நிநதைঃ) பிரணவத்தை உப தேசிக்கும் நாதங்களால் (கேகீ இதி) கேகீ என்றவாறு கூவுவதும் போன்ற மயில் என்று (யঃ) எவன் (கீயதே) துதிக்கப்படுகிருனே ;—(சைல ஸமுத்பவாம் கனருசிம் ச்யாமாம்) மலையிலுதித்த பார்வதியின் மேகம் போன்ற காந்தியை (த்ருஷ்ட்வா) பார்த்து (முதா) மகிழ்ச்சியால் (நடந்தம்) நடனம் செய்பவனும் (வேதாந்த-உபவனே) வேதாந்தம் எனும் நந்தவனத்தில் (விஹார-ரஸிகம்) விளை யாடுவதில் விருப்பமுடையவனும் ஆகிய—(தம்) அந்த (நீலகண்டம்) கரிய கழுத்துடைய மயில் போன்ற சிவனை (பஜே) சேவிக்கின்றேன்.

**ஆகாசேன சிகீ—வ்யோமகேசத்வாத்। மயில் உயர்ந்த கொண்டை உடையது, சிவன் ஆகாயத்தைத் தலையாக உடையவன்.**

கலாபீ—‘கலாபோ பூஷணே பர்ஹீ’ இத்யமர:। ஆதிசேஷனுடைய இரண்டாயிரம் கண்களைப் போன்ற கண்களையுடைய தோகை மயிலுக்கு. ஆதிசேஷனே ஆபரணம் சிவனுக்கு.

இது மயிலுக்கும் பரமசிவனுக்கும் சிலேடை. ஒரு மயில் கரிய மேகத்தைக் கண்டு மகிழ்ச்சியால் ஆயிரங் கண்களுடைய அழகிய தோகையை விரித்து ‘கே-கீ’ என்று கூவிக்கொண்டு ஆடும் காக்ஷியின் வர்ணனையால் சிவனுடைய பெருமை விளக்கப்படுகிறது.

## 54. ஸந்தியாகால நடனம்

सन्ध्याघर्म-दिनात्ययो हरिकराघात-प्रभूतानक-
ध्वानो वारिदगर्जितं दिविषदां दृष्टिच्छटा चंचला ।
भक्तानां परितोष-बाष्प-विततिर्-वृष्टि-र्मयूरी शिवा
यस्मिन्नुज्ज्वल-ताण्डवं विजयते तं नीलकण्ठं भजे ॥५४॥

ஸந்த்யா-கர்ம-தினாத்யயோ ஹரிகராகாத-ப்ரபூதானக-த்வானோ வாரிதகர்ஜிதம் திவிஷதாம் த்ருஷ்டிச்சடா சஞ்சலா। பக்தானாம் பரிதோஷ-பாஷ்ப-விததிர்-வ்ருஷ்டிர்-மயூரீ சிவா, யஸ்மின்னுஜ்வல-தாண்டவம் விஜயதே தம் நீலகண்டம் பஜே ॥ 54 ॥

(ஸந்த்யா) ஸந்தியாகாலம் (கர்ம-தின-அத்யய:) வெயில் காலத்தின் முடிவான மழைகாலம் போன்றதாகவும் (ஹரிகர-ஆகாத-ப்ரபூத-ஆநக-த்வான:) விஷ்ணுவின் கைகளின் அடிகளால் எழும் மிருதங்கத்தொனி (வாரித-கர்ஜிதம்) மேகத்தின் கர்ஜனையாகவும் (திவிஷதாம்) தேவர்களின் (த்ருஷ்டிச்சடா) கண்பார்வைகள் (சஞ்சலா) மின்னல் கொடியாகவும் (பக்தானாம்) பக்தர்களுடைய (பரிதோஷ-பாஷ்ப-விததி:) ஆனந்தக் கண்ணீரின் பெருக்கு (வ்ருஷ்டி:) மழையாகவும் (சிவா) பார்

வதி (மயூரீ) பெண் மயிலாகவும் உள்ள (யஸ்மின்) எவரி டத்தில் (உஜ்வல-தாண்டவம்) பிரகாசம் பொருந்திய நட னம் (விஜயதே) சிறந்து விளங்குகின்றதோ (தம்) அந்த (நீலகண்டம்) கரிய கழுத்துடைய ஆண் மயில் போன்ற சிவனை (பஜே) சேவிக்கின்றேன்.

இந்த சுலோகமும் ஈசனை மயிலுக்கு ஒப்பிடுகிறது. கோடை காலம் முடிந்து மழைகால ஆரம்பம். இடி மின்ன லுடன் மழை வருகிறது. ஒரு பெண் மயிலின் முன் ஆண் மயில் ஆனந்த நடனம் செய்கிறது. இந்தக் காக்ஷி வெயில் அடங்கிய ஸாயங்காலமாகிய பிரதோஷ காலத்தில் மகாவிஷ்ணு இடி முழக்கம்போல் மிருதங்கம் வாசிக்க, தேவர்களுடைய கண்களின் ஒளி மின்னல்போல் பரவ, மயில்போன்ற பார்வதி யின் முன் பரமசிவன் நடனம் செய்வதை மனக்கண்முன் காட்டுகிறது.

ஒ. கைலாஸ-சைல-புவனே த்ரிஜகஜ்ஜனித்ரீம்
கௌரீம் நிவேச்ய கனகாஞ்சித-ரத்னபீடே ।
ந்ருத்யம் விதாது-மபிவாஞ்சதி சூலபாணௌ
தேவா: ப்ரதோஷஸமயே நு பஜந்தி ஸர்வே ॥

வாக்தேவீ த்ருத-வல்லகீ, சதமகோ வேணும் ததத், பத்மஜ: தாலோந்நித்ரகரோ, ரமாபகவதீ கேயப்ரயோகான் விதா। விஷ்ணு: ஸாந்த்ர-ம்ருதங்கவாதனபடுர்-தேவாஸ்ஸமந் தாத்ஸ்திதா: ஸேவந்தே தமனு ப்ரதோஷஸமயே தேவம் ம்ருடானீபதிம் ॥ —ப்ரதோஷஸ்தோத்ரம்

ஒ. அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பான்
உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேற்
கண்டங் கரியான் கருணை திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே.
—திருமந்திரம் 2732

## 55. தாண்டவ மூர்த்தி

आद्यायामित-तेजसे श्रुतिपदै-र्वेद्याय साध्याय ते
विद्यानन्दमयात्मने त्रिजगत-स्संरक्षणोद्योगिने ।
ध्येयायाखिल-योगिभि-स्सुरगणै-र्गेयाय मायाविने
सम्यक्ताण्डव-संभ्रमाय जटिने सेयं नतिश्शंभवे ॥५५॥

ஆத்யாயாமித-தேஜஸே ச்ருதிபதைர்-வேத்யாய ஸாத்யாயதே வித்யானந்த-மயாத்மனே த்ரிஜகதஸ்-ஸம்ரக்ஷணோத்யோகினே । த்யேயாயாகில-யோகிபிஸ்-ஸுரகணைர்-கேயாய மாயாவினே ஸம்யக் தாண்டவ-ஸம்ப்ரமாய ஜடினே ஸேயம் நதிః சம்பவே ॥ 55 ॥

(ஆத்யாய) உலகத்தோற்றத்திற்கு முந்தியவராகவும் (அமித-தேஜஸே) அளவுகடந்த தேஜோ ரூபியாகவும் (ச்ருதி-பதைః) வேத வாக்கியங்களால் (வேத்யாய) அறியப்படுபவராயும் (ஸாத்யாய) மூர்த்திகளில் பிர திஷ்டை செய்ய ஸாத்தியமானவராயும் (வித்யா-ஆனந்த-மய-ஆத்மனே) அறிவும் ஆனந்தமுமே வடிவாகக் கொண்டவராயும் (த்ரிஜகதః) மூவுலகத்தின் (ஸம்ரக்ஷண-உத்யோகினே) இரக்ஷணத்தில் ஊக்கங்கொண்டவராயும் (அகில-யோகிபிః) எல்லா யோகிகளாலும் (த்யேயாய) தியானிக்கப்படுபவராயும் (ஸுரகணைః) தேவர்குழாங் களால் (கேயாய) பாடிப் போற்றப்படுபவராயும் (மாயா வினே) மாயையைத் தன்வசமாகக் கொண்டவராயும் (ஸம்யக்) நன்றாக (தாண்டவ-ஸம்ப்ரமாய) தாண்டவம் செய்வதில் உற்சாகமுள்ளவராயும் (ஜடினே) சடைகளைத் தரித்தவராயும் (சம்பவே) மங்களஸ்வரூபியாயும் உள்ள (தே) உமக்கு (ஸா இயம் நதிః) அப்படியெல்லாம் உம்மைக்கருதி வழிபடும் இந்த நமஸ்காரம்.

**ச்ருதிபதைர் வேத்யாய**—ஒ. (யோ தேவானும் ப்ரதமம் புரஸ்தாத் விச்வாதியோ ருத்ரோ மஹர்ஷிః । ஹிரண்ய

கர்ப்பம் பச்யத ஜாயமானம் ஸ நோ தேவ: சுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுனக்து ||) தேவர்களுக்கெல்லாம் முதல்வரான ஹிரண்ய கர்ப்பருடைய பிறப்பையும் எவர் அவருக்கு முன்னிருந்து பார்த்தாரோ, எவர் அனைவருக்கும் மேலாகியவரோ அந்த தீர்க்கதரிசியான ருத்ரதேவர் நம்மை நல்ல நினைவுடன் கூட்டி வைத்தருளட்டும்.

—தை. உப. 4.12.

அமிததேஜஸே—ஒ. (ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி: | தமேவ பாந்த-மனுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ||) அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை; சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிரகாசிப்பதில்லை: மின்னல் கொடிகளும் பிரகாசிப்ப தில்லை; அக்கினி எங்ஙனம் பிரகாசிக்கும்? ஸ்வயம் பிரகாச முள்ள அவனைப் பின்பற்றியே அனைத்தும் பிரகாசிக்கின்றது; அவனொளியாலேயே இவையனைத்தும் விளங்குகின்றது.

—கட. உப. 5.15.

ஒ. கண்முதற் புலன்களந்தக் கரணங்கள் விளங்குமெத்தாற்
றண்மதி யருக்கனங்கி தாரகை விளங்குமெத்தால்
விண்முதற் பூதமியாவும் விளங்கு மெத்தாலந்த
உண்மையாம் சிவப்ரகாச ஒளியது வாழிவாழி.

—தாயுமானவர்.

ஸம்ரக்ஷ்ணோத்யோகினே—ஒ. யோகக்ஷேமதுரந்தரஸ்ய

—சுலோகம் 35.

மாயாவினே—ஒ. மாயாம் து ப்ரக்ருதிம் வித்யான் மாயினம் து மஹேச்வரம் || மாயையைப் பிரகிருதி என்று உணரவேண்டும். மாயையை ஆட்டிவைப்பவன் ஈசுவரன்.

—ச்வேதாச்வதர உப. 4. 9.

தாண்டவ ஸம்ப்ரமாய—

தேவாசுரர் நரர் சித்தர் வித்தியாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே.

—திருமந்திரம் 2731.

## 56. ஆனந்தத் தாண்டவம்

नित्याय त्रिगुणात्मने पुरजिते कात्यायनी-श्रेयसे
सत्यायादिकुटुंबिने मुनिमनः प्रत्यक्ष-चिन्मूर्तये ।
मायासृष्ट-जगत्त्रयाय सकलाम्नायान्त-संचारिणे
सायं ताण्डव-संभ्रमाय जटिने सेयं नतिश्शंभवे ॥ ५६ ॥

நித்யாய த்ரிகுணாத்மனே புரஜிதே காத்யாயனீ-ச்ரேயஸே, ஸத்யாயாதி-குடும்பினே முனிமனஃ ப்ரத்யக்ஷ-சின்மூர்த்தயே । மாயாஸ்ருஷ்ட-ஜகத்-த்ரயாய ஸகலாம்-னாயாந்த - ஸஞ்சாரிணே, ஸாயம் தாண்டவ-ஸம்ப்ரமாய ஜடினே ஸேயம் நதிஃ சம்பவே ॥ 56 ॥

(நித்யாய) என்றும் உள்ளவராயும் (த்ரிகுணாத்மனே) முக்குணங்களைச் சரீரமாய்க் கொண்டவராயும் (புரஜிதே) முப்புரத்தை வென்றவராயும் (காத்யாயனீ-ச்ரேயஸே) பார்வதியின் தவப்பயனாகிய உயர் நல வடிவினராயும் (ஸத்யாய) ஸத்திய ஸ்வரூபராயும் (ஆதி-குடும்பினே) ஆதிக்குடும்பத்தை உடையவராயும் (முனி-மனஃ-ப்ரத்யக்ஷ-சின்மூர்த்தயே) முனிவர்கள் மனத்தில் காட்சியளிக்கின்ற ஞானஸ்வரூபராயும் (மாயா - ஸ்ருஷ்ட-ஜகத்-த்ரயாய) மாயையினால் மூவுலகையும் தோற்றுவிப்பவராயும் (ஸகல-ஆம்னாயாந்த-ஸஞ்சாரிணே) எல்லா வேதங்களின் முடிகளிலும் நடமாடுபவராயும் (ஸாயம்) மாலை வேளையில் (தாண்டவ ஸம்ப்ரமாய) தாண்டவமாடுவதில் களிப்புடையவராயும் (ஜடினே) சடைகளைத்தரித்தவராயும் உள்ள (சம்பவே) சம்புவுக்கு (ஸா இயம் நதிஃ) அப்படியெல்லாம் கருதி வழிபடும் இந்த நமஸ்காரம்.

த்ரிகுணாத்மனே—ப்ரஹ்ம-விஷ்ணு-ருத்ராத்மனே இத்யர்த்தஃ ।

புரஜிதே—புராணி ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரணாக்யானி சரீராணி தானி ஜயதீத்யபிபவதீதி புரஜித் ,தஸ்மை । அதவா

ப்ரஸித்தானி த்ரீணி புராணி தேஷா-மஸுராணா-மித்யர்த்த-வாத ஸித்தானி தானி ஜயதீத்யபிபவதீதி புரஜித் தஸ்மை ॥

ச்லோகம் 3-ல் 'த்ரிபுரஹரம்' எனும் சொல்லைப்பற்றிய குறிப்பைப் பார்க்க.

காத்யாயனீ-ச்ரேயஸே—ஒ. 'நிஜ-தபः பலாப்யாம்'
—ச்லோகம் 1.

ஆதி குடும்பினே—(ப்ராதமிக-ஸம்ஸாரிணே, பக்தானுக்ரஹாய குடும்பவேஷதாரிணே) அடியார்களுக்கருள் புரிவதற்காகக் குடும்பியாகக் காட்சியளிக்கும் ஆதி ஸம்ஸாரி. பரமசிவன் ஸந்நியாஸ ஸம்ஸாரி.

ஒ. 'மலை, நதி, கடல், காற்று, மேகம், சூரிய சந்திர நக்ஷத்திரங்கள் முதலிய பெரிய குடும்பத்தை நிலைகுலையாது, நெறிவழுவாது பாதுகாக்கும் லீலையை யுடைய ஸந்நியாஸ ஸம்ஸாரி' —கமலாம்பாள் சரித்திரம், பி. ஆர். ராஜமய்யர்.

ஒ. மாதா ச பார்வதீ தேவீ பிதா தேவோ மஹேச்வரः ।
பாந்தவாः சிவ பக்தாச்ச ஸ்வதேசோ புவனத்ரயம் ॥
—அன்னபூர்ணாஸ்தோத்ரம் : சங்.

ஸாயம் தாண்டவ ஸம்ப்ரமாய—

ஒ. வேதங்களாட மிகுஆ கமமாடக்
கீதங்களாடக் கிளரண்டம் ஏழாடப்
பூதங்களாடப் புவன முழுதாட
நாதங்கொண் டாடினான் ஞானானந்தக் கூத்தே.
—திருமந்திரம் : 2729.

## 57. பூர்வபுண்ணியத்தின் பயன்

नित्यं स्वोदर-पोषणाय सकलानुद्दिश्य वित्ताशया
व्यर्थं पर्यटनं करोमि भवतस्सेवां न जाने विभो ।
मज्जन्मान्तर-पुण्यपाक-बलत-स्त्वं शर्व सर्वान्तर-
स्तिष्ठस्येव हि तेन वा पशुपते ते रक्षणीयोऽस्म्यहम् ॥ ५७॥

நித்யம் ஸ்வோதர-போஷணாய ஸகலானுத்திச்ய
வித்தாசயா வ்யர்த்தம் பர்யடனம் கரோமி பவதஃஸேவாம்
ந ஜானே விபோ । மஜ்ஜன்மாந்தர-புண்யபாக-பலதஸ்-
த்வம் சர்வ ஸர்வாந்தரஸ்-திஷ்டஸ்யேவ ஹி தேன வா
பசுபதே தே ரக்ஷணீயோஸ்ம்யஹம் ॥ 57 ॥

(நித்யம்) எப்பொழுதும் (ஸ்வ-உதர-போஷணாய) என் வயிற்றை வளர்ப்பதற்காக (வித்தாசயா) பணத் தாசையால் (ஸகலான்) பலபேரை (உத்திச்ய) நாடிச் சென்று (வ்யர்த்தம்) வீணாக (பர்யடனம்) சுற்றுதலை (கரோமி) செய்கிறேன். (பவதஃ) உங்களுடைய (ஸேவாம்) சேவையை (ந ஜானே) கருதவில்லை. (விபோ) எங்கும் நிறைந்தவரே! (பசுபதே) ஜீவர்களின் நாயகரே! (சர்வ) பக்தர்களின் பாவத்தைப் போக்குபவரே! (மத்) என் னுடைய (ஜன்மாந்தர-புண்யபாக-பலதஃ) முற்பிறவிகளில் நான் செய்த புண்ணியத்தின் பக்குவ பலத்தால் (த்வம்) நீர் (ஸர்வாந்தரஃ) எல்லோருள்ளும் (திஷ்டஸி ஏவ ஹி) இருக்கிறீர் அன்றோ?—அதைக் கண்டுகொண்டேன். (தேன வா) அதனாலாவது (தே) உமக்கு (அஹம்) நான் (ரக்ஷணீயஃ) காப்பாற்றத் தகுந்தவனாக (அஸ்மி) ஆகின் றேன்.

ஸர்வாந்தரஃ—அன்னமயாதிப்யஃ கோசேப்யஃ ஆந்தரஃ ஸூக்ஷ்மத்வேன அந்தர்யாமிதயா திஷ்டஸி ।

ஒ. அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்று கலப்ப துணரார்
இணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே. —திருமந்திரம் 2010.

ஸகலானுத்திச்ய வித்தாசயா—

ஒ. தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்

இம்மையேதரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே. —சுந்தரர் தேவாரம் 34·1.

பவத: ஸேவாம் ந ஜானே—

ஒ. ஸ்நாத்வா ப்ரத்யூஷகாலே ஸ்நபன - விதிவிதௌ நாஹ்ருதம் காங்க-தோயம், பூஜார்த்தம் வா கதாசித்பஹுதர-கஹனே கண்டபில்வீதலானி। நானீதா பத்மமாலா ஸரஸி விகஸிதா கந்தபுஷ்பைஸ்-த்வதர்த்தம் க்ஷந்தவ்யோ மேऽபராத: சிவ சிவ சிவ போ: ஸ்ரீமஹாதேவ சம்போ ॥
—சிவாபராதக்ஷமாபன ஸ்தோத்ரம் : சங்.

## 58. கோடிசூரியப் பிரகாசம்

एको वारिजबान्धवः क्षितिनभो व्याप्तं तमो-मण्डलं
भित्वा लोचन-गोचरोपि भवति त्वं कोटिसूर्य-प्रभः ।
वेद्यःकिन्न भवस्यहो घनतरं कीदृग्भवेन्मत्तम-
स्तत्सर्वं व्यपनीय मे पशुपते साक्षात् प्रसन्नो भव ॥५८॥

ஏகோ வாரிஜ-பாந்தவ: க்ஷிதிநபோ-வ்யாப்தம் தமோ மண்டலம், பித்வா லோசன-கோசரோபி பவதி த்வம் கோடிஸூர்ய-ப்ரப: । வேத்ய: கிந்ந பவஸ்யஹோ கனதரம் கீத்ருக்பவேன்-மத்தமஸ்-தத்ஸர்வம் வ்யபனீய மே பசுபதே ஸாக்ஷாத் ப்ரஸன்னோ பவ ॥ 58 ॥

(பசுபதே) பசுபதியே ! (ஏக:) ஒரு (வாரிஜ-பாந்தவ:) சூரியன் (க்ஷிதி-நபோ-வ்யாப்தம்) பூமியையும் ஆகாயத்தையும் கவிழ்ந்துகொண்டிருக்கும் (தமோ மண்டலம்) இருள் படலத்தை (பித்வா) பிளந்துகொண்டு (லோசன-கோசர: அபி) கண்ணிற்கு எட்டுகிறவனாக (பவதி) ஆகிறான். (த்வம்) நீரோ (கோடிஸூர்யப்ரப:) கோடி சூரியப் பிரகாசம் பொருந்தியவர். அப்படியிருந்தும்

எனக்கு (வேத்யஃ) அறியக்கூடியவராக (கிம்) ஏன் (ந பவஸி) நீர் ஆவதில்லை? (அஹோ) ஐயோ! (மத் தமஃ) எனது அறியாமையாகிற இருள் (கீத்ருக்) எவ்வளவு (கனதரம்) அடர்ந்ததாக (பவேத்) இருக்கவேண்டும்? (தத் ஸர்வம்) அது முழுவதையும் (வ்யபனீய) போக்கி (மே) எனக்கு (ஸாக்ஷாத்) கண்ணெதிரில் (ப்ரஸன்னஃ) தோன்றுபவராக (பவ) நீர் ஆகவேண்டும்.

மாயை என்னும் இருள் மறைப்பதால் ஈசுவரன் தெரிந்தும் தெரியாமலிருக்கிருன்.

ஒ. சித்தமறியாதபடி சித்தத்தில் நின்றிலகு திவ்ய
தேஜோமயத்தை —தாயுமானவர்.

ஒ. நான் யோக மாயையினுல் மூடப்பட்டு எல்லோருக்கும் விளங்குவதில்லை. மதியிழந்த இவ்வுலகம் பிறப்பற்றவனும் மாறுபாடற்றவனும் ஆகிய என்னை அறிவதில்லை. —கீ. 7.25.

ஆனுல் ஆத்ம ஞானத்தால் எவர்களுடைய அஞ்ஞானம் அழிவுற்றதோ அவர்களுக்கு ஞானமானது சூரியனைப் போல் அந்தப் பரம்பொருளை விளங்கச்செய்கிறது. —கீ. 5.16.

ஒ. ஈசுவரன் தனது கிருபையாலேயே தன்னைத் தோற்றுவிக்கிருன். அவன் ஞான சூரியன். அவனுடைய ஒரு கிரணமே இவ்வுலகம் முழுதிற்கும் அறிவைக் கொடுத்துள்ளது. அதனுல்தான் நாம் ஒருவரையொருவர் தெரிந்துகொண்டு பலவகைப்பட்ட அறிவைப் பெறுகிறோம். நமக்கு உலகை விளக்கும் தனது ஜோதியை அவன் தனது திருமுகத்திலேயே திருப்பிக்கொண்டால் மட்டுந்தான் நம்மால் அவனைக் காண முடியும். —ஸ்ரீராமகிருஷ்ணர்.

ஸ்ரீகிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்குக் காட்டியருளிய விசுவரூபம் வானத்தில் ஆயிரம் சூரியர்கள் ஒரே காலத்தில் உதித்தால் இருக்கக்கூடிய பிரகாசத்துடன் கூடியிருந்ததென்று ஸஞ்ஜயர் கூறுகிருர். —கீ. 11.12.

## 59. மனது சாதக பக்ஷி

हंसःपद्मवनं समिच्छति यथा नीलांबुदं चातकः
कोकः कोकनद-प्रियं प्रतिदिनं चन्द्रं चकोरस्तथा ।
चेतो वांछति मामकं पशुपते चिन्मार्ग-मृग्यं विभो
गौरीनाथ भवत्पदाब्ज-युगलं कैवल्य-सौख्य-प्रदम् ॥५९॥

ஹம்ஸঃ பத்மவனம் ஸமிச்சதி யதா நீலாம்புதம் சாதகঃ, கோகঃ கோகநதப்ரியம் ப்ரதிதினம் சந்த்ரம் சகோரஸ்ததா । சேதோ வாஞ்சதி மாமகம் பசுபதே சின்மார்க்க-ம்ருக்யம் விபோ, கௌரீநாத பவத்பதாப்ஜ-யுகளம் கைவல்ய-ஸௌக்ய-ப்ரதம் ॥ 59 ॥

(பசுபதே) பசுபதியே (விபோ) எங்கும் நிறைந்தவரே! (கௌரீநாத) பார்வதீ பதியே! (ஹம்ஸঃ) அன்னப் பறவை (பத்மவனம்) தாமரை நிறைந்த இடத்தையும் (சாதகঃ) சாதகபக்ஷி (நீலாம்புதம்) கார் மேகத்தையும் (கோகঃ) சக்கரவாகப்பக்ஷி (கோகநத-ப்ரியம்) தாமரைகளுக்கு நாயகனை சூரியனையும் (சகோரঃ) சகோரபக்ஷி (சந்த்ரம்) சந்திரனையும் (யதா) எவ்வாறு-ஒவ்வொன்றும்-(ஸமிச்சதி)விரும்புகிறதோ (ததா) அவ்வாறே (மாமகம்) என்னுடைய (சேதঃ) மனது (சின்மார்க்க-ம்ருக்யம்) ஞானமார்க்கத்தால் தேடக்கூடியதும் (கைவல்ய-ஸௌக்ய ப்ரதம்) கைவல்ய சுகத்தையளிக்கக் கூடியதுமான (பவத்-பதாப்ஜ-யுகளம்) உங்களுடைய திருவடித் தாமரைகளிரண்டையும் (ப்ரதிதினம்) நாள்தோறும் (வாஞ்சதி) விரும்புகிறது.

கைவல்ய-ஸௌக்ய-ப்ரதம்—கேவலம் நிர்க்குணம் ப்ரஹ்ம தஸ்ய பாவஸ் தத்வம் ததேவ ஸௌக்யம் ஸுகம் தத்ப்ரததாதீதி தத் ப்ரதம் ।

ஒ. சருகுசல பக்ஷிணிக ளொருகோடி யல்லாற் சகோர பட்சிகள் போலவே, தவள நிலவொழுகமிர்த தாரையுண்டழியாத தன்மையரனந்த கோடி,

இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத ஏகாந்தமோன ஞான இன்ப நிட்டையர் கோடி மணி மந்த்ர சித்தி நிலை எய்தி னர்கள் கோடி சூழக்

குருமணியிழைத்திட்ட சிங்காதனத்தின் மிசைகொலு வீற்றிருக்கு நின்னைக் கும்பிட்டனந்த முறை தெண்டனிட் டென்மனக் குறையெலாஞ் தீரும் வண்ணம்.

மருமல ரெடுத்துனிரு தாளையர்ச்சிக்க வெனைவாவென் றழைப்பதெந்நாள் மந்த்ர குருவே யோக தந்த்ரகுருவே மூலன் மரபில் வருமௌன குருவே. —தாயுமானவர்

## 60. திருவடி சரணம்

रोध-स्तोयहृत: श्रमेणपथिक-श्छायां तरो-र्वृष्टित:
भीत: स्वस्थगृहं गृहस्थ-मतिथि-र्दीन: प्रभुं धार्मिकम् ।
दीपं सन्तमसाकुलश्च शिखिनं शीतावृत-स्त्वं तथा
चेतस्सर्व-भयापहं व्रजसुखं शंभो: पदांभोरुहम् ॥ ६० ॥

ரோதஸ்-தோயஹ்ருதః ச்ரமேணபதிகச்-சாயாந் தரோர்-வ்ருஷ்டிதஃ, பீதஃ ஸவஸ்த்தக்ருஹம் க்ருஹஸ்த்த-மதிதிர்-தீனஃ ப்ரபும் தார்மிகம் । தீபம் ஸந்தமஸாகுலச்ச சிகினம் சீதாவ்ருதஸ்-த்வம் ததா சேதஸ்-ஸர்வபயாபஹம் வ்ரஜ ஸுகம் சம்போஃ பதாம்போருஹம் ॥ 60 ॥

(தோய-ஹ்ருதஃ) வெள்ளத்தால் இழுக்கப்பட்டவன் (ரோதஃ) கரையையும், (பதிகஃ) வழி நடப்பவன் (ச்ரமேண) களைப்பால் (தரோஃ) மரத்தினுடைய (ச்சாயாம்) நிழலை யும், (வ்ருஷ்டிதஃ) மழைக்கு (பீதஃ) பயந்தவன் (ஸ்வஸ்த்த-க்ருஹம்) சுகமான வீட்டையும், (அதிதிஃ) அயலூர்ப் பிரயாணி (க்ருஹஸ்தம்) இல்லறத்தானையும், (தீனஃ) ஏழை (தார்மிகம்) தரும சிந்தையுள்ள (ப்ரபும்) பணக் காரனையும், (ஸந்தமஸ-) அதிகமான இருளால் (ஆகுலஃ) துன்புற்றவன் (தீபம்) விளக்கையும், (சீதாவ்ருதஃ) குளி

ரால்' பீடிக்கப்பட்டவன் (சிகினஞ்ச) நெருப்பையும் (யதா) எப்படி—விரும்புவானே—(ததா) அப்படி, (சேதஃ) என்னுடைய மனமே! (த்வம்) நீ (ஸர்வபயாபஹம்) எல்லா பயத்தையும் போக்குவதும் (ஸுகம்) இன்பத்தை யளிப்பதுமான (சம்போஃ) சம்புவினுடைய (பதாம்போருஹம்) திருவடித்தாமரையை (வ்ரஜ) விரும்பியடைவாயாக.

ஸர்வபயாபஹம்—ஒவ்வொன்று ஒவ்வொரு விதமான பயத்தைப் போக்குவது. இறைவனுடைய திருவடி எல்லா பயங்களையும் போக்குவது.

ஒ. தனக் குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. —திருக்குறள் 7

## 61. பக்தியின் லக்ஷணம்

अंकोलं निजबीजसन्तति-रयस्कान्तोपलं सूचिका
साध्वी नैजविभुं लता क्षितिरुहं सिन्धुस्सरिद्वल्लभम् ।
प्राप्नोतीह यथा तथा पशुपतेः पादारविन्द-द्वयं
चेतोवृत्ति-रुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥६१॥

அங்கோலம் நிஜபீஜஸந்ததி—ரயஸ்காந்தோபலம் ஸூசிகா, ஸாத்வீ நைஜவிபும் லதா க்ஷிதிருஹம் ஸிந்துஸ்ஸரித்வல்லபம்। ப்ராப்னோதீஹ யதா ததா பசுபதேஃ பாதாரவிந்த-த்வயம், சேதோவ்ருத்தி - ருபேத்ய திஷ்டதி ஸதா ஸா பக்திரித் - யுச்யதே ॥ 61 ॥

(அங்கோலம்) ஏறழிஞ்சல் எனப் பெயர் பெற்ற மரத்தை (நிஜ-) அதனுடைய (பீஜ-ஸந்ததிஃ) விதை வரிசைகளும், (அயஸ்-காந்தோபலம்) இரும்புக் காந்தக்கல்லை (ஸூசிகா) ஊசியும், (நைஜ-) தன்னுடைய (விபும்) நாயகனை (ஸாத்வீ) பதிவிரதையான ஸ்திரீயும்; (க்ஷிதிருஹம்)

மரத்தை (லதா) கொடியும், (ஸரித்-வல்லபம்) ஸமுத்திரத்தை (ஸிந்துः) நதியும், (யதா) எவ்வாறு (இஹ) இவ்வுலகில் (ப்ராப்னோதி)—ஒவ்வொன்றும்—நாடியடைகின்றதோ (ததா) அவ்வாறு (சேதோ-வ்ருத்திः) மனதின் நாட்டம் (பசுபதேः) பரமசிவனுடைய (பாதாரவிந்த-த்வயம்) திருவடித்தாமரைகளிரண்டையும் (உபேத்ய) அடைந்து (ஸதா) எப்போதும் (திஷ்ட்டதி) நிலைபெற்றிருந்தால் (ஸா) அதுதான் (பக்திःஇதி) பக்தி என்று (உச்யதே) கூறப்படும்.

ஒ. (குணரஹிதம் காமனாரஹிதம் ப்ரதிக்ஷணவர்த்தமானம் அவிச்சின்னம் ஸூக்ஷ்மதரம் அனுபவரூபம்: தத் ப்ராப்ய ததேவ அவலோகயதி ததேவ ச்ருணோதி ததேவ சிந்தயதி।) இந்த பக்தி முக்குணங்களைக் கடந்தது, ஆசையை மீறியது, வினாடிதோறும் வளர்வது, இடைவிடாத தொடர்புடையது, நுட்பமானது, அனுபவத்தாலேயே உணரப்படுவது. அதை அடைந்தவன் அதையே காண்கிறான், அதையே கேட்கிறான், அதையே எண்ணுகிறான். —நாரதபக்திஸூத்ரம் 55-55.

ஸிந்துः ஸரித்வல்லபம்—ஆற்றில் அணைகட்டின போதிலும் அதனால் தடைபடாமல் அதைக்கடந்து வெள்ளம் எப்படி இடைவிடாது ஸமுத்திரத்தையே நாடிச் செல்லுமோ அப்படி உலகத்திலுள்ள தடைகளைத் தாண்டி மனது ஈசுவரனிடம் செல்லவேண்டும். ஸாதாரண மனிதர்களுடைய மனம் பிரவாகமின்றிக் குடும்பமாகிற குட்டையில் தேங்கிவிடுகிறது.

ஒ. ஒரு தாய்க்குத் தன் குழந்தையிடமும், ஒரு பதிவிரதைக்குத் தன் கணவனிடமும், ஓர் உலோபிக்குத் தான் சேர்த்துவைத்த பணத்தினிடமும் உள்ள ஆர்வம் எல்லாம் ஒன்று சேர்ந்தாற் போன்றது பக்தனுக்கு பகவானிடம் உள்ள பிரேமை. —ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

## 62. பக்தியெனும் தாய்

आनन्दाश्रुभि-रातनोति पुलकं नैर्मल्यत-श्छादनं
वाचा शंखमुखे स्थितैश्च जठरा-पूर्तिं चरित्रामृतैः ।
रुद्राक्षै-र्भसितेन देव वपुषो रक्षां भवद्भावना-पर्यंके
विनिवेश्य भक्तिजननी भक्तार्भकं रक्षति ॥ ६२ ॥

ஆனந்தாச்ருபி - ராதனோதி புலகம் நைர்மல்யதச் - சாதனம், வாசா சங்க்கமுகே ஸ்திதைச்ச ஜடராபூர்த்திம் சரித்ராம்ருதை: । ருத்ராக்ஷைர் - பஸிதேன தேவ வபுஷோ ரக்ஷாம் பவத் - பாவனா - பர்யங்கே விநிவேச்ய பக்தி-ஜனனீ பக்தார்ப்பகம் ரக்ஷதி ॥ 62 ॥

(தேவ) மகாதேவரே! (பக்தி-ஜனனீ) பக்தியெனும் தாய் (ஆனந்தாச்ருபி:) ஆனந்தக் கண்ணீரால்—குளிப்பாட்டி—(புலகம்) மயிர்க்கால்தோறும் மகிழ்ச்சியையும் (நைர்மல்யத:) களங்கமற்ற மனதால் (ச்சாதனம்) ஆடையையும் (வாசா-சங்க்க முகே) வாக்கென்னும் சங்கின் வாயில் (ஸ்திதைச்ச) உள்ள (சரித்ராம்ருதை:) உனது கதையாகிற அமுதத்தால் (ஜடராபூர்த்திம்) வயிற்றுக்குப் பூர்ணமான உணவையும் (ருத்ராக்ஷை:) ருத்திராக்ஷத்தாலும் (பஸிதேன) விபூதியினாலும் (வபுஷ:) உடலுக்கு (ரக்ஷாம்) இரக்ஷையையும் (ஆதனோதி) கல்பிக்கிறாள்; (பவத்பாவனா-பர்யங்கே) உமது தியானமாகிற தொட்டிலில் (விநிவேச்ய) படுக்கவைத்து (பக்தார்ப்பகம்) பக்தனாகிற குழந்தையை (ரக்ஷதி) காப்பாற்றுகிறாள்.

ஒ. (கண்டாவரோத-ரோமாஞ்சாச்ருபி: பரஸ்பரம் ஆலபமானா: பாவயந்தி குலானி ப்ருதிவீஞ்ச ।) தொண்டையடைக்க, மயிர்சிலிர்ப்பக் கண்களில் நீர்பெருக ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளும் பக்தர்கள் தங்கள் குலத்தையும் பூமண்டலம் முழுவதையுமே புனிதமாக்குகின்றனர்.

—நாரதபக்திஸூத்ரம் 68

௳. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொருளாவது
நாதன் நாம நமச்சிவாயவே.

—சம்பந்தர் தேவாரம்.

## 63. பக்தியால் குறைவெல்லாம் நிறைவாகும்

मार्गावर्तित-पादुका पशुपते-रंगस्य कूर्चायते
गण्डूषांबु-निषेचनं पुर-रिपो-र्दिव्याभिषेकायते ।
किंचिद्भक्षित-मांसशेष-कबलं नव्योपहारायते
भक्तिःकिं न करोत्यहो वनचरो भक्तावतंसायते॥६३॥

மார்க்காவர்த்தித-பாதுகா பசுபதே-ரங்கஸ்ய கூர்ச்-சாயதே, கண்டூஷாம்பு-நிஷேசனம் புர-ரிபோர்-திவ்யாபி-ஷேகாயதே। கிஞ்சித்பக்ஷித-மாம்ஸசேஷ-கபலம் நவ்-யோபஹாராயதே, பக்திஃ கிந் நகரோத்யஹோ வநசரோ பக்தாவதம்ஸாயதே ॥ 63 ॥

(மார்க்காவர்த்தித - பாதுகா) கண்ணப்பரின் வழி நடந்து தேய்ந்த செருப்பு (பசுபதேஃ) பரமசிவனுடைய (அங்கஸ்ய) மூர்த்திக்கு (கூர்ச்சாயதே) அபிஷேகத்திற்கு முன் சிரசில் வைக்கப்படும்—கூர்ச்சம் போலாகிறது; (கண்டூஷ-அம்பு) வாயிலிருந்து கொப்பளித்த நீரால் (நிஷேசனம்) நனைத்தல் (புரரிபோஃ) திரிபுர ஸம்ஹாரம் செய்த சிவனுக்கு (திவ்ய-அபிஷேகாயதே) தெய்வத்தன்மை வாய்ந்த அபிஷேகம் போலாகிறது; (கிஞ்சித்-பக்ஷித-) கொஞ்சம் கடித்துப்பார்த்த (மாம்ஸ-சேஷ-கபலம்) மாம்ஸத்தின் மீதியான கவளம் (நவ்ய-உபஹாராயதே) புதிதான நைவேத்தியம் போலாகிறது. (அஹோ) ஆச்சரியம்! (வநசரஃ) காட்டில் வசிக்கும் வேடன் (பக்த-அவதம்ஸாயதே) பக்த சிரேஷ்டனாகிறான்.

(பக்திः) பக்தியானது (கிம்) எதைத்தான் (ந கரோதி) செய்யாது?

இங்கு கண்ணப்ப நாயனுருடைய பக்தியின் பெருமையைச் சங்கராசாரியர் போற்றுகிருர்.

ஒ. காப்பதோர் வில்லு மம்புங்
கையதோ ரிறைச்சிப் பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத்
தூயவாய்க் கலச மாட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய
குருதிநீ ரொழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார்
குறுக்கைவீ ரட்டனுரே. —தேவாரம்.

ஒ. கெட்ட ஆசாரமுடையவனுங்கூட என்னை வேருெரு நாட்டமின்றிப் போற்றுவானெனில் அவன் நன்னடக்கையுள்ளவன் என்றே கருதுதற்குரியவன்; அவன் நல்ல நிச்சயம் உள்ளவனுதலின். —கீதை 9.30.

ஒ. வித்யாகர்வமுள்ள ஜனங்கள் பிறருடைய பக்தியைப் பற்றி 'மூடபக்தி' என்று கூறி, அவர்கள் வழி 'தப்பு வழி' என்றுங்கூறுவர். பக்தன் அங்ஙனம் வழி தவறியே நடந்தாலும், இறைவன் குறைவை நிறைவாக்கிக் கொள்வான். அவனுக்கு வேண்டியதை இறைவனே விரைவில் கூட்டி வைப்பான். —ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

வெளிச்செயல் முக்கியமன்று; உள்ளன்புதான் முக்கியம். அதைத்தான் இறைவன் ஏற்கிருன்.

'எவர்கள் சாஸ்திர நெறியைவிட்டுச் சிரத்தையுடன் கூடியவர்களாய்ப் பூஜிக்கின்ருர்களோ அவர்களுடைய நிலை எவ்வகைத்து?' என்று அர்ஜுனன் கேட்கவே பகவான் சிரத்தைதான் முக்கியம் என்றும் சிரத்தையில்லாமல் செய்யப்பட்ட ஹோமமும் தானமும் தவமும் பயனற்றவை என்றும் கூறுகிருர். —கீதை 17வது அத்.

ஒ. அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்.

அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே. —திருமந்திரம்.

பெரிய புராணக்கதை—காளத்தியிலிருந்த கண்ணப்பர் என்ற வேடர் சிவபெருமானிடம் பேரன்பினால், தனக்கு மாமிசம் உவப்பாயிருத்தலால் சுவாமிக்கும் அது உவப்பாகும் என்று எண்ணி, ஒரு காட்டுப்பன்றியைக் கொன்று அதன் இறைச்சியைப் பதமாக்கிச் சுவைத்துப்பார்த்துப் படைப்பதற்கு ஒரு இலையில் எடுத்துக்கொண்டு, அபிஷேகத்திற்குப் பாத்திரமில்லாமையால் வாயிலேயே நீரை அடக்கிக்கொண்டு, அர்ச்சனைக்குப் பூவைத் தலையிலே செருகிக்கொண்டு கோவிலையடைந்தார். முன் சாத்தப்பட்டிருந்த பூக்களைத் தமது காற்செருப்பினால் மாற்றி, வாய்நீரால் அபிஷேகம் செய்து, குடுமியில் செருகியிருந்த பூவால் அர்ச்சித்தார்.

"பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல் விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ."
—திருவாசகம் (மாணிக்கவாசகர்).

## 64. மனது சிவனுக்குப் பாதரக்ஷை

वक्षस्ताडन-मन्तकस्य कठिनापस्मार-संमर्दनं
भूभृत्पर्यटनं नमत्सुरशिरः-कोटीर-संघर्षणम् ।
कर्मेदं मृदुलस्य तावक-पदद्वन्द्वस्य गौरीपते
मच्चेतो-मणिपादुका-विहरणं शंभो सदांगीकुरु ॥ ६४ ॥

வக்ஷஸ்தாடன-மந்தகஸ்ய கடினாபஸ்மார-ஸம்மர்த்-தனம், பூப்ருத்-பர்யடனம் நமத்ஸுரசிரஃ-கோடீர-ஸங்கர்ஷணம் । கர்மேதம் ம்ருதுலஸ்ய தாவக-பதத்வந்-

கௌரீபதே—கிம்வோசிதம் —பா. பே.

த்வஸ்யகௌரீபதே, மச்சேதோ-மணிபாதுகா-விஹர-
ணம் சம்போ ஸதாங்கீகுரு ॥ 64 ॥

(கௌரீபதே) கௌரீபதியே (அந்தகஸ்ய) யமனுடைய (வக்ஷஸ்-தாடனம்) மார்பில் உதைத்தல், (கடின-அபஸ்-மார-ஸம்மர்த்தனம்) அஜ்ஞானமே உருக்கொண்ட கடின மான அபஸ்மாரத்தை மிதித்தல், (பூப்ருத்-பர்யடனம்) மலையில் சஞ்சரித்தல், (நமத்-ஸுரசிரஃ-) நமஸ்காரம் செய்கின்ற தேவர்களுடைய தலைகளிலுள்ள (கோடீர-ஸங்கர்-ஷணம்) கிரீடங்களில் உறைதல் ஆகிய (இதம்) ஈதெல்லாம் (ம்ருதுலஸ்ய) மெதுவான (தாவக-பத-த்வந்த்வஸ்ய) உமது இரண்டு திருவடிகளுக்கும் (கர்ம) தொழிலாயுளது. (சம்போ) சம்புவே! (ஸதா) எப்போதும் (மத்-சேதஃ-) என்னுடைய மனதாகிற (மணிபாதுகா-விஹரணம்) இரத்திரனப்பாதுகையை யணிந்துகொண்டு சஞ்சரிப்பதை (அங்கீகுரு) ஏற்றுக்கொள்வீராக.

**யமனுடைய மார்பில் உதைத்தல்**—மார்க்கண்டேயனுக்கு விதிக்கப்பட்டிருந்த வயது பதினறு. அது முடிந்தபோது அவன் உயிரைக்கொண்டுபோக யமதூதர்கள் வந்தார்கள். கோயிலில் அவன் சிவபூஜை செய்து கொண்டிருந்ததால் அவர்கள் அணுகமுடியவில்லை. ஆதலால் யமதர்மராஜனே வந்து பாசக்கயிற்றை வீசி மார்க்கண்டேயனை இழுத்தான். அப்போது லிங்கத்திலிருந்து சிவன் வெளித்தோன்றி யமனை மார்பில் உதைத்து மார்க்கண்டேயனை என்றும் பதினறு வயதாயிருக்கும்படி அருளினர். கடினமான யமனுடைய மார்பில் உதைத்த சிவனுடைய பாதம் நோகுமே என்று பக்தன் வருந்துகிறன்.

ஒ. மார்க்கண்டர்க்காக மறலி பட்ட பாட்டையுன்னிப்
பார்க்கின் அன் பர்க்கென்ன பயங்காண் பராபரமே.
—தாயுமானவர்.

**அபஸ்மாரத்தை மிதித்து நசுக்குதல்**—அபஸ்மாரம் என்பது காக்கை வலிப்பு நோய். அது அறிவையழிக்கும் அஞ்ஞானத்திற்கு அடையாளமாகக் கொள்ளப்படுகிறது.

தாருகாவனத்தில் சிவனுடைய பெருமையை அறியாத வேதியர்கள் சிவனுக்குத் தீங்கிழைக்க எண்ணிச் செய்த வேள்வியில் தோன்றிய முயலகன் என்னும் குள்ளன் அபஸ்மாரன் எனப் பெயர் கொண்டவன். அவன் சிவன்மேல் பாய்ந்தபோது, சிவன் அவனை வீழ்த்தி அவன் முதுகின்மேல் நின்று அவனை நசுக்கினார். நடராஜ வடிவத்தில் அபஸ்மாரன் சிவனுடைய பாதத்தின் கீழ்க் கிடப்பதைக் காணலாம்.

மனதாகிற பாதரக்ஷை—மனது பரமசிவனுடைய திருவடிகளில் கூடியிருத்தல் வேண்டுமென்பதே பிரார்த்தனை.

'நான் பசும்புல்லாயிருந்தால் நீ நடக்குமிடத்தில் உன் பாதத்திற்கு மெதுவாயிருப்பேன். செடியாயிருந்தால், நீ காணும்படி, தொடும்படி, வளருவேன். பூவாயிருந்தால் உன் பாதங்களில் அர்ச்சிக்கப் பயன்படுவேன்' என்று எண்ணுகிறது பக்தனுடைய நெஞ்சம்.

## 65. பாதசேவையின் பெருமை

वक्षस्ताडन-शंकया विचलितो वैवस्वतो निर्जराः
कोटीरोज्ज्वल-रत्नदीपकलिका-नीराजनं कुर्वते ।
दृष्ट्वा मुक्तिवधू-स्तनोति निभृताश्लेषं भवानीपते
यच्चेत-स्तव पादपद्म-भजनं तस्येह किं दुर्लभम् ॥ ६५ ॥

வக்ஷஸ்தாடன-சங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜராঃ, கோடீரோஜ்வல-ரத்னதீபகலிகா-நீராஜனம் குர்வதே । த்ருஷ்ட்வா முக்திவதூஸ்-தனோதி நிப்ருதாச்லேஷம் பவானீபதே, யச்சேதஸ்-தவ பாதபத்ம-பஜனம் தஸ்யேஹ கிம் துர்லபம் ॥ 65 ॥

(யச்சேதঃ) எவனுடைய மனது (தவ) உம்முடைய (பாத-பத்ம-பஜனம்) திருவடித்தாமரையின் சேவையை நாடுகிறதோ (தஸ்ய) அவனுக்கு (இஹ) இங்கு (துர்லபம்) அடைய முடியாதது (கிம்) என்ன ? (பவானீபதே) பவானியின்பதியே ! (வக்ஷஸ்தாடன-சங்கயா) மார்பில் உதைக்கு

அஞ்சி (வைவஸ்வதஃ) யமன் (விசலிதஃ) ஓடிவிடுகிருன். (கோடீர-உஜ்வல-) கிரீடங்களில் பிரகாசிக்கின்ற (ரத்ன-தீப-கலிகா-) மொக்கு போன்ற ரத்ன தீபங்களால் (நீரா ஜனம்) கற்பூர ஆரத்தியை (நிர்ஜராஃ) தேவர்கள் (குர்வதே) செய்கிருர்கள். (முக்தி-வதூஃ) முக்தியெனும் பெண் (த்ருஷ்ட்வா) கண்டதும் (நிப்ருத-ஆச்லேஷம்) இறுகத் தழுவிக் கொள்ளுதலை (தநோதி) தருகிருள்.

எவனுடைய மனது சிவனுடைய திருவடிகளில் இணைந்து விடுகிறதோ அவனுக்கு மார்க்கண்டேயனைப்போல் யமபயம் நீங்குகிறது. அவன் தேவர்களுக்கும் உயர்ந்த பதவியை யடைகிருன். சிவனுடைய பாதங்களில் ரத்னக்கிரீடங்களுடன் தேவர்கள் வரிசை வரிசையாக வணங்குவது திருவடியில் ஒட்டிக்கொண்டிருக்கும் பக்தனுக்குத் தீபாராதனை செய்வது போலிருக்கின்றது. முக்தி இவனைத் தானே தேடி வருவது, முக்தி எனும் ஒரு பெண் இவனை நாயகனுக வரித்துத் தழுவிக் கொள்வதாக வர்ணிக்கப்படுகிறது.

கிம் துர்லபம்—ஒ. (யம் யம் லோகம் மனஸா ஸம்விபாதி விசுத்த-ஸத்வஃ காமயதே யாம்ச்ச காமான் । தம் தம் லோகம் ஜயதே தாம்ச்ச காமான் தஸ்மாதாத்மஜ்ஞம் ஹி அர்ச்சயேத் பூதிகாமஃ ॥) பரிசுத்தமான சித்தமுடையவன் எந்த எந்த உலகத்தை மனதால் ஸங்கல்பிக்கின்ருனே, எந்தெந்த போகங்களை விரும்புகின்ருனே அந்தந்த உலகத்தையும் அந்தந்த போகங்களையும் அடைகிருன். ஆகையால் பெரும் பேறு வேண்டுபவர் ஆத்ம ஞானியைப் பூஜிக்க வேண்டும்.

—முண்டகோபநிஷத்து 3.1.10.

## 66. உலகம் சிவனுடைய லீலை

क्रीडार्थं सृजसि प्रपंच-मखिलं क्रीडामृगा-स्ते जनाः
यत्कर्माचरितं मया च भवतः प्रीत्यै भवत्येव तत् ।
शंभो स्वस्य कुतूहलस्य करणं मच्चेष्टितं निश्चितं
तस्मान्मामक-रक्षणं पशुपते कर्तव्य-मेव त्वया ॥ ६६ ॥

க்ரீடார்த்தம் ஸ்ருஜஸி ப்ரபஞ்ச-மகிலம் க்ரீடாம்ரு-காஸ்தே ஜனாः, யத்கர்மாசரிதம் மயா ச பவத: ப்ரீத்யை பவத்யேவ தத் । சம்போ ஸ்வஸ்ய குதூஹலஸ்ய கரணம் மச்சேஷ்டிதம் நிச்சிதம், தஸ்மான்-மாமக-ரக்ஷணம் பசு-பதே கர்த்தவ்ய-மேவ த்வயா ॥ 66 ॥

(சம்போ) சம்புவே! (க்ரீடார்த்தம்) விளையாட்டிற்காக (ப்ரபஞ்சம் அகிலம்) உலகமனைத்தையும் (ஸ்ருஜஸி) சிருஷ்டிக்கிறீர்; (ஜனாः) ஜனங்கள் (தே) உமக்கு (க்ரீடாம்ருகாः) விளையாட்டுப் பிராணிகளைப் போன்ற வர்கள். (மயா ச) என்னாலும் (ஆசரிதம்) செய்யப்பட்ட (கர்ம) செயல் (யத்) எது உண்டோ (தத்) அதுவும் (பவதः) உம்முடைய (ப்ரீத்யை ஏவ) பிரியத்திற்காகவே (பவதி) ஆகிறது. (மச்சேஷ்டிதம்) என்னை ஆட்டுவித்தலும் (ஸ்வஸ்ய) உம்முடைய அடியார்களின் (குதூஹலஸ்ய) சந்தோஷத்திற்கு (கரணம்) கருவியாகின்றது; (நிச்சிதம்) இது நிச்சயம். (தஸ்மாத்) ஆகையால், (பசுபதே) உயிர் களின் நாயகரே (மாமகரக்ஷணம்) அடிமைப்பிராணி யாகிய—என்னைக் காத்தல் (த்வயா) உம்மால் (கர்த்தவ்யம் ஏவ) செய்யவேண்டிய கடமையேயாம்.

க்ரீடார்த்தம்—(ஆப்த-காமஸ்ய தவ விநா க்ரீடயா நான்-யத் ப்ரயோஜனம் பச்யாமः) அடைய வேண்டியதை யெல்லா மடைந்து ஆசைகள் பூர்த்தியாகியுள்ள உமக்கு விளையாட்டைத் தவிர வேறு பிரயோஜனத்தை நாங்கள் காணவில்லை.

உலகமாகிற நாடகமேடையில் தன்னுடன் லீலை புரிய எத்தனையோ வேஷங்களில் எத்தனையோ தடவை இறைவன் நம்மை அழைத்து வருகிறன். அவன் எந்த வேஷத்தை நமக்கு அளிக்கிறனே அதில் திறமையாக நடிப்பதே அவனுக் குத் திருப்தி.

பவதः ப்ரீத்யை—நாம் செய்யும் செயலனைத்திற்கும் ஒரே பயன் பரமேசுவரனுடைய ப்ரீதி. அதனுல்தான் எந்தக் கர்மத்தைத் தொடங்கினாலும் ஸங்கல்பத்தில் 'ஸ்ரீ பரமேச்வர

ப்ரீத்யர்த்தம்' என்று சொல்லும்படி பெரியோர் நமக்குக் கற்பித்திருக்கின்றனர்.

ஒருவன் ஒரு நாயை வளர்த்தால் அது அவன் காலடியில் கிடப்பதுபோல் நாம் நம்மை வளர்க்கும் இறைவனுடைய காலடியில் கிடக்கவேண்டும்.

ஒ. ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே
அடக்குவித்தா லாரொருவ ரடங்காதாரே
ஒட்டுவித்தா லாரொருவ ரோடாதாரே
உருகுவித்தா லாரொருவ ருருகாதாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே
பணிவித்தா லாரொருவர் பணியாதாரே
காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே.

—அப்பர் தேவாரம்

ஒ. (லோகவத் து லீலா கைவல்யம்) உலகத்தில் போல் சிருஷ்டி முதலிய காரியம் ஒரு பிரயோஜனத்தையும் வேண்டாத வெறும் விளையாட்டேயாம். —பிரம்மஸூத்ரம் 2.1.33.

## 67. சிவத்தியான மகிமை

बहुविध-परितोष-बाष्पपूर-
स्फुट-पुलकांकित-चारु-भोग-भूमिम् ।
चिरपद-फलकांक्षि-सेव्यमानां
परमसदाशिव-भावनां प्रपद्ये ॥ ६७ ॥

பஹுவித-பரிதோஷ-பாஷ்பபூர—
ஸ்புட-புலகாங்கித-சாரு-போக-பூமிம் ।
சிரபத-பலகாங்க்ஷி-ஸேவ்யமானாம்
பரமஸதாசிவ-பாவனாம் ப்ரபத்யே ॥ 67 ॥

(பஹுவித-) பலவகைப்பட்ட (பரிதோஷ-) மகிழ்ச்சி பொங்குவதற்கும் (பாஷ்பபூர-) ஆனந்தக் கண்ணீர் பெருகுவதற்கும் (ஸ்புட-புலகாங்கித-) வெளிப்படையாக

மயிர்க்கூச்சுண்டாவதற்கும் (சாரு-போக-பூமிம்) சிறந்த விளைநிலமாகியதும் (சிரபத-) நிலையான பதவியாகிய மோட்சமெனும் (பல-காங்க்ஷி-) பயனை விரும்புபவர்களால் (ஸேவ்யமாநும்) போற்றப்பட்டதுமாகிய (பரம-ஸதாசிவ-பாவநும்) ஒப்புயர்வற்ற ஸதாசிவத்தியானத்தை (ப்ர-பத்யே) அடைக்கலம் புகுகின்றேன்.

சிவத்தியானம் ஒப்புயர்வற்ற ஆனந்தத்தையளிக்கும் போக பூமியாக வர்ணிக்கப்படுகிறது.

ஒ. விளையும் சிவானந்த பூமி—அந்த
வெட்ட வெளி நண்ணித் துட்ட இருளாங்
களையைக் களைந்துபின் பார்த்தேன்—ஐயன்
களையன்றி வேறொன்றுங் கண்டிலன் தோழி
—சங்கர சங்கர சம்பு. —தாயுமானவர்

ஒ. இவ்வாறு எப்போதும் தன்னை ஒருமுகப்படுத்திப் பாவந்தேய்ந்த யோகியானவன் எளிதில் பிரம்மத்துடன் ஒன்றியதால் உண்டாகும் எல்லையில்லாத ஆனந்தத்தை யனுபவிக்கிறான். —கீதை 6.28.

## 68. பக்தியென்னும் பால்பசு

अमितमुदमृतं मुहुर्दुहन्तीं
विमल-भवत्पद-गोष्ठ-मावसन्तीम् ।
सदय पशुपते सुपुण्य-पाकां
मम परिपालय भक्तिधेनु-मेकाम् ॥ ६८ ॥

அமித-முதம்ருதம் முஹுர்-துஹந்தீம்
விமல-பவத்பத-கோஷ்ட-மாவஸந்தீம் ।
ஸதய பசுபதே ஸுபுண்ய-பாகாம்
மம பரிபாலய பக்திதேனு-மேகாம் ॥ 68 ॥

(ஸதய) தயைமிக்கவரே! (பசுபதே) உயிர்களின் தலைவரே! (அமித-) அளவில்லாத (முதம்ருதம்)

ஸந்தோஷமாகிற அமுதத்தை (முஹுः) மேன்மேலும் (துஹந்தீம்) பெருக்குவதாயும், (விமல-) பரிசுத்தமான (பவத்-பத-கோஷ்டம்) உமது திருவடியாகிற கொட்டிலில் (ஆவஸந்தீம்) வசிப்பதாயும், (ஸுபுண்ய-பாகாம்) சிறந்த புண்ணியத்தின் பயன்வடிவாயும் உள்ள (மம) என்னுடைய (பக்தி-தேனும் ஏகாம்) பக்தியென்னும் பால் பசு வொன்றை (பரிபாலய) நன்கு காத்தருள்வீராக!

விரும்பியதையெல்லாம் அளிக்கவல்ல காமதேனு பக்தி. அது கறக்கும் பால் முக்தியின்பம். அதன் உறைவிடம் சிவன் திருவடி. அதைப் பரிபாலிப்பவன் பசுபதியாகிய பரமசிவனே.

## 69. குறைகளைக்காணாத பரமசிவன் கருணை

जडता पशुता कलंकिता
  कुटिल-चरत्वं च नास्ति मयि देव ।
अस्ति यदि राजमौले
  भवदाभरणस्य नास्मि किं पात्रम् ॥ ६९ ॥

ஜடதா பசுதா கலங்கிதா
  குடிலசரத்வஞ் ச நாஸ்தி மயி தேவ ।
அஸ்தி யதி ராஜமௌலே
  பவதாபரணஸ்ய நாஸ்மி கிம் பாத்ரம் ॥ 69 ॥

(தேவ) இறைவரே! (ஜடதா) மூடத்தன்மையும் (பசுதா) மிருகத்தன்மையும் (கலங்கிதா) கறைபட்ட தன்மையும் (குடில-சரத்வஞ்ச) கோணலான நடத்தையும் (மயி) என்னிடத்தில் (நாஸ்தி) இல்லை. (ராஜமௌலே) சந்திரனைத் தலையிலணிந்து விளங்குபவரே! (அஸ்தி யதி)—மேற்கூறிய குறைகள் சந்திரனிடமிருக்குமாப் போல் என்னிடமும்—இருக்குமேயானால் (பவத்-) உம்முடைய (ஆபரணஸ்ய) அணிகலனாயிருப்பதற்கு (பாத்ரம்) தகுந்தவனாக (ந அஸ்மி கிம்) நானும் ஆயிருக்க மாட்டேனா?

புண்ணியத்தின் பயனாகப் பரமசிவனிடம் பக்தி ஏற்படு கிறது. பக்தி செய்பவர்களிடம் ஞானமும், உயர்ந்த பண்பும், தூய்மையும் நேர்மையும் தாமே வந்தமையும். இந்த மாதிரி நல்ல குணங்கள் இல்லையென்றும், எதிரிடையான தீய குணங் கள் இருக்கின்றன என்றும் வைத்துக்கொண்டாலும், பரம சிவனுக்கு பக்தர்களைப் புறக்கணிப்பது சிறிதும் பொருந்தாது ஏனெனில், அவர் தோல், மான், பாம்பு, சந்திரன் போன்று ஜட மாயும், தூய்மையற்றதாயும், நேர்மையற்றதாயுமுள்ளவைகளை ஆபரணங்களாக ஏற்றுக்கொண்டிருக்கிறார். அல்லது இங்கு கூறிய எல்லாக் குறைகளும் சந்திரனிடமே இருப்பதாகவும் கருதலாம். அப்படிப்பட்ட சந்திரனைச் சிவன் சிரசில் தரிக்கும் போது, பக்தனைப் புறக்கணித்தல் எங்ஙனம் தகும்? அல்லது குற்றமுள்ளவர்களைத் தலையில் தூக்கி வைத்துக்கொள்வதும் குணவான்களைப் புறக்கணிப்பதும் சிவனுடைய சுபாவம் என்று நிந்திப்பதாகக் கருதி இந்த சுலோகத்தை நிந்தாஸ்துதியாகக் கொள்ளலாம்.

சந்திரனைப்பற்றின புராணக்கதை :—தக்ஷப்பிரஜாபதிக் குப் பெண்கள் அறுபது பேர். அவர்களில் நக்ஷத்திரங்களாக விளங்கும் 27 பேரைச் சந்திரனுக்கு விவாகம் செய்துகொடுத்து, அவர்கள் எல்லோரையும் பக்ஷபாதமில்லாத அன்புடன் நடத்த வேண்டுமென்று நிபந்தனை ஏற்படுத்தினார். ஆனால் சந்திரன் ரோகிணியிடம் மிகுந்த அன்புகொண்டு மற்றவர்களைப் புறக் கணிக்கவே அவர்கள் தகப்பனாரிடம் இதைத் தெரிவித்தார்கள். தக்ஷன் கோபங்கொண்டு சந்திரன் தன்னுடைய கலைகளை ஒவ்வொன்றாக இழந்து அழிந்துபோக வேண்டுமென்று சாபங் கொடுத்தான். கலைகளை இழந்து சந்திரன் ஒரு கலையுடன் சிவனிடம் சரண்புகவே, சிவன் சந்திர கலையைத் தமது சிரசில் பூஷணமாகக் கொண்டார். அவரது அருளால் சந்திரனுடைய கலைகள் மீண்டும் ஒவ்வொன்றாக வளரலாயின. தக்ஷனுடைய சாபம் முழுதும் வீண்போகாதிருக்கச் சிவன் சந்திரனைத் தேய் பிறையும் வளர்பிறையும் உடையவனாயிருக்கச் செய்தார்.

சந்திரன் குருபத்தினியிடம் வழி தவறி நடந்ததாலும் கோணலான நடத்தையுடையவன்.

## 70. ஆராதிப்பதற் கெளியவர்

अरहसि रहसि स्वतन्त्र-बुद्ध्या
वरिवसितुं सुलभः प्रसन्नमूर्तिः ।
अगणित-फलदायकः प्रभुर्मे
जगदधिको हृदि राजशेखरोस्ति ॥ ७० ॥

அரஹஸி ரஹஸி ஸ்வதந்த்ர-புத்த்யா
வரிவஸிதும் ஸுலப: ப்ரஸன்ன-மூர்த்தி: ।
அகணித-பலதாயக: ப்ரபுர்-மே
ஜகததிகோ ஹ்ருதி ராஜசேகரோஸ்தி ॥ 70 ॥

(அரஹஸி) வெளிப்படையாகவும் (ரஹஸி) அந்தரங்கத்திலும் (ஸ்வதந்த்ர-புத்த்யா) தன்வயப்பட்ட புத்தியால் (வரிவஸிதும்) ஆராதிப்பதற்கு (ஸுலப:) சுலபமானவர்—பரமசிவன்; (ப்ரஸன்னமூர்த்தி:) அருள்புரிய ஆயத்தமானவராயும் (அகணித-பலதாயக:) எண்ணுதற்கரிய நற்பயன்களை அளிப்பவராயும் (ப்ரபு:) ஆக்கியளித்துத் துடைக்கும் முத்தொழிலிலும் வல்லவராயும் (ஜகததிக:) தோன்றிமறையும் உலகிற்கு அப்பாற்பட்டவராயும் (ராஜசேகர:) பிறைசூடிய பெருமானுயும் விளங்குகின்ற அவர் (மே) என்னுடைய (ஹ்ருதி) இருதயத்திலேயே (அஸ்தி) உறைகின்ருர்.

உள்ளத்தில் உறைவதால் இரகசியத்தில் பூஜிக்கவும் எங்கும் இருப்பதால் வெளியில் பூஜிப்பதற்கும் பரமசிவன் சுலபமானவர்.

**ப்ரஸன்ன மூர்த்தி:—ப்ரஸாதோன்முகீ மூர்த்தி: ।**

**ஜகததிக:—சித்ரூபே ஜகத்விலக்ஷண இதி யாவத் । ஜகததிப இதி பாடே ஸர்வேஷாம் ஜகதாம் ஸர்வேஷாம் கர்மஸாம் ப்ரேரக: ய: ஸர்வேஷாம் பூதேஷாம் இத்யந்தர்யாமி-ப்ராஹ்மண-மந்த்ர-ப்ரமாண-மேவம்பூத: ।**

---

70. ஜகததிப: । பரிவஸிதும் । —பா. பே.

ஒ. விச்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: ।

—தை. உப. நாராயணவல்லீ

ஒ. ய: ஸர்வேஷு பூதேஷு திஷ்டன் ஸர்வேப்யோ பூதேப்யோ அந்தர:

—ப்ரு. உப. (அந்தர்யாமி ப்ராஹ்மணம்) 3.7.3.

ராஜசேகர:—சந்த்ரமௌளி:, ஸார்வபௌம இதி ச த்வன்யதே ।

வரிவஸிதும்—பரிவஸிதும் (பரிசரிதும்) என்றும் பாடம். 'வரிவஸ்யா' என்றால் பூஜை அல்லது ஆராதனை.

ஒ. உள்ளத்தொடுங்கும் புறத்துளும் நானெனுங்
கள்ளத்தலைவன் கமழ்சடை நந்தியும்
வள்ளற் பெருமை வழக்கஞ்செய் வார்கள்தம்
அள்ளற் கடலை அறுத்துநின் றானே. —திருமந்திரம்.

## 71. மோக்ஷஸாம்ராஜ்ய லக்ஷ்மி

आरूढ-भक्ति-गुण-कुंचित-भाव-चाप-
युक्तैश्शिवस्मरण-बाणगणै-रमोघैः ।
निर्जित्य किल्बिष-रिपून् विजयी सुधीन्द्र-
स्सानन्द-मावहति सुस्थिर-राजलक्ष्मीम् ॥ ७१ ॥

ஆரூட-பக்தி-குண-குஞ்சித-பாவ-சாப-
யுக்தை: சிவஸ்மரண-பாணகணை-ரமோகை: ।
நிர்ஜித்ய கில்பிஷ-ரிபூன் விஜயீ ஸுதீந்த்ரஸ்-
ஸாநந்த-மாவஹதி ஸுஸ்த்திர-ராஜலக்ஷ்மீம் ॥ 71 ॥

(ஆரூட-பக்தி-) உச்சநிலையை யடைந்திருக்கிற பக்தியாகிய (குண-குஞ்சித-) நாண் கயிற்றினால் வளைக்கப் பெற்ற (பாவ-சாப-யுக்தை:) பாவனை என்னும் வில்லில் தொடுக்கப்பட்டவைகளும் (அமோகை:) வீண்போகாதவைகளுமான (சிவஸ்மரண-பாண-கணை:) சிவத்தியானமாகிற அம்புக் கூட்டங்களால் (கில்பிஷ-ரிபூன்) பாவங்

களாகிற சத்துருக்களை (நிர்ஜித்ய) அறவே ஒழித்து (விஜயீ) வெற்றியுடன் விளங்கும் (ஸ்வதீந்தர:) புத்திமான் களிற் சிறந்தவன் (ஸ்வஸ்த்திர-ராஜலக்ஷ்மீம்) என்று மழியாத அரசாட்சிச் செல்வத்தை (ஆவஹதி) அடைகிருன்.

வில்—தியானம்; நாண்கயிறு—பக்தி; அம்புகள்—சிவ ஸ்மரணம்; சத்துருக்கள்—பாவங்கள்; வெற்றி—முக்தியாகிற ஸாம்ராஜ்யம்.

ராஜலக்ஷ்மீ:—ராஜ்ஞோ லக்ஷ்மீ: ராஜலக்ஷ்மீ: துஷ்ட நிக்ரஹ-சிஷ்ட பரிபாலனரூபா லக்ஷ்மீ: । அதவா ஸ்வஸ்த்திர ராஜா பரமசிவ: தஸ்ய லக்ஷ்மீ: ஸாரூப்யலக்ஷ்மீ: ।

ஒ. (தனுர்க்ருஹீத்-வௌபநிஷதம் மஹாஸ்த்ரம் சரம்-ஹ்யுபாஸா நிசிதம் ஸந்தயீத । ஆயம்ய தத்பாவகதேன சேதஸா லக்ஷ்யம் ததேவாக்ஷரம் ஸோம்ய வித்தி ॥ ப்ரணவோ தனு: சரோஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்ய-முச்யதே । அப்ரமத்தேன வேத்தவ்யம் சரவத் தன்மயோ பவேத் ॥) சித்தம் அழகியோனே! உபநிஷத்திலுள்ள மஹா அஸ்திரமாகிய (ஓங்கார) வில்லை எடுத்து உபாசனையால் கூர்மை பெற்ற உன் ஜீவனையே அதில் அம்பாகத் தொடுத்து பிரம்ம பாவனை நிறைந்த சித்தத்தால் அதை இழுத்து அந்த அக்ஷரப் பிரம்ம மாகிய லக்ஷியத்தை நோக்கி அம்பு போல் பாய்ந்து அதனுள் ஊடுருவிச் செல்வாயாக. பிரணவமே வில்; ஆத்மாவே அம்பு; பிரம்மமே அதன்குறி; கவனக்குறைவின்றி குறி எய்யப்பட வேண்டும். அம்பைப் போல் அதன்பின் லக்ஷியத்துடன் ஒன்றுபட்ட நிலை ஏற்படும்.

—முண்டகோபநிஷத் : 2.2.3-4.

## 72. திருவடியாகிய புதையல்

ध्यानांजनेन समवेक्ष्य तमः-प्रदेशं
भित्वा महाबलिभि-रीश्वरनाम-मन्त्रैः ।
दिव्याश्रितं भुजगभूषण-मुद्वहन्ति
ये पादपद्म-मिह ते शिव ते कृतार्थाः ॥ ७२ ॥

த்யாநாஞ்ஜனேன ஸமவேக்ஷ்ய தம: ப்ரதேசம்
பித்வா மஹாபலிபி-ரீச்வர நாம-மந்த்ரை:।
திவ்யாச்ரிதம் புஜகபூஷண-முத்வஹந்தி
யே பாதபத்ம-மிஹ தே சிவ தே க்ருதார்த்தா: ॥ 72 ॥

(சிவ) சிவனே! (த்யான-அஞ்ஜனேன) தியானமாகிற மையினால் (ஸமவேக்ஷ்ய) புதையலிருக்கும் இடத்தை—நன்கு தெரிந்துகொண்டு (தம: ப்ரதேசம்) அதை மறைத்துக்கொண்டிருக்கும் இருள் சூழ்ந்த பிரதேசத்தை (பித்வா) பிளந்து (ஈச்வர-நாம-மந்த்ரை:) ஈசுவரனுடைய நாம மந்திரங்களாகிய (மஹாபலிபி:) சிறந்த பலிகளால் (திவ்யாச்ரிதம்) தேவர்களால் சேவிக்கப்பட்டதும் (புஜக பூஷணம்) ஸர்ப்பங்களை ஆபரணமாய்க் கொண்டதுமாகிய (தே) உம்முடைய (பாதபத்மம்) திருவடியெனும் பத்ம நிதியை (யே) எவர்கள் (உத்வஹந்தி) மேலே கொண்டு வருகிறார்களோ (தே) அவர்கள் (இஹ) இவ்வுலகில் (க்ருதார்த்தா:) வாழ்க்கைப் பயனை எய்தியவர்கள்.

த்யானாஞ்ஜனேன—(த்யானமேவ அஞ்ஜனம் அந்த: ஸ்தாபிதம் பரோக்ஷவஸ்து-ப்ரகாசன-ஸமர்த்தம் ஔஷதம் தேன) தியானமே மறைந்து கிடக்கும் புதையலைக் காட்டிக் கொடுக்கும் மை; அதனால்.

மஹாபலிபி:—(நிதி பரிபாலக-தேவதா-ப்ரஸாத - ஜனன - ஸமர்த்தை: பூஜோபகரணை:) புதையலைக் காத்திருக்கும் தேவதைகளைப் பிரீதி செய்விக்கும் பூஜாதிரவியங்களால்.

தம:—இறைவன் திருவடியை அறியமுடியாமல் மறைக்கும் அஞ்ஞானமாகிய இருள். அஞ்ஜனம் (மை)—தியானம்; இருள் பிரதேசம்—அஞ்ஞானம்; பலிபூஜையும் மந்திரோச்சாடனமும்—சிவநாமஜபம்; புதையல்—நாகரத்னம் அல்லது ஸர்ப்பத்தை பூஷணமாய்க்கொண்ட சிவனுடைய திருவடி.

ஒ. (யதா ஹிரண்யநிதிம் நிஹிதம் அக்ஷேத்ரஜ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ ந விந்தேயு: ஏவமேவ இமா: ஸர்வா: ப்ரஜா அஹரஹர்-கச்சந்த்-யத ஏதம் ப்ரஹ்மலோகம் ந விந்தந்த்-யன்ருதேன ஹி ப்ரத்யூடா:) எங்ஙனம் பொற்குவியல் புதைத்து

வைக்கப்பட்ட இடத்தின்மேல் அடிக்கடி நடமாடுபவர்களாயி னும் (அது இருப்பதை) அறியாதவர்கள் அதைக் கண்டு கொள்ள மாட்டார்களோ, அங்ஙனமே இம்மக்கள் அனைவரும் நாள்தோறும் இந்தப் பிரம்ம லோகத்துக்குச் செல்லுபவர்களா யிருந்தும் அதைக் கண்டு கொள்வதில்லை—பொய்மையால் கவரப்பட்டவர்களாதலால். —சாந்தோக்கியோபநிஷத் 8.32.

## 73. முக்திக்கு விளை நிலம்

भूदारता-मुदवहद्यदपेक्षया श्री-
भूदार एव किमतस्सुमते लभस्व ।
केदार-माकलित-मुक्ति-महौषधीनां
पादारविन्दभजनं परमेश्वरस्य ॥ ७३ ॥

பூதாரதா-முதவஹத்-யதபேக்ஷயா ஶ்ரீ-
பூதார ஏவ கிமதஸ்-ஸுமதே லபஸ்வ।
கேதார-மாகலித-முக்தி-மஹௌஷதீனும்
பாதாரவிந்த-பஜனம் பரமேச்வரஸ்ய ॥ 73 ॥

(ஸுமதே) நல்ல குணம் படைத்த புத்தியே! (யத் அபேக்ஷயா) எதை அடைய விரும்பி (ஶ்ரீ-பூ-தாரஃ ஏவ). ஶ்ரீதேவியையும் பூதேவியையும் பத்தினிகளாகக்கொண்ட மகாவிஷ்ணுவே (பூதாரதாம்) வராஹவடிவை (உதவஹத்) எடுத்துக்கொண்டாரோ, (ஆகலித - முக்தி - மஹா - ஓஷ தீனும்) உலகம் விரும்பும் முக்தியாகிற சிறந்த மூலிகை களுக்கு (கேதாரம்) எது விளை நிலமாயுள்ளதோ (பரமேச் வரஸ்ய) அந்தப் பரமேசுவரருடைய (பாதாரவிந்த பஜனம்) திருவடிகளின் சேவையை (லபஸ்வ) நாடிப் பெறுவாயாக. (கிம் அதஃ) அதைக் காட்டிலும் நீ அடையத் தக்கது வேறு என்ன உளது ?

ஶ்ரீபூதார:—ஶ்ரீச்ச பூச்ச ஶ்ரீபுவௌ தே தாராஃ யஸ்ய ஸஃ விஷ்ணு-ரேவ।

முக்தி-மஹௌஷதீனும்—முக்தய: ஸாலோக்யாதயச் சதுர்விதா: தா ஏவ ஔஷதயஸ்-தாஸாம்।

வராஹ வடிவு—சுலோகம் 23ல் உள்ள குறிப்புரையைப் பார்க்க.

ஒ. சிவன் போருக்குச் சென்ருல் அவருக்கு அம்பாகவும், அவர் சஞ்சரிக்கச் சென்ருல் விருஷபமாகவும், அவர் உடலில் பாதியாகிய பராசக்தியாகவும், அவர் திருவடிகளைக் காணும் பொருட்டு வராஹமாகவும், அவரைப் பூஜிப்பதற்குத் தன் கண்ணையே அர்ப்பணம் செய்தவராகவும் இருப்பதால் விஷ்ணு வானவர் பூஜித்தற்குரிய தேவர்களனைவரினும் சிறந்தவரா கின்ருர். அவரினும் உயர்ந்தவர் யாருளர் ? —சுலோகம் 82.

## 74. மனமாகிற பெட்டியிலுள்ள துர்வாசனை நீங்க

आशापाश-क्लेश-दुर्वासनादि-
भेदोद्युक्तै-र्दिव्यगन्धै-रमन्दैः ।
आशा-शाटीकस्य पादारविन्दं
चेतः-पेटीं वासितां मे तनोतु ॥ ७४ ॥

ஆசா-பாச-க்லேச-துர்வாஸனாதி-
பேதோத்யுக்தைர்-திவ்ய கந்தை-ரமந்தை:।
ஆசா-சாடீகஸ்ய பாதாரவிந்தம்
சேத: பேடீம் வாஸிதாம் மே தனோது ॥ 74 ॥

(ஆசா-பாச-க்லேச-) பிணிக்கும் கயிறுபோன்ற ஆசைகள் குழப்பங்கள் ஆகிய (துர்வாஸனாதி-) கெட்ட வாசனைகள் முதலியவற்றை (பேத-உத்யுக்தை:) போக்கு வதில் முனைந்துள்ள (அமந்தை: திவ்யகந்தை:) குறை வற்ற தெய்வீக வாசனைகளால் (ஆசா சாடீகஸ்ய) திகம் பரனை மகேசுவரனுடைய (பாதாரவிந்தம்) திருவடித் தாமரை (மே) எனது (சேத: பேடீம்) மனமாகிற

பெட்டியை (வாஸிதாம்) நல்ல குணமுடையதாக (தஞேது) செய்யட்டும்.

ஆசா-சாடகஸ்ய—ஆசா திக், சாடகம் அம்பரம், யஸ்ய; பஹுவ்ரீஹௌ க-ப்ரத்யயঃ। ஆசா-சாடகஸ்ய திகம்பரஸ்ய இத்யர்த்தঃ।

க்லேசா:—பஞ்ச, அவித்யா-அஸ்மிதா-ராக-த்வேஷ-அபிநிவேசாঃ।

துர்வாஸனு:—துঃ ஸம்ஸ்காராঃ। விஷயங்கள் மறைந்த பின்னும் விஷய வாசனை இருக்கும். அதுவும் மறையவேண்டும்.

ஒ. ஆசையறு மின்கள் ஆசையறுமின்கள்
ஈசனேடாயினும் ஆசையறுமின்கள்
ஆசைப்படப்பட ஆய்வருந்துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்தமாமே. —திருமந்திரம்.

ஒ. ஆசாம் விஹாய பரிஹ்ருத்ய பரஸ்ய நிந்தாம்
பாபே ரதிஞ்ச ஸுநிவார்ய மனঃ ஸமாதௌ।
ஆதாய ஹ்ருத்கமல-மத்யகதம் பரேசம்।
வாராணஸீ புரபதிம் பஜ விச்வநாதம்॥

ஆசையை விட்டு, பிறரை நிந்திப்பதை விட்டு, பாபத்தில் பற்றை அறவே ஒழித்து, மனதை ஒருமுகப்படுத்தி, இருதய கமலத்தின் நடுவிலுள்ள பரமேசுவரனுகிய காசிவிச்வநாதனைப் பஜிப்பாயாக. —விசுவநாதாஷ்டகம் (சங்.)

## 75. மனமாகிற குதிரை

कल्याणिनं सरस-चित्र-गतिं सवेगं
सर्वेङ्गितज्ञ-मनघं ध्रुव-लक्षणाढ्यम् ।
चेतस्तुरङ्ग-मधिरुह्य चर स्मरारे
नेत-स्समस्तजगतां वृषभाधिरूढ ॥ ७५ ॥

கல்யாணினம் ஸரஸ-சித்ரகதிம் ஸவேகம்
ஸர்வேங்கிதஜ்ஞ-மனகம் த்ருவலக்ஷணுட்யம்।
சேதஸ்துரங்க-மதிருஹ்ய சர ஸ்மராரே
நேதஸ்-ஸமஸ்தஜகதாம் வ்ருஷபாதிரூட ॥ 75 ॥

(ஸ்மராரே) மன்மத சத்துருவே! (ஸமஸ்தஜகதாம்) உலகிற்கெல்லாம் (நேதஃ) நாயகரே! (வ்ருஷப-அதிரூட) காளைமாட்டை வாகனமாய்க் கொண்டவரே! (கல்யாணினம்) மங்கள வடிவுடையதும் (ஸரஸ-சித்ர-கதிம்) இன்பமளிக்கக்கூடிய பற்பல அழகிய நடைகளை உடையதும் (ஸவேகம்) வேகத்துடன் கூடியதும் (ஸர்வ-இங்கிதஜ்ஞும்) எல்லா நோக்கங்களையும் உணர்ந்து நடக்கும் அறிவுடையதும் (அனகம்) குற்றங் குறைகளற்றதும் (த்ருவலக்ஷணட்யம்) ஸ்திரமான லக்ஷணங்கள் பொருந்தியதும் ஆகிய (சேதஸ்துரங்கம்) எனது மனக் குதிரைமேல் (அதிருஹ்ய) ஏறிக்கொண்டு (சர) சஞ்சாரம் செய்வீராக.

ஸ்மராரே!—தாரகாஸுரன் தேவர்களை இம்சித்து வருகையில், அவ்வசுரனைக் கொல்லுவதற்குச் சிவனுக்கும் பார்வதிக்கும் ஒரு குமாரன் பிறக்க வேண்டுமென்றும், அல்லாது அவ்வசுரனை அழிக்க இயலாதென்றும் உணர்ந்த தேவர்கள் பரமசிவனை அணுகினார்கள். பரமசிவன் கண்மூடி நீண்ட நிஷ்டையிலிருந்ததால், நிஷ்டையைக் கலைத்து அவர் மனதைப் பார்வதியிடம் திருப்புவதற்கு மன்மதனை ஏவினார்கள். மன்மதனுடைய சேஷ்டையால் சிவன் நெற்றிக் கண்ணைத் திறக்கவே, அதிலிருந்து கிளம்பிய ஜ்வாலை மன்மதனை எரித்து விட்டது. அதனால் சிவனுக்கு 'காமாரி' என்றும் 'ஸ்மராரி' என்றும் பெயர்.

வ்ருஷபாதிரூட!—மெதுவாகக் காளைமாட்டின் மேல் உலகெங்கும் செல்லும் சிவனை வேகமாகப் பாய்ந்து செல்லக்கூடிய மனக் குதிரையை வாகனமாக ஏற்றுக்கொள்ளும்படி பக்தன் வேண்டிக்கொள்ளுகிறான். மனதை இறைவனுக்கு வாகனமாக்குவதுதான் அதை அடக்குதற்கும் வழி.

த்ருவலக்ஷணட்யம்—சுபமான ரேகைகளும் சுழிகளும் உடைய குதிரை. மனதைப் பற்றிக் கூறுமிடத்து நிலைபெற்ற எண்ணத்தையுடையது.

## 76. இன்ப மழை பொழியும் பக்தியெனும் மேகம்

भक्ति-र्महेश-पदपुष्कर-मावसन्ती
कादंबिनीव कुरुते परितोषवर्षम् ।
संपूरितो भवति यस्य मनस्तटाक-
स्तज्जन्म-सस्य-मखिलं सफलं च नान्यत् ॥ ७६ ॥

பக்திர்-மஹேச பத-புஷ்கர-மாவஸந்தீ
காதம்பினீவ குருதே பரிதோஷவர்ஷம் ।
ஸம்பூரிதோ பவதி யஸ்ய மனஸ்தடாகஸ்—
தஜ்ஜன்ம-ஸஸ்ய-மகிலம் ஸபலஞ்ச நான்யத் ॥ 76 ॥

(பக்திঃ) பக்தியானது (மஹேச-பத-புஷ்கரம்-) பரம சிவனுடைய திருவடியாகிற வானத்தில் (ஆவஸந்தீ) இருந்துகொண்டு (காதம்பினீ இவ) மேகக் கூட்டத்தைப் போல் (பரிதோஷ-வர்ஷம்) இன்ப மழையை (குருதே) பொழிகிறது. (யஸ்ய) எவருடைய (மனஸ்-தடாகঃ) மனமாகிற குளம் (ஸம்பூரிதঃ) அதனால் நிரப்பப்பட்ட தாக (பவதி) ஆகிறதோ (தத் ஜன்ம ஸஸ்யம்) அவருடைய பிறவிப் பயிர் (அகிலம்) முழுதும் (ஸபலம்) பயனளிப்ப தாகிறது. (அன்யத் ச) அல்லாதது (ந) அங்ஙனம் ஆவதில்லை.

புஷ்கரம்—ஆகாசம்; ‘வ்யோம-புஷ்கர-மம்பரம்’ இத்யமரঃ ।

ஆகாசம்—ஈசுவரனுடைய திருவடி; மேகம்-பக்தி; மழை-ஆனந்தம்; தடாகம்-மனம்; பயிர்-வாழ்க்கை.

பரிதோஷ-வர்ஷம்—ஒ. ‘வானமாய் நின்றின்ப மழையாயிறங்கி யெனை வாழ்விப்பதுன்பரங் காண்’ —தாயுமானவர்.

ஒ. ‘கண்டாருளத்தினிற் காலூன்றிப் பெய்யுங் கருணைமுகில்’
—தாயுமானவர்.

ஆகாயத்தில் மேகமில்லாவிட்டால் மழை இல்லை. மழை இல்லாவிட்டால் பயிர் சாவியாகப் போகும். இறைவன் திருவடியில் பக்தியில்லாவிட்டால் ஆத்மானந்தமில்லை. அது இல்லாவிட்டால் வாழ்க்கை வீணாகப் போகும்.

## 77. கணவரின் பிரிவாற்றாமையால் தவிக்கும் பெண்மணி போன்ற புத்தி

बुद्धिःस्थिरा-भवितु-मीश्वर-पादपद्म-
सक्ता वधूर्विरहिणीव सदा स्मरन्ती ।
सद्भावना-स्मरण-दर्शन-कीर्तनादि
संमोहितेव शिवमन्त्र-जपेन विन्ते ॥ ७७ ॥

புத்திః ஸ்திரா பவிது-மீச்வர-பாதபத்ம-
ஸக்தா வதூர்-விரஹிணீவ ஸதா ஸ்மரந்தீ ।
ஸத்பாவனா-ஸ்மரண-தர்சன-கீர்த்தனாதி
ஸம்மோஹிதேவ சிவமந்த்ர-ஜபேன வின்தே ॥ 77 ॥

(ஈச்வர-பாத-பத்ம-ஸக்தா) பரமசிவனுடைய திருவடித் தாமரையில் பற்று வைத்துள்ள (புத்திః) என் புத்தியானது (ஸ்திரா பவிதும்) அதில் நிலைபெறும் பொருட்டு (வதூః விரஹிணீ இவ) பிரிவாற்றாமையால் வாடும் பெண்மணியைப் போல் (ஸதா) எப்பொழுதும் (ஸ்மரந்தீ) அதையே நினைத்துக்கொண்டும் (ஸத்பாவனா-) அதை அடையப் போவதைப் பற்றிக் கற்பனை செய்து கொண்டும் (தர்சன-) அகக் கண்ணால் கண்டுகொண்டும் (ஸ்மரண) நினைத்துக் கொண்டும் (கீர்த்தனாதி-) புகழ்ந்து கொண்டும், (சிவமந்த்ர-ஜபேன) சிவமந்திர ஜபத்தால் (ஸம்மோஹிதா இவ) சுய உணர்ச்சியை இழந்தவளைப் போல் (வின்தே) கவலைப்படுகிறது.

வின்தே—விசாரணே விந்ததே.

பர்த்தாவிடமிருந்து பிரிந்த பதிவிரதையைப் போல் புத்தியானது 'சிவனுடைய திருவடியை எப்போது காண்போம்?' என்று கவலைப்படுகிறது.

ஒ. 'பாழான என்மனம் குவியவொரு தந்திரம்
பண்ணுவதுனக்கருமையோ ?' —தாயுமானவர்.

ஒ. ஓயாதோ என்கவலை உள்ளே ஆனந்தவெள்ளம்
பாயாதோ ஐயா பகராய் பராபரமே. —தாயுமானவர்.

ஒ. சூடுவேன் பூங்கொன்றை; சூடிச் சிவன் திரள்தோள்
கூடுவேன்; கூடிமுயங்கி மயங்கி நின்று
ஊடுவேன்; செவ்வாய்க் குருகுவேன்; உள் உருகித்
தேடுவேன்; தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன்; பேர்த்தும் மலர்வேன்; அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண், அம்மானாய்.
—திருவாசகம்.

ஒ. சுலோகம் 84.

## 78. புதிதாக விவாகமான பெண் போன்ற புத்தி

सदुपचार-विधिष्वनुबोधितां
सविनयां सुहृदं सदुपाश्रिताम् ।
मम समुद्धर बुद्धि-मिमां प्रभो
वरगुणेन नवोढ-वधूमिव ॥ ७८ ॥

ஸதுபசார-விதிஷ்-வனுபோதிதாம்
ஸவிநயாம் ஸுஹ்ருதம் ஸதுபாச்ரிதாம் ।
மம ஸமுத்தர புத்தி-மிமாம் ப்ரபோ
வரகுணேன நவோட-வதூமிவ ॥ 78 ॥

(ப்ரபோ) ஆண்டவரே! (ஸதுபசார-விதிஷு) பெரியோர்களை உபசரிக்கும் முறைகளில் (அனுபோதிதாம்) நன்கு போதிக்கப்பட்டதாயும் (ஸவிநயாம்) வணக்கத்துடன் கூடியதாயும் (ஸுஹ்ருதம்) பரிசுத்தமான உள்ளம் படைத்ததாயும் (ஸதுபாச்ரிதாம்) நன்மையிலேயே நாட்டமுடையதாயும் உள்ள (மம) என்னுடைய (இமாம்) இந்த (புத்திம்) புத்தியை (வரகுணேன) மாப்பிள்ளையான

வன் தனது குணச்சிறப்பால் (நவோட-வதூம் இவ) புதி தாக விவாகம் செய்து கொண்ட பெண்ணைத் தேற்றுவது போல் (ஸமுத்தர) கவலையினின்று கைதூக்கி விடுவீராக.

ஒரு பெண்ணைப் பெரியோர்களை உபசரிப்பதிலும் வணக் கத்துடன் நடந்து கொள்வதிலும் பயிற்றுவித்துச் சிறந்த வரனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுப்பதுபோல், பக்தன் தனது புத்தியாகிய கன்னிகையை அங்ஙனம் பயிற்றுவித்துச் சிவபிரானுக்கு அளித்து, அவர் அன்புடன் ஏற்றுத் தமது மடி யில் தூக்கி வைத்துக்கொள்ளவேண்டும் என்று பிரார்த்திக் கிறான்.

ஸமுத்தர—ஒ. (யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா: । அனன்யேனைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே । தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு-ஸம்ஸார ஸாகராத் ॥) எவர்கள் எல்லாக் கருமங்களையும் என்னிடத்தில் துறந்து, என்னையே உயர் பொருளாய்க் கொண்டு, மற் றொன்றைச் சாராத யோகத்தால் என்னையே தியானித்து உபாசிக்கின்றார்களோ, அப்படி என்னிடம் நிலைபெற்ற மன முடைய அவர்களுக்குச் சாவுடன் கூடிய ஸம்ஸாரக் கடலி னின்று நான் கரையேற்றிக் காப்பவனாக ஆகின்றேன்.

—கீதை 12. 6-7.

ஒ. சுலோகம் 84.

## 79. திருவடியைப் பற்றிய சிந்தனை

नित्यं योगिमन-स्सरोज-दल-संचार-क्षम-स्त्वत्-क्रम-
श्शंभो तेन कथं कठोर-यमराड्वक्ष:-कवाटक्षति: ।
अत्यन्तं मृदुलं त्वदंघ्रियुगलं हा मे मनश्चिन्तय-
त्येतल्लोचन-गोचरं कुरु विभो हस्तेन संवाहये ॥ ७९ ॥

நித்யம் யோகிமனஸ்-ஸரோஜதல-ஸஞ்சாரக்ஷமஸ்-த்வத்க்ரம:, சம்போ தேன கதம் கடோர யமராட்வக்ஷ:-கவாடக்ஷதி: । அத்யந்தம் ம்ருதுலம் த்வதங்க்ரியுகலம்

ஹா மே மனச்-சிந்தயத்-யேதல்லோசன-கோசரம் குரு விபோ ஹஸ்தேன ஸம்வாஹயே ॥ 79 ॥

(சம்போ) சம்புவே! (த்வத்) உம்முடைய (க்ரமஃ) காலடி (யோகிமனஃ) யோகிகளின் மனமாகிற (ஸரோஜ-தல-) தாமரையின் இதழ்களில் (நித்யம்) எப்போதும் (ஸஞ்சாரக்ஷமஃ) சஞ்சரிப்பதற்குத் தகுதியுடையது; (தேன) அதனால் (கடோர-) முரடான (யமராட்-வக்ஷஃ கவாட-) யமதர்ம ராஜனுடைய கதவு போன்ற மார்பை (க்ஷதிஃ) காயப்படுத்துதல் (கதம்) எங்ஙனம்? (ஹா) ஐயோ! (த்வத்) உம்முடைய (அங்க்ரியுகலம்) திருவடிகளிரண்டும் (அத்யந்தம்) மிகவும் (ம்ருதுலம்) மெதுவானவையாயிற்றே என்று (மே) எனது (மனஃ) மனம் (சிந்தயதி) நினைத்துக் கவலைப்படுகிறது. (விபோ) எங்கும் நிறைந்தவரே! (ஏதத்) யமனை உதைத்த திருவடியாகிய-இதை (லோசன-கோசரம்) என் கண்ணுக்குத் தெரியும்படியாக (குரு) செய்தருளும். (ஹஸ்தேன) என் கையினால் (ஸம்வாஹயே) பிடித்து விடுகிறேன்.

க்ரமஃ—பதவிந்யாஸ:। க்ஷமஃ—ஸமர்த்தஃ। க்ஷதிஃ—பேதனம். மார்க்கண்டரைக் காப்பதற்காகக் கதவு போன்று கடினமான யமனுடைய மார்பில் உதைத்த கால் நொந்திருக்குமே யென்று எண்ணி என் மனது வருந்துகிறது. அந்தப் பாதத்தை எனக்குக் காட்டியருளினால் என் மனமார அதைப் பிடித்து விடுவேன். சிவனுடைய திருவடி தரிசனமும் திருவடி சேவையும் இதனால் வேண்டப்படுகிறது.

## 80. மனதில் நடம்புரியும் சிவன்

एष्यत्येषजनिं मनोऽस्य कठिनं तस्मिन्नटानीति
मद्रक्षायै गिरिसीम्नि कोमलपद-न्यासः-पुराभ्यासितः।
नोचे-द्दिव्य-गृहान्तरेषु सुमन-स्तल्पेषु वेद्यादिषु
प्रायस्सत्सु शिलातलेषु नटनं शंभो किमर्थं तव ॥ ८० ॥

ஏஷ்யத்யேஷஜனிம் மனோ஽ஸ்ய கடினம் தஸ்மிந்
நடானீதி, மத்-ரக்ஷாயை கிரிஸீம்னி கோமலபத-ந்யாஸ:
புராப்யாஸித: । நோசேத்-திவ்ய - க்ருஹாந்தரேஷு
ஸுமனஸ்-தல்பேஷு வேத்யாதிஷு, ப்ராயஸ்ஸத்ஸு
சிலாதலேஷு நடனம் சம்போ கிமர்த்தம் தவ ॥ 80 ॥

(சம்போ) சம்புவே! '(ஏஷ:) இவன் (ஜனிம்) பிறவியை (ஏஷ்யதி) அடையப்போகிருன்; (அஸ்ய) இவனுடைய (மன:) மனம் (கடினம்) கடினமானது; (தஸ்மின்) அதில் (நடானி) நான் நர்த்தனம் செய்யப்போகிறேன்' (இதி) என்று (மத்ரக்ஷாயை) என்னைக் காப்பதற்காக (கோமல-பத-ந்யாஸ:) மெதுவான பாதங்களின் நடை (கிரிஸீம்னி) மலைப்பிரதேசத்தில் (புரா) முன்னமேயே (அப்யாஸித:) அப்பியசிக்கப்பட்டது. (நோ சேத்) அங்ஙனமில்லாவிட்டால், (திவ்ய-க்ருஹாந்தரேஷு) திவ்யமான வீடுகளினுள்ளும் (ஸுமனஸ்தல்பேஷு) புஷ்பப் படுக்கைகளிலும் (வேத்யாதிஷு) மேடைகளிலும் (ப்ராய:) ஏராளமாக (ஸத்ஸு)—நடனமாட வசதி—இருக்க (சிலா தலேஷு) கல்மயமான இடங்களில் (நடனம்) நடனமானது (தவ) உமக்கு (கிமர்த்தம்) எக்காரணம் பற்றி?

முன் சுலோகத்தில் 'யமனுடைய மார்பு கடினமாயிற்றே, சிவனுடைய மெதுவான பாதம் அதை எப்படி உதைத்தது?' என்று பக்தன் கவலையடைந்தான். இப்போது 'என்னுடைய இருதயம் கல்லைப்போல் கடினமாயிற்றே, அதில் எப்படி சிவன் நடனம் புரிவார்?' என்ற சந்தேகம் தோன்றவே, 'என்னைப் போன்றவர்களுடைய இருதயத்தில் நடனம்செய்து அருள் புரியும் பொருட்டுத்தான் முன்பே சிவன் இமயமலையில் கல் நிறைந்த பிரதேசத்தில் நடந்து பழகிக்கொண்டிருக்கிருர்' எனச் சமாதானம் செய்து கொள்ளுகிருன்.

ஒ. மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள்ளா னலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சில்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே. —திருமந்திரம்.

## 81. ஜீவன் முக்தி

कंचित्काल-मुमामहेश भवतः पादारविन्दार्चनैः
कंचिद्ध्यान-समाधिभिश्च नतिभिः कंचित् कथाकर्णनैः।
कंचित् कंचिदवेक्षणैश्च नुतिभिः कंचिद्दशामीदृशीं
यः प्राप्नोति मुदा त्वदर्पित-मना जीवन् स मुक्तः खलु॥

கஞ்சித்கால-முமாமஹேச பவதঃ பாதாரவிந்தார்ச்சனைঃ, கஞ்சித்-த்யான-ஸமாதிபிச்ச நதிபிঃ கஞ்சித் கதா-கர்ணனைঃ। கஞ்சித் கஞ்சிதவேக்ஷணைச்ச நுதிபிঃ கஞ்சித்தசா-மீத்ருசீம் யঃ ப்ராப்னோதி முதா த்வதர்ப்பித மனா ஜீவன் ஸ முக்தঃ கலு ॥ 81 ॥

(உமாமஹேச) உமையுடன்கூடிய மகேசுவரரே! (கஞ்சித் காலம்) கொஞ்ச காலம் (பவதঃ) உம்முடைய (பாதாரவிந்த-அர்ச்சனைঃ) திருவடித்தாமரைகளை அர்ச்சிப்பதுடனும், (கஞ்சித்) கொஞ்சம் (த்யான-ஸமாதிபிঃ ச) தியானம், ஸமாதி இவைகளுடனும் (கஞ்சித்) கொஞ்சம் (நதிபிঃ) வந்தனங்களுடனும் (கஞ்சித்) கொஞ்சம் (கதா கர்ணனைঃ) சிவகதைகளைக் கேட்பதுடனும் (கஞ்சித்) கொஞ்சம் (அவேக்ஷணைঃ ச) தரிசனங்களுடனும் (கஞ்சித்) கொஞ்சம் (நுதிபিঃ) துதிகளுடனும் (முதா) சந்தோஷத்தால் (த்வத்-அர்ப்பித-மனাঃ) உம்மிடம் மனதை அர்ப்பணம் செய்தவனாக (யঃ) எவன் (ஈத்ருசீம்) இம் மாதிரியான (தசாம்) நிலையை (ப்ராப்னோதி) அடைகிறானோ (ஸঃ) அவன் (ஜீவன்முக்தঃ கலு) நிச்சயமாக உடலில் வாழும்போதே முக்தி எய்தியவன் ஆவான்.

சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்மநிவேதனம் என்று பக்தி ஒன்பது வகையாகக் கூறப்படும். இதுபோன்ற செயல்களில் கருமேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும் மனதும் இடைவிடாது ஈடுபட்டு நின்றால் அதுவே ஜீவன்முக்த நிலையாம்.

தியானம்—ஒ. (யதா பஞ்சாவதிஷ்டந்தே ஞானனி மனஸா ஸஹ। புத்திச்ச ந விசேஷ்டதி தாமாஹு: பரமாங் கதிம் ॥) எப்போது ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனதுடன் அசையாது நிற்கின்றனவோ, புத்தியும் தொழிலற்றுப் போகின்றதோ அதை உயர்ந்தநிலை என்பர்.

—கட. உப. 6.10.

ஸமாதி—ஒ. கற்பனையற்றுக் கனல்வழியே சென்று
சிற்பனை எல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பரமாகத் தகுந்தண் சமாதியே.

—திருமந்திரம்

ஒ. உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னும் ஆனந்தவிளக்கே பராபரமே.
அண்டபிண்டங்காணேன் அகமும் புறமுமொன்றுக்
கண்டவென்னை நீ கலந்த காலம் பராபரமே.

—தாயுமானவர்

ஜீவன்முக்தன்—ஒ. எவன் உள்ளே சுகமுடையவனோ, உள்ளே களியாட்டமுடையவனோ, உள்ளே ஒளி உள்ளவனோ, அந்த யோகி உயிர்வாழும்போதே பிரம்மமாய் பிரம்மத்தில் முக்தியை அடைகிறான். —கீதை 5. 24.

ஆசை, பயம், கோபம் இவையற்றவனாய், தியானத்தில் முயல்பவனாய் உள்ளவன் எப்போதும் முக்தனே.

—கீதை 5. 28.

## 82. ஹரனுடன் இணைந்த ஹரி

बाणत्वं वृषभत्व-मर्धवपुषा भार्यात्व-मार्यापते
घोणित्वं सखिता मृदंगवहता चेत्यादिरूपं दधौ ।
त्वत्पादे नयनार्पणं च कृतवान् त्वद्देहभागो हरिः
पूज्यात्पूज्यतरस्स एव हि न चेत् को वा तदन्योऽधिकः ॥

பாணத்வம் வ்ருஷபத்வ-மர்த்தவபுஷா பார்யாத்வ-மார்யாபதே, கோணித்வம் ஸகிதா ம்ருதங்கவஹதா

சேத்யாதி ரூபம் ததௌ । த்வத்பாதே நயனர்ப்பணஞ்ச க்ருதவான் த்வத்தேஹ-பாகோ ஹரிஃ, பூஜ்யாத் பூஜ்ய-தரஸ்-ஸ ஏவ ஹி ந சேத் கோ வா ததன்யோऽதிகஃ ॥ 82 ॥

(ஆர்யாபதே) அம்பிகாபதியே! (ஹரிஃ) ஹரியானவர் (பாணத்வம்) பாணத்தன்மை (வ்ருஷபத்வம்) விருஷபத் தன்மை (அர்த்தவபுஷா) பாதி சரீரத்தினால் (பார்யாத்வம்) மனைவியாயிருக்குந்தன்மை (கோணித்வம்) பன்றித் தன்மை (ஸகிதா) தோழித்தன்மை (ம்ருதங்க-வஹதா ச) மிருதங்கக்காரத்தன்மை (இத்யாதி ரூபம் ச) என்றது முதலான வடிவத்தையும் (ததௌ) தாங்கினார். (த்வத்-பாதே) உமது பாதத்தில் (நயன-அர்ப்பணஞ்ச) கண்ணின் அர்ப்பணத்தையும் (க்ருதவான்) செய்துள்ளார்; (த்வத்-தேஹபாகஃ) உமது—ஹரிஹர வடிவாகிய—உடலிலும் பங்கு கொண்டுள்ளார்; (ஹி) அக்காரணத்தால் (ஸஃ ஏவ) அவரே (பூஜ்யாத் பூஜ்யதரஃ) பூஜித்தற்குரிய அனைவரினும் மிகுதியாகப் பூஜிக்கப்படுவராயிருக்கிறார். (ந சேத்) அங்ஙனம் இல்லை என்றால் (ததன்யஃ) அவரைக் காட்டிலும் (அதிகஃ) உயர்ந்தவர் (அன்யஃ) பிறர் (கஃ வா) யார்தான் உளர்?

பாணத்வம்—த்ரிபுரஸம்ஹாரத்தில் விஷ்ணுவே சிவன் கையில் பாணமானார். (சுலோகம் 3 உரை பார்க்க).

வ்ருஷபத்வம்—சிவனுக்கு வாகனமாகிய விருஷபமாகவும் அவரே விளங்குகிறார்.

பார்யாத்வம்—சிவனுடைய பத்னியாயிருப்பதும் ஹரியே.
ஒ. அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே.
—அப்பர்

கோணித்வம்—சிவனுடைய திருவடியைக்காண பூமியைக் குடைந்து செல்லப் பன்றியுருக் கொண்டவர் விஷ்ணு. (சுலோகம் 23 உரை பார்க்க).

ஸகிதா—பாற்கடலைக் கடைந்தபோது உண்டான அமிர்தத்தை தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பங்கிடுவதற்கு

மோஹினியாகத் தோன்றின விஷ்ணு சிவனுக்குத் தோழியாகிச் சிவனையும் தன் அழகில் மோஹிக்கச் செய்தார். (பாகவதம் 8.12.)

ம்ருதங்கவஹதா—சிவன் பிரதோஷ காலத்தில் நடன மாடும்போது விஷ்ணு மிருதங்கம் வாசிக்கிறார். ஒ. 'விஷ்ணுः ஸாந்த்ர - ம்ருதங்கவாதனபடு:'—ப்ரதோஷ ஸ்தோத்ரம்; 54வது சுலோகம் உரை பார்க்க.

நயன-அர்ப்பணம்—சிவனுக்கு ஆயிரம் தாமரைப் பூக் கொண்டு அர்ச்சனை செய்கையில் ஒரு பூ குறையக் கண்டு தனது தாமரை போன்ற கண்ணையே அர்ப்பித்தார் என்பது புராண வரலாறு.

தேஹபாக:—ஒ. 'குடமாடுங் கூத்தனை வலத்தே வைத்து.'
—தேவாரம்

ஒ. (கச்ச பகவான் மஹேச: । சங்கர-நாராயணாத்மக: ।) பகவான் மஹேசன் யார்? சங்கரனும் நாராயணனுமாகிய ஒரே மூர்த்தி. —சங்கரர்: பிரச்னோத்தரமாலிகா.

## 83. சிவபூஜையின் சிறப்பு

जनन-मृति-युतानां सेवया देवतानां
न भवति सुखलेश-स्संशयो नास्ति तत्र ।
अजनि-ममृतरूपं सांबमीशं भजन्ते
य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते ॥ ८३ ॥

ஜனன-ம்ருதியுதானாம் ஸேவயா தேவதானாம்
ந பவதி ஸுகலேசஸ்-ஸம்சயோ நாஸ்தி தத்ர ।
அஜனி-மம்ருதரூபம் ஸாம்பமீசம் பஜந்தே
ய இஹ பரம-ஸௌக்யம் தே ஹி தன்யா லபந்தே ॥ 83 ॥

(ஜனன-ம்ருதி-யுதானாம்) பிறப்புக்கும் இறப்புக்கும் உட்பட்ட (தேவதானாம்) தேவதைகளின் (ஸேவயா) ஆராதனையால் (ஸுகலேச:) சிறிதளவு சுகமும் (ந பவதி) உண்டாகாது. (தத்ர) அதில் (ஸம்சய:) சந்தேகம் (ந அஸ்தி) இல்லை. (யே) எவர்கள் (அஜனிம்) பிறப்பற்றவரும்

(அம்ருதரூபம்) மரணமில்லாத உருவத்தையுடையவரும் (ஸாம்பம்) அம்பிகையுடன் கூடியவருமான (ஈசம்) பரம சிவனை (இஹ) இங்கே (பஜந்தே) ஆராதிக்கிறார்களோ (தே ஹி) அவர்களே (தன்யாঃ) பிறவிப்பயனை எய்திய வர்கள்; (பரமஸௌக்யம்) பேரின்பத்தை (லபந்தே) அடைகிறார்கள்.

ஆசையை வெல்லாதவர்கள் அந்தந்த ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள அதற்கென ஒவ்வொரு தேவதையைப் பூஜிப்பார்கள். ஆசையை வென்றவர்களுக்கு ஒன்றே தெய்வம்.

ஒ. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந் துய்மினே.

அவனிவன் ஈசனென் றன்புற நாடிச்
சிவனிவன் ஈசனென் றுண்மையை யோரார்
பவனிவன் பல்வகை யாமிப் பிறவி
புவனிவன் போவது பொய்கண்ட போதே.

—திருமந்திரம்

ஒ. 'ஸஹஸ்ரம் வர்த்தந்தே ஜகதி விபுதாঃ'—சுலோகம் 4.
'நாலம் வா ஸக்ருதேவ தேவ பவதঃ ஸேவா'
—சுலோகம் 33.

ஒ. (யோ வை பூமா தத்ஸுகம், நால்பே ஸுகமஸ்தி ।) எது அளவு கடந்ததோ அதுவே சுகம். அல்பத்தில் சுகமில்லை.
—சாந். உப. 7.23.1.

## 84. புத்தியாகிற கன்னிகை

शिव तव परिचर्या-सन्निधानाय गौर्या
भव मम गुणधुर्यां बुद्धिकन्यां प्रदास्ये ।
सकल-भुवन-बन्धो सच्चिदानन्द-सिन्धो
सदय हृदय-गेहे सर्वदा संवस त्वम् ॥ ८४ ॥

சிவ தவ பரிசர்யா-ஸந்நிதாநுய கௌர்யா
பவ மம குணதுர்யாம் புத்தி-கன்யாம் ப்ரதாஸ்யே।
ஸகல-புவன-பந்தோ ஸச்சிதானந்த-ஸிந்தோ
ஸதய ஹ்ருதய-கேஹே ஸர்வதா ஸம்வஸ த்வம் ॥ 84 ॥

(சிவ) மங்கள மூர்த்தியே! (பவ) உலகை ஆக்கு பவரே! (ஸகல-புவனபந்தோ) உலகனைத்திற்கும் உற்ற உறவினரே! (ஸச்சிதானந்த-ஸிந்தோ) ஸச்சிதானந்தக் கடலே! (ஸதய) தயையுடன் கூடியவரே! (தவ) உமக்கு (கௌர்யா) பார்வதியுடன்கூட (பரிசர்யா-ஸந்நிதாநுய) பணிவிடைக்குப் பக்கத்திலிருக்க (குணதுர்யாம்) நற் குணங்கள் நிறைந்த (மம) என்னுடைய (புத்தி-கன்யாம்) புத்தியாகிற கன்னிகையை (ப்ரதாஸ்யே) தானம் செய் கிறேன். (த்வம்) நீர் (ஹ்ருதயகேஹே) எனது இருதய மாகிற வீட்டில் (ஸர்வதா) எப்போதும் (ஸம்வஸ) வசிப்பீராக.

சிவ! பவ! ஸகல - புவன - பந்தோ! ஸச்சிதானந்த ஸிந்தோ! ஸதய! முதலிய சொற்களால் கலியாணம் செய்து கொள்ளப்போகும் வரனிடம் மங்கள ஸ்வபாவமும், ஆக்கியளிக் கும் சக்தியும், உற்றாரைப் போஷிக்கும் சீலமும், ஆயுளும் அறிவும் ஆனந்தமும் நிறைந்த தன்மையும், தயாள குணமும் இருப்பது அறியப்பட்டதாகிறது. பெண்ணைப் பெற்றவன் நல்ல குணசாலியைத் தேடித்தான் கலியாணம் செய்து கொடுக்கவேண்டும்.

குணதுர்யாம்—கன்னிகையும் நற்குணங்கள் நிறைந்த வள் என்பது கூறப்படுகிறது. இதனுல் விவாஹம் பொருத்த மாகும். 'யா தேவீ ஸர்வபூதேஷு புத்திரூபேண ஸம்ஸ்த்திதா' என்றதால் புத்தியும் பராசக்தியின் அம்சமே.

பரிசர்யா-ஸந்நிதாநுய—பரிசர்யார்த்தம் ஸமீபஸ்த்திதயே।

கௌர்யா—கௌரியுடன் கூடி கௌரியைப் போலவே உமக்குப் பணிவிடை செய்துகொண்டு எப்போதும் உமது ஸமீபத்திலேயே இருக்க.

கன்யாம் ப்ரதாஸ்யே—கன்னிகாதானத்தின் போது கன்னிகையின் பிதா சொல்லும் மந்திரத்தில் மோக்ஷ இச்சை அடங்கியுள்ளது: "கன்யே மமாக்ரதோ பூயா: கன்யே மே தேவி பார்ச்வத:। கன்யே மே ஸர்வதோ பூயாஸ் த்வத்தானுன்-மோக்ஷமாப்னுயாம் ॥"

மோக்ஷத்தை விரும்பி புத்தியாகிற என் பெண்ணை உமக்கு தானம் செய்து கொடுக்கிறேன். உமது வாசத்திற்கு என் இருதயமாகிற வீட்டையும் தானம் செய்கிறேன். ஏற்றுக் கொண்டருள்வீராக.

ஒ. சுலோகம் 98; சுலோகம் 77.

## 85. சிவனுடைய விசித்திரமான ஆகாரமும் ஆபரணமும்

जलधिमथनदक्षो नैव पातालभेदी
न च वनमृगयायां नैव लुब्धः प्रवीणः ।
अशन-कुसुम-भूषा-वस्त्रमुख्यां सपर्यां
कथय कथमहं ते कल्पयानीन्दुमौले ॥ ८५ ॥

ஜலதிமதன தக்ஷோ நைவ பாதால-பேதீ
ந ச வன-ம்ருகயாயாம் நைவ லுப்த: ப்ரவீண: ।
அசன-குஸும-பூஷா-வஸ்த்ர-முக்யாம் ஸபர்யாம்
கதய கதமஹம் தே கல்பயானீந்துமௌலே ॥ 85 ॥

(இந்து மௌலே) பிறை சூடியே! (உமக்கு ஆஹாரம் விஷம், புஷ்பம் சந்திரன், ஆபரணம் நாகராஜன், ஆடை புலித்தோலும் யானைத்தோலும்). (அஹம்) நான் (ஜலதிமதன தக்ஷ: ந ஏவ) ஸமுத்திரத்தைக் கடைய வல்லவன் அல்லேன்; (பாதாலபேதீ ந ச) பாதாளத்தைப் பிளக்க வல்லவனும் அல்லேன்; (வநம்ருகயாயாம்) காட்டு மிருகங்களை வேட்டையாடுவதில் (லுப்த: ப்ரவீண: ந ஏவ) கெட்டிக்காரனை வேடனும் அல்லேன்; (அசன-) ஆஹாரம் (குஸும-) புஷ்பம் (பூஷா-) ஆபரணம்

(வஸ்த்ர-) வஸ்திரம் (முக்யாம்) முதலியவற்றைக்கொண்ட (ஸபர்யாம்) பூஜையை (கதம்) எவ்வாறு (கல்பயானி) கூட்டுவிப்பேன்? (கதய) சொல்லும்.

பூஜையின் முக்கியமான அங்கங்கள் வஸ்திரம், ஆபரணம், புஷ்பம், நைவேத்தியம் முதலியன. உமக்கு வஸ்திரம் புலித் தோலும் யானைத்தோலும்; ஆபரணம் பாதாள உலகிலுள்ள சிறந்த ஸர்ப்பங்கள்; புஷ்பம் பாற்கடலைக் கடைந்தபோது தோன்றிய சந்திரன்; ஆஹாரம் பாற்கடலைக் கடைந்தபோது அமிர்தம் தோன்றுமுன் கிளம்பிய விஷம். நான் பாதாளத் திற்குச் சென்று நாகஸர்ப்பங்களைக் கொண்டுவரவோ, பாற் கடலைக் கடைந்து சந்திரனையோ விஷத்தையோ உற்பத்தி செய்யவோ, வேட்டையாடிப் புலித்தோலையோ யானைத் தோலையோ கொண்டுவரவோ சக்தியில்லாதவன். அப்படி யிருக்க உமக்குப் பிரியமான பொருள்களைத் தேடி எங்ஙனம் நான் பூஜை செய்வேன்?

சிவனுடைய ஆபரணமும் ஆடையும் உண்டியும் பைத்தியக் காரனுடையதைப்போல் விசித்திரமாயிருப்பதால், சுந்தர மூர்த்தி நாயனார் 'பித்தா பிறை சூட' என்று பாடினார். மாணிக்கவாசகரும்—

'சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத் தொழும்பையு மீசற்கென்று
விரிப்பிப்பன் என்னை விடுதி கண்டாய் விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் தோலுடைப்பிச்சன் நஞ்சூண் பிச்சன் ஊர்ச்சுடுகாட்டு
எரிப்பிச்சன் என்னையுமாளுடைப்பிச்சன் என்றேசுவனே'

என்றார். இது நிந்தாஸ்துதி.

## 86. அடியும் முடியும் யார் காணவல்லர்?

पूजाद्रव्य-समृद्धयो विरचिताः पूजां कथं कुर्महे
पक्षित्वं न च वा किटित्व-मपि न प्राप्तं मया दुर्लभम्।
जाने मस्तक-मंघ्रिपल्लव-मुमाजाने न तेऽहं विभो
न ज्ञातं हि पितामहेन हरिणा तत्त्वेन तद्रूपिणा ॥८६॥

பூஜாத்ரவ்ய-ஸம்ருத்தயோ விரசிதாः பூஜாம் கதம் குர்மஹே, பக்ஷித்வம் ந ச வா கிடித்வ-மபி ந ப்ராப்தம் மயா துர்லபம் । ஜானே மஸ்தக-மங்க்ரிபல்லவ-முமாஜானே ந தேऽஹம்விபோ, ந ஜ்ஞாதம் ஹி பிதாமஹேன ஹரிணா தத்வேன தத்ரூபிணா ॥ 86 ॥

(உமாஜானே) உமாபதியே! (விபோ) எங்கும் நிறைந்தவரே! (பூஜா-த்ரவ்ய-ஸம்ருத்தயः) பூஜாத் திரவியங்கள் குவியல் குவியல்களாக (விரசிதாः) சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. (பூஜாம்) பூஜையை (கதம்) எவ்வாறு (குர்மஹே) செய்வோம்? (பக்ஷித்வம்) அன்னப் பறவைத்தன்மை (மயா) என்னால் (ந ப்ராப்தம்) அடையப் படவில்லை; (ந ச வா கிடித்வம் அபி) பன்றித்தன்மையும் கூட அடையப்படவில்லை; (துர்லபம்) அடைதலும் இயலாது. (அஹம்) நான் (தே) உம்முடைய (மஸ்தகம்) முடியையும் (அங்க்ரிபல்லவம்) தளிர்போன்ற திருவடியை யும் (ந ஜானே) உணரவில்லை. (தத்ரூபிணா) அன்னப் பறவையும் பன்றியுமாகிய அவ்வுருவங்களையடைந்த (பிதாமஹேன) பிரம்மாவாலும் (ஹரிணா) விஷ்ணுவாலும் (ஹி) கூட (ந ஜ்ஞாதம்) அறியப்படவில்லையே.

சிவன் உகக்கும் பூஜாதிரவியங்களைச் சேகரிப்பது இயலாது என்று முன் சுலோகத்தில் கூறினார். பூஜாதிரவியங் களைச் சேகரித்தாலும் அவருடைய திருவுருவின் அடியும் முடியும் காண இயலாமையால் பூஜை செய்வதெங்ஙனம் என்று இங்கு வியப்படைகிறார்.

உமாஜானே—உமா பார்வதீ ஜாயா யஸ்ய ஸः தஸ்ய ஸம்புத்திः உமாஜானே ।

பிதாமஹேன ஹரிணா—சுலோகம் 23ல் குறிப்பைப் பார்க்க.

ஒ. 'பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியுமெல்லாப் பொருண்முடிவே'
—திருவெம்பாவை.

## 87. பக்தியொன்றே வேண்டப்படுவது

अशनं गरलं फणी कलापो
वसनं चर्म च वाहनं महोक्षः ।
मम दास्यसि किं किमस्ति शंभो
तव पादांबुज-भक्तिमेव देहि ॥ ८७ ॥

அசனம் கரலம் பணீ கலாபோ
வஸனம் சர்ம ச வாஹனம் மஹோக்ஷ: ।
மம தாஸ்யஸி கிம் கிமஸ்தி சம்போ
தவ பாதாம்புஜ-பக்திமேவ தேஹி ॥ 87 ॥

(சம்போ) சம்புவே! (அசனம்) உமது ஆஹாரம் (கரலம்) விஷம்; (கலாப:) ஆபரணம் (பணீ) பாம்பு; (வஸனம்) ஆடை (சர்ம) தோல்; (வாஹனம் ச) வாஹனமோ (மஹோக்ஷ:) பெரிய காளைமாடு. (மம) எனக்கு வேண்டியது (கிம்) எதை (தாஸ்யஸி) நீர் கொடுக்கப் போகிறீர்? (கிம் அஸ்தி) என்ன இருக்கிறது? (தவ) உம்முடைய (பாதாம்புஜ-பக்திம் ஏவ) திருவடித்தாமரைகளில் பக்தியொன்றையே (தேஹி) கொடுத்தருள்வீராக.

ஒ. யாம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல;
நின்பால் அருளும் அன்பும் அறனும் மூன்றும்.
—பரிபாடல்.

ஒ. (அகிஞ்சன: ஸன் ப்ரபவ: ஸ ஸம்பதாம், த்ரிலோக நாத: பித்ருஸத்மகோசர: । ஸ பீமரூப: சிவ இத்யுதீர்யதே ந ஸந்தி யாதார்த்ய-வித: பிநாகின: ॥) ஒன்றுமில்லாதவனாயிருந்தும் அவன் எல்லா ஸம்பத்துக்களையும் அளிப்பவன்; மூவுலகிற்கும் நாயகன் எனினும் இமயத்தில் காணக்கூடியவன்; மங்களரூபி எனப்படுகிறான். பிநாகியாகிய சிவபிரானுடைய உண்மை நிலையை உணர்ந்தவர் இல்லை.
—பார்வதி: குமாரஸம்பவம்.

அசனம் கரலம்—(பக்தரக்ஷண அபிப்ராயேண) விஷத்தை உண்பது பக்தர்களை ஆபத்திலிருந்து காப்பவர் என்பதைக் காட்டுகிறது.

பணி கலாபः—(அபயத்வ அபிப்ராயேண) ஸர்ப்ப பூஷணம் அடியார்களின் பயத்தை நீக்குவதற்காக.

வஸனம் சர்ம—(நிஸ்ப்ருஹத்வாபிப்ராயேண துஷ்ட நிக்ரஹம் வா) தோல் ஆடை போகத்தில் பற்றின்மையையும், துஷ்டர்களை நிக்ரஹம் செய்யும் குணத்தையும் காட்டுகிறது.

வாஹனம் மஹோக்ஷः—விருஷபவாஹனம் தர்மதேவதை. ஸத்துவமும் ஸாவதானமும் விளங்குகிறது.

உன்னைப் பார்த்தாலே 'எனக்கு ஏதாவது கொடு' என்று கேட்கத் தோன்றவில்லை. என்னிடத்திலும் உனக்குக் கொடுக்க ஒன்றுமில்லை. நான் என்னையே கொடுக்கிறேன். நீ உன்னையே கொடு. உன் திருவடியில் பக்தியைக் கொடு.

ஒ. தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச் சங்கரா யார் கொலோ சதுரர், அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ பெற்ற தொன்றென்பால், சிந்தையே கோயில் கொண்ட வெம்பெருமான் திருப்பெருந்துறையுறை சிவனே, எந்தையே ஈசா உடலிடங்கொண்டாய் யானிதற் கிலனொர் கைம்மாறே. —திருவாசகம்.

## 88. அர்ச்சனையும் ஸ்தோத்திரமும் தியானமும்

यदा कृतांभोनिधि-सेतुबन्धनः
  करस्थलाधः कृत-पर्वताधिपः ।
भवानि ते लंघित-पद्मसंभवः
  तदा शिवार्चा-स्तव-भावन-क्षमः ॥ ८८ ॥

யதாக்ருதாம்போநிதி-ஸேதுபந்தனः
  கரஸ்த்தலாதः க்ருத-பர்வதாதிபः ।
பவானி தே லங்கித-பத்மஸம்பவः
  ததா சிவார்ச்சா-ஸ்தவ-பாவன-க்ஷமः ॥ 88 ॥

(சிவ) சிவனே ! (க்ருத - அம்போ - நிதி-ஸேதுபந் தனः)—ஸ்ரீராமனைப்போல்—ஸமுத்திரத்தில் அணைகட்டியவனாகவும், (கரஸ்த்தலாதः க்ருத-பர்வதாதிபः) அகஸ்தியரைப்போல்—கைத்தலத்தால் மலையரசை யமுக்கியவனாகவும் (லங்கித-பத்மஸம்பவः) விஷ்ணுவின் நாபிகமலத்திலுதித்த பிரம்மாவையும் மீறியவனாகவும் (யதா) எப்போது நான் ஆவேனோ—(ததா) அப்போது (தே) உம்முடைய (அர்ச்சா-) அர்ச்சனை (ஸ்தவ-) ஸ்தோத்திரம் (பாவன-) தியானம் ஆகியவற்றில் (க்ஷமः) திறமையுடையவனாக (பவானி) ஆவேன்.

இராமேசுவரத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து அர்ச்சித்து ஸேதுபந்தம் செய்த ஸ்ரீராமனைப் போன்றவர்தான் உள்ளபடி உம்மை அர்ச்சனை செய்ய இயலும். தன் யோக பலத்தைக்கொண்டு விந்தியமலையைத் தன் கையால் அமுக்கியவரும் எல்லாக் கலைகளிலும் வல்லவருமாகிய அகஸ்திய முனிவரைப் போன்றவர் தான் உள்ளபடி உம்மைத் துதிக்க இயலும். பிரம்மாகூட உமது முடியைக் காணவோ அல்லது நான்கு வேதங்களாலும் உமது பெருமையை அளவிடவோ முடியவில்லை. உள்ளபடி உணர்ந்து தியானிப்பதற்கு பிரம்மாவையும் மீறியவனாக ஒருவன் இருக்கவேண்டும்.

ஆகையால் நான் எங்ஙனம் அர்ச்சனையும் துதியும் தியானமும் செய்வேன் ?

ஒ. சுலோகம் 30.

## 89. கல்லாலெறிந்தும் கை வில்லாலடித்தும்

नतिभि-र्नुतिभि-स्त्वमीशपूजा-
  विधिभिर्ध्यान-समाधिभि-र्न तुष्टः ।
धनुषा मुसलेन चाश्मभि-र्वा
  वद ते प्रीतिकरं तथा करोमि ॥ ८९ ॥

நதிபிர்-நுதிபிஸ்-த்வமீச பூஜா-
விதிபிர்த்யான-ஸமாதிபிர்-ந துஷ்டः ।
தனுஷா முஸலேன சாச் மபிர் வா
வத தே ப்ரீதிகரம் ததா கரோமி ॥ 89 ॥

(ஈச) உலகையாள்பவரே! (தனுஷா) வில்லாலும் (முஸலேன ச) உலக்கையாலும் (அச்மபிः வா) கற்களாலும் (த்வம்) நீர் எவ்வாறு ஸந்தோஷமடைகிறீரோ அவ்வாறு (நதிபிः) நமஸ்காரங்களாலும் (நுதிபிः) ஸ்தோத்திரங்களாலும் (பூஜாவிதிபிः) பூஜை முறைகளாலும் (த்யான-ஸமாதிபிः வா) தியான ஸமாதிகளாலும் (ந துஷ்டः) ஸந்தோஷமடைவதில்லை. (தே) உமக்கு (ப்ரீதிகரம்) பிரியத்தைத் தருவதை (வத) சொல்லும். (ததா) அப்படியே (கரோமி) செய்கிறேன்.

இது நிந்தாஸ்துதி.

தனுஷா—அர்ஜுனன் பாசுபதாஸ்திரம் பெறுவதற்காகப் பரமசிவனைக் குறித்துத் தவம் செய்தபோது அவனைச் சோதிக்கும் பொருட்டுப் பரமசிவன் அவன் முன் வேடனைப்போல் தோன்றிச் சண்டைக் கிழுத்தார். சண்டையில் அர்ஜுனன் சிவனுடைய நெற்றியில் வில்லால் அடித்தான். சிவன் உயரக் கிளம்பவே அவருடைய இருகால்களையும் பிடித்தான். கட்டுக்கடங்காதவர் பக்திக்குக் கட்டுப்பட்டு அர்ஜுனனிடம் மகிழ்ந்து அவனுக்குப் பாசுபதாஸ்திரமளித்தார்.

முஸலேன—என்னிடம் வில் இல்லை. உலக்கையாலாவது அடிக்கிறேன்.

அச்மபிர்வா—சமணர்களுடைய ஆதிக்கியத்தில் வாழ்ந்த சாக்கிய நாயனார் வெளிப்படையாகச் சிவனைப் பூவால் அர்ச்சியாமல், அர்ச்சிக்கும் பாவனையுடன் தினந்தோறும் சிவலிங்கத்தின்மேல் ஒரு சிறு கல்லை எறிவார். அதனால் சிவன் மகிழ்ச்சியடைந்தார்.

ஒ. கல்லால் எறிந்தும் கை வில்லாலடித்துங் கனிமதுரச்
சொல்லால் துதித்தும் நற்பச்சிலை தூவியுந் தொண்டரினம்
எல்லாம் பிழைத்தனர் அன்பற்ற நான் இனி ஏதுசெய்வேன்
கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே.
—தாயுமானவர்.

## 90. முக்கரணத்தாலும் வழிபாடு

वचसा चरितं वदामि शंभो-
रह-मुद्योग-विधासु तेऽप्रसक्तः ।
मनसाकृति-मीश्वरस्य सेवे
शिरसा चैव सदाशिवं नमामि ॥ ९० ॥

வசஸா சரிதம் வதாமி சம்போ-
ரஹ முத்யோக-விதாஸு தேऽப்ரஸக்தஃ ।
மனஸாக்ருதி-மீச்வரஸ்ய ஸேவே
சிரஸாசைவ ஸதாசிவம் நமாமி ॥ 90 ॥

(அஹம்) நான் (உத்-யோக-விதாஸு) உன்னதமான யோகமுறைகளில் (அப்ரஸக்தஃ) பழக்கமில்லாதவன். (வசஸா) வாக்கினால் (சம்போஃ) உலகிற்கு நலன்களை யருள்பவராகிய (தே) உமது (சரிதம்) திருவிளையாடலை (வதாமி) சொல்லுகிறேன்; (மனஸா) மனதால் (ஈச்வரஸ்ய) உலகை யாள்பவராகிய உமது (ஆக்ருதிம்) திருவுருவை (ஸேவே) வழிபடுகிறேன்; (சிரஸா ச ஏவ) தலையாலும் (ஸதாசிவம்) என்றும் மங்கள வடிவினராகிய உம்மை (நமாமி) நமஸ்கரிக்கின்றேன்.

உத்யோக விதாஸு-உச்சைர்-யோகோ உத்யோகஃ। கருவி கரணங்களுக்கு அப்பாற்பட்ட உம்மை முக்கரணங்களால் வழிபடுகிறேன்.

## 91. அவித்தை அகன்றது

आद्याऽविद्या हृद्गता निर्गतासी-
 द्विद्या हृद्या हृद्गता त्वत्प्रसादात् ।
सेवे नित्यं श्रीकरं त्वत्पदाब्जं
 भावे मुक्ते-र्भाजनं राजमौले ॥ ९१ ॥

ஆத்யா (அ) வித்யா ஹ்ருத்கதா நிர்க்கதாஸீத்-
 வித்யா ஹ்ருத்யா ஹ்ருத்கதா த்வத்ப்ரஸாதாத் ।
ஸேவே நித்யம் ஸ்ரீகரம் த்வத்பதாப்ஜம்
 பாவே முக்தேர்- பாஜனம் ராஜமௌலே ॥ 91 ॥

(ராஜமௌலே) சிரத்தில் சந்திரகலேயுடன் பிரகாசிப்பவரே! (ஆத்யா) ஆதிகாலத்திலிருந்து (ஹ்ருத்கதா) இருதயத்தில் குடிகொண்டிருந்த (அவித்யா) அஞ்ஞானம் (த்வத்-ப்ரஸாதாத்) உமது அருளால் (நிர்க்கதா) வெளிச்சென்றுவிட்டதாக (ஆஸீத்) ஆய்விட்டது; (ஹ்ருத்யா) சிக்கலே யவிழ்க்கும் (வித்யா) ஞானம் (ஹ்ருத்கதா) இருதயத்தில் உறைவதாக ஆயிற்று. (ஸ்ரீகரம்) திருவையளிப்பதும் (முக்தேர்-பாஜனம்) முக்திக்கு இருப்பிடமாகியதுமான (த்வத்-பதாப்ஜம்) உமது திருவடித்தாமரையை (நித்யம்) எப்போதும் (ஸேவே) சேவிக்கிறேன், (பாவே) தியானிக்கிறேன்.

ஹ்ருத்யா—யா ஹரதி, ஹ்ருதயக்ரந்திம் நாசயதி இதி ।

## 92. பாவங்கள் எல்லாம் விலகின

दूरीकृतानि दुरितानि दुरक्षराणि
 दौर्भाग्य-दुःख-दुरहंकृति-दुर्वचांसि ।
सारं त्वदीयचरितं नितरां पिबन्तं
 गौरीश मामिह समुद्धर सत्कटाक्षैः ॥ ९२ ॥

தூரீக்ருதானி துரிதானி துரக்ஷராணி
தௌர்ப்பாக்ய-து:க்க-துரஹங்க்ருதி-துர்வசாம்ஸி ।
ஸாரம் த்வதீயசரிதம் நிதராம் பிபந்தம்
கௌரீச மாமிஹ ஸமுத்தர ஸத்கடாக்ஷை: ॥ 92 ॥

(கௌரீச) உமாபதியே! (துரிதானி) பாவங்களும் (துரக்ஷராணி) கெட்ட தலையெழுத்துக்களும் (தௌர்ப்பாக்ய-) துரதிருஷ்டம் (து:க்க-) துன்பம் (துரஹங்க்ருதி-) துரஹங்காரம் (துர்வசாம்ஸி) கெட்ட வார்த்தைகள் ஆகிய எல்லாம் (தூரீக்ருதானி) தூரத்தள்ளப்பட்டன. (ஸாரம்) சுவை மிகுந்த (த்வதீய சரிதம்) உமது சரித்திரத்தை (நிதராம்) இடைவிடாது (பிபந்தம்) பருகுகிற (மாம்) என்னை (இஹ) இங்கேயே—இப்போதே (ஸமுத்தர) கைதூக்கிவிடும்.

ஒ. அல்லல் என்செயு மருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனூர்க்கு
எல்லை இல்லதோர் அடிமைபூண் டேனுக்கே.
—அப்பர் தேவாரம்.

ஒ. அச்சம்இலர் பாவம்இலர் கேடும்இலர் அடியார்.
—சம்பந்தர் தேவாரம்.

ஒ. நாமார்க்கும் குடிஅல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணிஅறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன் நற்சங்கவெண் குழைஓர் காதிற்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே.
—அப்பர் தேவாரம்.

ஒ. கன்மமேது கடுநர கேது மேற்
சென்மமே தெனைத் தீண்டக் கடவதோ

என்மனோரத மெய்தும் படிக் கருள்
நன்மைகூர் முக்கண் நாதன் இருக்கவே.

—தாயுமானவர்

ஒ. ஆர்ானு மென்னை அமட்ட வொண்ணுதினிச்
'சீரார்பிரான் வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல்லால் இனி
யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனே. —திருமந்திரம்.

## 93. நீலகண்டத்தில் மனது நிலைபெறட்டும்

सोम-कलाधर-मौली
कोमल-घनकन्दरे महामहसि ।
स्वामिनि गिरिजानाथे
मामक-हृदयं निरन्तरं रमताम् ॥ ९३ ॥

ஸோம-கலாதர-மௌலௌ
கோமல-கனகந்தரே மஹாமஹஸி ।
ஸ்வாமினி கிரிஜாநாதே
மாமக-ஹ்ருதயம் நிரந்தரம் ரமதாம் ॥ 93 ॥

(ஸோம-கலாதர-மௌலௌ) சந்திரகலையை முடியிற் சூடியுள்ளவரும் (கோமல-கனகந்தரே) கரிய மேகம்போல் கறுத்த கழுத்தையுடையவரும் (ஸ்வாமினி) அனைத்துல கையும் தமதாகக் கொண்டவரும் (கிரிஜா நாதே) பார்வதீ நாதரும் ஆகிய (மஹாமஹஸி) பரஞ்ஜோதி வடிவில் (மாமக-ஹ்ருதயம்) எனதுள்ளம் (நிரந்தரம்) இடை விடாது (ரமதாம்) களித்திருக்கட்டும்.

மஹாமஹஸி—மஹதி மஹஸி, ஜ்யோதிஷாம் ஜ்யோதிః ப்ரஹ்மணி ।

ஒ. சிவநாமனி பாவிதேऽந்தரங்கே மஹதிஜ்யோதிஷி மானினீ மயார்த்தே । துரிதான்யபயாந்தி தூரதூரே முஹுராயாந்தி மஹாந்தி மங்கலானி ॥

## 94. சிவனை வழிபடுதலே வாழ்க்கைப்பயன்

सा रसना ते नयने तावेव करौ स एव कृतकृत्यः ।
या ये यौ यो भर्गं वदतीक्षेते सदार्चतः स्मरति ॥ ९४ ॥

ஸா ரஸனா தே நயனே தாவேவ கரௌ ஸ ஏவ க்ருத-க்ருத்யः। யா யே யௌ யோ பர்க்கம் வததீக்ஷேதே ஸதார்ச்சதः ஸ்மரதி ॥ 94 ॥

(யா) எது (பர்க்கம்) பரமசிவனை (வததி) பேசுகிறதோ (ஸா) அதுவே (ரஸனா) நாக்கு; (யே) எவை (ஈக்ஷேதே) காண்கின்றனவோ (தே) அவையே (நயனே) கண்கள்; (யௌ) எவை (அர்ச்சதः) பூஜை செய்கின்றனவோ (தௌ ஏவ) அவைகளே (கரௌ) கைகள்; (யः) எவன் (ஸதா) எப்போதும் (ஸ்மரதி) நினைக்கின்றானோ (ஸः ஏவ) அவனே (க்ருதக்ருத்யः) வாழ்க்கைப் பயனை எய்தியவன்.

பர்க்கம்—பரமசிவ-வாசகம் பர்க்க நாம வததி।

ஒ. எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்
அளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே.
—திருமந்திரம்.

ஒ. எம்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க
கங்குல் பகல் எம் கண் மற்றொன்றும் காணற்க;
இங்கிப்பரிசே எமக் கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோ ரெம்பாவாய்.
—திருவெம்பாவை.

ஒ. சுலோகம் 7.

## 95. கல்லைப்போன்ற மனதில் பூவைப்போன்ற திருவடி

अतिमृदुलौ मम चरणावतिकठिनं ते मनो भवानीश ।
इति विचिकित्सां सन्त्यज कथमासीद्गिरौ तथा प्रवेशः ॥९५॥

அதிம்ருதுலௌ மம சரணா-வதிகடினம் தே மனோ பவானீச । இதி விசிகித்ஸாம் ஸந்த்யஜ கதமாஸீத் கிரௌ ததா ப்ரவேசஃ ॥ 95 ॥

(சிவ) சிவனே! (பவானீச) பவானீபதியே! "(மம) என்னுடைய (சரணௌ) அடிகள் (அதிம்ருதுலௌ) மிகவும் மெதுவானவை; (தே) உன்னுடைய (மனஃ) மனது (அதிகடினம்) மிகவும் கடினமானது" (இதி) என்றிவ்வாறு—உமதுள்ளத்திலெழும்—(விசிகித்ஸாம்) சந்தேகத்தை (ஸந்த்யஜ) விட்டு ஒழியும். (ததா) அவ்வாறாயின் (கிரௌ) மலையில் (ப்ரவேசஃ) புகுந்து சஞ்சரித்தல் (கதம்) எவ்வாறு (ஆஸீத்) ஏற்பட்டது?

ஒ. சுலோகம் 80.

## 96. மனதாகிற யானைக்குத் திருவடியே கட்டுத்தறி

धैर्यांकुशेन निभृतं
रभसादाकृष्य भक्तिशृंखलया ।
पुरहर चरणालाने
हृदय-मदेभं बधान चिद्यन्त्रैः ॥ ९६ ॥

தைர்யாங்குசேன நிப்ருதம்
ரபஸாதாக்ருஷ்ய பக்தி-ச்ருங்கலயா।
புரஹர சரணாலானே
ஹ்ருதய-மதேபம் பதான சித்யந்த்ரை ॥ 96 ॥

(புரஹர) திரிபுரஸம்ஹாரம் செய்தவரே! (தைர்ய-அங்குசேன) தைரியம் எனும் அங்குசத்தால் (நிப்ருதம்) அடக்கப்பட்ட (ஹ்ருதய-மத-இபம்) என்னுடைய மனதாகிற மதம்பிடித்த யானையை (பக்திச்ருங்கலயா) பக்தியெனும் சங்கிலியினால் (ரபஸாத்) வேகமாக (ஆக்ருஷ்ய) இழுத்து (சரண-ஆலானே) உமது திருவடியாகிற கட்டுத்தறியில் (சித்-யந்த்ரைঃ) அறிவாகிற யந்திரங்களினால் (பதான) கட்டியருளும்.

தைர்யாங்குசேன—தீரஸ்ய பாவோ தைர்யம் த்வயி ஸ்திரதா நிச்சயரூபம் ததேவாங்குசঃ।

ஓ. (தமேவ தீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மணঃ। நானுத்யாயாத் பஹூன் சப்தான் வாசோ விக்லாபனம் ஹி தத்॥) பிரம்ம நாட்டமுடைய புத்திமான் இதையறிந்து நல்லறிவை அடையட்டும். பல சாஸ்திரங்களை அப்பியாசம் செய்யவேண்டாம். அது வாக்குக்குச் சிரமமேயாகும். —ப்ரு. உப.4.4.21.

சித்யந்த்ரை—சிதঃ ஈச்வரமஹிம-விஷயக-ஜ்ஞானானி தா ஏவ யந்த்ராணி கஜநியமனோபாயாஸ்-தைঃ।

## 97. மனதாகிற யானையை நயமாகக் கட்ட

प्रचरत्यभितः प्रगल्भवृत्त्या
मदवानेष मनः-करी गरीयान् ।
परिगृह्य नयेन भक्ति-रज्ज्वा
परम स्थाणुपदं दृढं नयामुम् ॥ ९७ ॥

ப்ரசரத்யபிதঃ ப்ரகல்ப-வ்ருத்யா
மதவானேஷ மனঃ கரீ கரீயான் ।
பரிக்ருஹ்ய நயேன பக்தி-ரஜ்வா
பரம ஸ்த்தாணுபதம் த்ருடம் நயாமும் ॥ 97 ॥

(பரம) பரமேசுவரா! (மதவான்) மதம் பிடித்ததும் (கரீயான்) பெரியதுமான (ஏஷঃ) இந்த (மனঃ கரீ) மனதா

கிற யானை (ப்ரகல்ப-வ்ருத்யா) அடக்கமுடியாத போக்குடன் (அபிதஃ) எங்கும் (ப்ரசரதி) திரிகிறது. (அமும்) இதை (நயேன) நயமாக (பக்தி-ரஜ்வா) பக்தியெனும் கயிற்ருல் (பரிக்ருஹ்ய) கட்டி வசப்படுத்தி (ஸ்த்தாணு-பதம்) அசைவில்லாத நிலைக்களத்திற்கு (த்ருடம்) கெட்டியாகப் பிடித்து (நய) கூட்டிச் செல்வீராக.

ப்ரகல்பவ்ருத்யா - துர்நிவார - வ்யாபாரேண ।
ஸ்த்தாணுபதம் - ப்ரஹ்மபதம் ।
த்ருடம் - அபுனராவ்ருத்திர்-யதா ததா ।
ஒ. வாராய் நெஞ்சே உன்றன் துன்மார்க்கம் யாவையும்
வைத்துக்கட்டிங் காராய் அடிக்கடி சுற்றுகின்ருயுன் அவலமதிக்கு
ஓராயிரம் புத்தி சொன்ஞலும் ஓர்கிலை ஓ கெடுவாய்
பாராயுனைக் கொல்லுவேன் வெல்லுவேன் அருட்பாங்கு கொண்டே. —தாயுமானவர்.

ஒ. (மன ஏவ மனுஷ்யாணும் காரணம் பந்தமோக்ஷயோஃ। பந்தாய விஷயாஸக்தம் முக்தம் நிர்விஷயம் ஸ்ம்ருதம் ॥) மனது தான் மனிதர்களுடைய பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணம். விஷயப் பற்றுடைய மனது பந்தத்தை விளைக்கிற தென்பதும் விஷயப்பற்று நீங்கிய மனது மோக்ஷத்தையளிக்கிற தென்பதும் பெரியோர்களுடைய கொள்கை.

—அம்ருதபிந்து உபநிஷத்.

விஷயப் பற்று நீங்கி இறைவனுடைய சேவையில் பற்றுள்ள மனதிற்குப் பல உபமானங்கள் சிவானந்தலஹரியில் கூறப்பட்டுள்ளன :—இறைவன் தங்குதற்குரிய தூய்மையான கூடாரம் (21) ; புண்யாஹவாசனக்கலசம் (36) ; ஆகாயம் (38); கைவல்ய நாதருடைய ராஜதானி (39) ; பக்திவயல் (40) ; பஞ்சமுக ஈசுவரன் வாழும் குகை (44); திருவடிக் கூட்டில் உறையும் பக்ஷி (45); திருவடி மாளிகையில் விளையாடும் ஹம்ஸம் (46); நல்லபூவும் பழமும் நிறைந்த தோட்டம் (47) ; சாதகபக்ஷி (59); இரத்தினப்பாதுகை (64) ; உயர்ந்தஜாதிக் குதிரை (75); பதிவிரதை (77); புதிதாக விவாகமான பெண் (78) ; சிறந்த கன்னிகை (84).

விஷயப்பற்றினுல் அறிவு கெட்ட மனதிற்கு உபமானங்கள்: குரங்கு (20); திருடன் (22) ; கொடிய விலங்குகள் வாழும் காடு (42) ; துர்வாசனை நிறைந்த பெட்டி (74); கட்டாந்தரை (80); மதம் பிடித்த யானை (97).

ஒ. கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங் கரடி வெம்புலி
வாயையுங் கட்டலாம் ஒருசிங்க முதுகின்மேற்
கொள்ளலாங் கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலின் இரதம் வைத்து ஐந்து லோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம் வேருெருவர் காணுமல்
உலகத்துலாவலாம் விண்ணவரை ஏவல் கொளலாம்
சந்ததமும் இளமையோடிருக்கலாம் மற்ருெரு
சரீரத்தினும் புகுதலாஞ் சலமேல் நடக்கலாம்
கனல்மேலிருக்கலாந் தன்னிகரில் சித்தி பெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது
சத்தாகி என்சித்தமிசை குடிகொண்ட
அறிவான தெய்வமே தேசோ மயானந்தமே.
—தாயுமானவர்.

## 98. கவிதையாகிற கன்னிகை

सर्वालंकारयुक्तां सरलपदयुतां साधुवृत्तां सुवर्णां
सद्भिस्संस्तूयमानांसरसगुणयुतां लक्षितां लक्षणाढ्याम् ।
उद्यद्भूषाविशेषा-मुपगतविनयां द्योतमानार्थ-रेखां
कल्याणीं देव गौरी-प्रिय मम कविता-कन्यकां त्वं
गृहाण ॥ ९८ ॥

ஸர்வாலங்காரயுக்தாம் ஸரலபதயுதாம் ஸாதுவ்ருத்தாம் ஸுவர்ணும், ஸத்பிஸ்ஸம்ஸ்தூயமாணும் ஸரஸகுணயுதாம் லக்ஷிதாம் லக்ஷணுட்யாம் । உத்யத்பூஷாவிசேஷா-முபகத-விநயாம் த்யோதமாணுர்த்தரேகாம், கல்யாணீம் தேவ கௌரீ-ப்ரிய மம கவிதா-கன்யகாம் த்வம் க்ருஹாண ॥

(தேவ) மகாதேவனே ! (கௌரீப்ரிய) கௌரியின் பிரியனே ! (ஸர்வாலங்கார-யுக்தாம்) எல்லா அலங்காரங்

களுடன் கூடினவளும் (ஸரளபதயுதாம்) அழகிய நடையுடையவளும் (ஸாதுவ்ருத்தாம்) நல்லொழுக்கமுடையவளும் (ஸுவர்ணாம்) சிறந்த மேனிப் பொலிவு படைத்தவளும் (ஸத்பிஃ ஸம்ஸ்தூயமாநாம்) நல்லோர்களால் கொண்டாடப்பட்டவளும் (ஸரஸ-குணயுதாம்) இனிய குணங்கள் படைத்தவளும் (லக்ஷிதாம்) உத்தமப் பெண்ணெனக் கருதப்பட்டவளும் (லக்ஷண்யாம்) சிறந்த லக்ஷணங்கள் பொருந்தியவளும் (உத்யத்-பூஷா-விசேஷாம்) ஒளி வீசும் ஆபரணங்களால் சிறந்து விளங்குபவளும் (உபகத-விநயாம்) வணக்கமுடையவளும் (த்யோதமான-அர்த்தரேகாம்) கைகளில் தனரேகை பிரகாசிப்பவளும் (கல்யாணீம்) மங்களவடிவினளும் ஆன (மம) என்னுடைய (கவிதா-கன்யகாம்) கவிதை எனப் பெயர் பெற்ற கன்னிகையை (க்ருஹாண) பாணிக்ரஹணம் செய்து கொள்வீராக.

இது 'சிவானந்தலஹரீ' ஆகிய கவிதைக்கும் கன்னிப் பெண்ணுக்கும் சிலேடை. கவிதைக்குக் கூறுமிடத்துப் பின்வருமாறு அர்த்தம் பொருந்தும்.

(தேவ) மஹா தேவா! (கௌரீப்ரிய) கௌரியின் பிரியனே! (ஸர்வாலங்காரயுக்தாம்) உவமை முதலிய எல்லா அலங்காரங்களுடன் கூடியதாயும் (ஸரலபதயுதாம்) எளியதும் இனியதுமான சொற்களாலமைந்ததாயும் (ஸாதுவ்ருத்தாம்) சிறந்த விருத்தங்களைக் கொண்டதாயும் (ஸுவர்ணாம்) சிறந்த அக்ஷரங்களின் பொலிவுடையதாயும் (ஸத்பிஃ) ஞானிகளால் (ஸம்ஸ்தூயமாநாம்) போற்றப்படுவதாயும் (ஸரஸகுணயுதாம்) பலவித ரஸங்களும் சீரிய குணங்களும் விளங்குவதாயும் (லக்ஷிதாம்) பக்தியெனும் லக்ஷியத்தை உடையதாயும் (லக்ஷண்யாம்) காவிய லக்ஷணங்கள் நிறைந்ததாயும் (உத்யத்-பூஷா-விசேஷாம்) கவர்ச்சியான சொல்லணிகளை உடையதாயும் (உபகதவிநயாம்) அடக்கத்துடன்கூடிய தாயும் (த்யோத-

மான-அர்த்தரேகாம்) பிரகாசிக்கும் அர்த்தத் தொடர்ச்சியுடையதாயும் (கல்யாணீம்) மங்களத்தையளிப்பதாயும் விளங்கும் (மம) என்னுடைய (கவிதா-கன்யகாம்) கன்னிப் பெண் போன்ற இக்கவிதையை (க்ருஹாண) ஏற்றுக் கொள்வீராக.

## 99. அடிமுடி தரிசனம்

इदं ते युक्तं वा परमशिव कारुण्यजलधे
गतौ तिर्यग्रूपं तव पदशिरो-दर्शन-धिया ।
हरिब्रह्माणौ तौ दिवि भुवि चरन्तौ श्रमयुतौ
कथं शंभो स्वामिन् कथय मम वेद्योसि पुरतः ॥ ९९ ॥

இதம் தே யுக்தம் வா பரமசிவ காருண்யஜலதே
கதௌ திர்யக்ரூபம் தவ பதசிரோ-தர்சனதியா।
ஹரிப்ரஹ்மாணௌ தௌ திவி புவி சரந்தௌ ச்ரமயுதௌ
கதம் சம்போ ஸ்வாமின் கதய மம வேத்யோஸி புரதः

(பரமசிவ) பரமசிவனே! (காருண்யஜலதே) கருணைக் கடலே! (தவ) உம்முடைய (பதசிரः) அடியையும் முடியையும் (தர்சனதியா) காணவேண்டுமென்ற கருத்துடன் (ஹரி-ப்ரஹ்மாணௌ தௌ) பிரம்மா விஷ்ணு ஆகிய அவ்விருவரும் (திர்யக்-ரூபம் கதௌ) பறவையும் மிருகமும் ஆகிய பிராணிகளின் உருவத்தையடைந்து (திவி புவி) ஆகாயத்திலும் பூமியிலும் (சரந்தௌ) அலைந்து (ச்ரமயுதௌ) களைத்தவர்களாயினர். (சம்போ) மங்களத்தையளிப்பவரே! (ஸ்வாமின்) ஆண்டவரே! (மம) என் (புரதः) முன்பு (கதம்) எங்ஙனம்-இவ்வளவு எளிதில்-(வேத்யः) கண்டறிதற்குரியவராக (அஸி) இருக்கிறீர்? (இதம்) இது (தே) உமக்கு (யுக்தம் வா) பொருத்தம் தானா?

ஒ. சுலோகம் 23; சுலோகம் 86.

## 100. சிவபரத்துவம்

स्तोत्रेणाल-महं प्रवच्मि न मृषा देवा विरिंचादयः
स्तुत्यानां गणनाप्रसंग-समये त्वामग्रगण्यं विदुः ।
माहात्म्याग्र-विचारण-प्रकरणे धानातुषस्तोमव-
द्धूतास्त्वां विदुरुत्तमोत्तम-फलं शंभो भवत्सेवकाः ॥100॥

इति श्रीमत्परमहंस-परिव्राजकाचार्य श्रीमच्छंकराचार्य-
विरचित-शिवानन्दलहरी समाप्ता ॥

ஸ்தோத்ரேணுல-மஹம் ப்ரவச்மி ந ம்ருஷா தேவா விரிஞ்சாதயஃ ஸ்துத்யானும் கணனுப்ரஸங்க-ஸமயே த்வாமக்ர-கண்யம் விதுஃ । மாஹாத்ம்யாக்ர-விசாரண-ப்ரகரணே தானுதுஷஸ்தோமவத்-தூதாஸ்-த்வாம் விது-ருத்தமோத்தம-பலம் சம்போ பவத்-ஸேவகாஃ ॥ 100 ॥

*இதிஸ்ரீமத் பரமஹம்ஸ-பரிவ்ராஜகாசார்ய-*
*ஸ்ரீசங்கரசார்ய-விரசித-*
*சிவானந்தலஹரீ-ஸமாப்தா ॥*

(சம்போ) சம்புவே! (ஸ்தோத்ரேண அலம்)—மனதுக்கும் வாக்குக்கும் எட்டாத உம்முடைய பெருமையை எவ்வளவு பேசினுலும் முடிவில்லையாகையால்—துதித்தது போதும். (அஹம்) நான் (ம்ருஷா) இல்லாததை (ந ப்ரவச்மி) சொல்லவில்லை. (தேவாஃ) தேவர்க்ள் (விரிஞ்சாதயஃ) பிரம்மா முதலானவர்கள் (ஸ்துத்யானும்) போற்றுதற்குரியவர்களின் (கணனு-ப்ரஸங்க-ஸமயே) எண்ணிக்கையைத் தீர்மானம் செய்யும் சமயத்தில் (த்வாம்) உம்மையே (அக்ரகண்யம்) முதலில் எண்ணத் தக்கவராக (விதுஃ) அறிகிருர்கள் ; (பவத்ஸேவகாஃ) உமது அடியார்கள் (மாஹாத்ம்ய-அக்ர-விசாரண-ப்ரகரணே) உன்னதப் பதவிக்குரியவரைப்பற்றி விசாரிக்குந் தருணத்தில் (தானு-துஷ-ஸ்தோமவத்) தானியத்துடன் கலந்த உமிக்கூட்டம்போல் மற்ற தேவர்கள் (தூதாஃ) ஒதுக்கப்

பட்டவர்களாகின்றனர்; (த்வாம்) உம்மையே (உத்த மோத்தம-பலம்) சிறந்தவற்றுள் சிறந்த தானியம்போன்று போற்றத்தக்க பொருளாக (விதுஃ) அறிகிருர்கள்.

ஒ. தேவர் கோ அறியாத தேவதேவன் செழும்
பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை
மூவர் கோனுய் நின்ற முதல்வன்; மூர்த்தி; மூதாதை;
மாதாளும் பாகத் தெந்தை;
யாவர்கோன்; என்னையும் வந்தாண்டு கொண்டான்;
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்;
மேவினேம் அவனடியார் அடியாரோடு
மேன்மேலுங் குடைந்தாடி ஆடுவோமே.

—திருவாசகம்

இங்ஙனம் ஶ்ரீமத்ப்ரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஶ்ரீ சங்கராசாரியரருளிய சிவானந்தலஹரீ முற்றும்.

## சுலோகங்களின் அகராதி


அங்கோலம் நிஜபீஜஸந்ததிః ... 61
அசனம் கரளம் பணீ ... 87
அதிம்ருதுலௌ மம ... 95
அமிதமுதம்ருதம் முஹுர் ... 68
அரஹஸி ரஹஸி ஸ்வதந்த்ர ... 70
அஸாரே ஸம்ஸாரே ... 13
ஆகாசேன சிகீ ஸமஸ்த ... 53
ஆகீர்ணே நகராஜிகாந்தி ... 46
ஆத்யாவித்யா ஹ்ருத்கதா ... 91
ஆத்யாயாமித-தேஜஸே ... 55
ஆனந்தாம்ருத பூரிதா ... 49
ஆம்னாயாம்புதிமாதரேண ... 37
ஆரூடபக்தி குணகுஞ்சித ... 71
ஆனந்தாச்ருபிராதனோதி ... 62
ஆசாபாச-க்லேச-துர்வாஸனாதி ... 74
இதந்தே யுக்தம் வா ... 99
உபேக்ஷா நோ சேத் கிம் ... 15
ஏகோ வாரிஜபாந்தவః ... 58
ஏஷ்யத்-யேஷஜனிம் ... 80
கஞ்சித் கால-முமாமஹேச ... 81
கதா வா கைலாஸே ... 24
கதா வா த்வாம் த்ருஷ்ட்வா ... 26
கரலக்னம்ருகః கரீந்த்ர ... 44
கரஸ்த்தே ஹேமாத்ரௌ ... 27
கரோமி த்வத்பூஜாம் ... 23
கல்யாணினம் ஸரஸ ... 75
கலாப்யாம் சூடாலங்க்ருத ... 1
காருண்யாம்ருத-வர்ஷிணம் ... 52

| | | |
|---|---|---|
| கிம் ப்ரூமஸ்-தவஸாஹஸம் | ... | 34 |
| க்ரீடார்த்தம் ஸ்ருஜஸி | ... | 66 |
| கபீரே காஸாரே விசதி | ... | 9 |
| கடோ வா ம்ருத்பிண்டோ | ... | 6 |
| கலந்தீ சம்போ த்வச்சரித | ... | 2 |
| காம்பீர்யம் பரிகாபதம் | ... | 42 |
| குஹாயாம் கேஹே வா | ... | 12 |
| ச்சந்தஃ சாகிசிகான்விதைஃ | ... | 45 |
| ஜ்வாலோக்ரஃ ஸகல | ... | 32 |
| ஜடதா பசுதா கலங்கிதா | ... | 69 |
| ஜனன-ம்ருதியுதானாம் | ... | 83 |
| ஜலதி-மதன-தக்ஷோ | ... | 85 |
| த்வத் பாதாம்புஜ-மர்ச்சயாமி | ... | 29 |
| த்ரயீவேத்யம் ஹ்ருத்யம் | ... | 3 |
| த்வமேகோ லோகானாம் | ... | 18 |
| தர்மோ மே சதுரங்க்ரிகஃ | ... | 39 |
| துராசா-பூயிஷ்டே | ... | 19 |
| தூரீக்ருதானி துரிதானி | ... | 92 |
| தீயந்த்ரேண வசோ | ... | 40 |
| தைர்யாங்குசேன நிப்ருதம் | ... | 96 |
| த்யானாஞ்ஜனேன ஸமவேக்ஷ்ய | ... | 72 |
| த்ருதிஸ்தம்பாதாராம் | ... | 21 |
| நரத்வம் தேவத்வம் | ... | 10 |
| நாலம் வா பரமோபகார | ... | 31 |
| நாலம் வா ஸக்ருதேவ | ... | 33 |
| நதிபிர்-நுதிபிர் | ... | 89 |
| நித்யம் யோகிமனஃ | ... | 79 |
| நித்யம் ஸ்வோதர | ... | 57 |
| நித்யானந்த ரஸாலயம் | ... | 48 |
| நித்யாய த்ரிகுணாத்மனே | ... | 56 |
| பாபோத்பாத-விமோசனாய | ... | 41 |
| பலாத்வா புண்யானாம் | ... | 17 |

ப்ரலோபாத்யைஃ ... 22
ப்ரபுஸ்த்வம் தீறுைம் ... 14
ப்ராக்புண்யாசல ... 38
ப்ரசரத்யபிதஃ ... 97
பூஜாத்ரவ்ய-ஸம்ருத்தயஃ ... 86
பஹுவித பரிதோஷ ... 67
பக்தோ பக்தி குணவ்ருதே ... 36
பாணத்வம் வ்ருஷபத்வம் ... 82
ப்ருங்கீச்சா நடனே ... 51
பூதாரதா-முதவஹத் ... 73
பக்திர் மஹேச பத ... 76
புத்திஃஸ்த்திரா பவிது ... 77
மனஸ்தே பாதாப்ஜே ... 7
மா கச்ச த்வமிதஃ ... 43
மார்க்காவர்த்தித பாதுகா ... 63
யதா புத்திஃ சுக்தௌ ... 8
யதா க்ருதாம் போநிதி ... 88
யோக-க்ஷேமதுரந்தரஸ்ய ... 35
ரோதஸ்தோய-ஹ்ருத ... 60
வசஸா சரிதம் ... 90
வடுர்வா கேஹீவா ... 11
வஸ்த்ரோத்தூதவிதௌ ... 30
வக்ஷஸ்தாடன-மந்தகஸ்ய ... 64
வக்ஷஸ்தாடன-சங்கயா ... 65
விரிஞ்சிர்-தீர்க்காயுர்ப்பவது ... 16
சம்புத்யானவஸந்தஸங்கினி ... 47
சிவதவ பரிசர்யா ... 84
ஸதுபசார-விதிஷ்வனு ... 78
ஸந்த்யா கர்மதினாத்யயோ ... 54
ஸந்த்யாரம்ப-விஜ்ரும்பிதம் ... 50
ஸதாமோஹாடவ்யாம் ... 20
ஸர்வாலங்காரயுக்தாம் ... 98

ஸஹஸ்ரம் வர்த்தந்தே ... 4
ஸா ரஸஞ தே நயனே ... 94
ஸாரூப்யம் தவ பூஜனே ... 28
ஸோமகலாதர-மௌலௌ ... 93
ஸ்தவைர் ப்ரஹ்மாதீனும் ... 25
ஸ்தோத்ரேணுலமஹம் ... 100
ஸ்ம்ருதௌ சாஸ்த்ரே ... 5
ஹம்ஸ: பத்மவனம் ... 59

